# பராசக்தி படிவம்



தொகுப்பாசிரியர் :

"செந்தில் துறவி"



சாஸ்தா பதிப்பகம்

Sastha Publications

50, கிழக்கு ரதவீதி,
திருச்செந்தூர்.



4/1, போயஸ் சாலை,
சென்னை-18.



# எமது வெளியீடுகள்

## ஷண்மத ஸ்தாபனம்
## (அறுவகை வழிபாடு)

1. *காணுபத்யம்* :–ஸ்ரீ ஆதிசங்கரர் செய்து அருளிய 'ஷண்மத ஸ்தாபனத்தில்' கணபதி வழிபாடு பற்றிய, விளக்கம், துதி, ஸஹஸ்ரநாமம் அடங்கிய நூல். விலை : 1—25
2. *கௌமாரம்* :–வெற்றிவேல் முருகனின் தோற்றத் தத்வம், தமிழ், வடமொழி தோத்திரங்கள், பூஜை, ஸஹஸ்ரநாமம் ஆகியவை. விலை : 1-25
3. *சாக்தம்* :–அகில உலகிற்கும் அன்னையான ஆதி பராசக்தியின் அரிய பெரிய அவதார வரலாறுகளும், லலிதா ஸஹஸ்ரநாமம், த்ரிசதி, ஸௌந்தர்ய லஹரி, அபிராமி அந்தாதி முதலிய துதிகளும் அடங்கிய நூல். விலை : 1-50
4. *சைவம்*:–சிவ பரஞ்சுடரின் தத்துவம் : சிந்தனைக்குரிய பல துதிகள், ஸஹஸ்ரநாமம் மற்றும் பல பயன் தரும் விவரமுடைய நூல். விலை : 1-25
5. *வைஷ்ணவம்* :–சரணுகதிப் பெருமையும், இராமானுஜ-மத்வரின் தத்வங்களும் எளிய முறையில் எழுதப்பட்டு, விஷ்ணு பரமான அநேக துதிகள் ஸஹஸ்ரநாமம் உள்ளடங்கிய நூல். விலை : 1-50
6. *சௌரம்* :–நவக்கிரகத்தின் நடு நாயகனுன ஆதி பகவன் ஆதவனைப் போற்றும் துதிகள், ஸஹஸ்ர நாமம், இன்னும் பல பொருளடங்கிய நூல். விலை : 1-25

## பக்தி பிரயாண கட்டுரைகள்

7. *ஐயப்பனோடு ஐம்பது நாள்* :—ஆனந்தவிகடனில், 'கோபு' அவர்கள் எழுதிய, சபரிமலை யாத்திரையிலே புதிய சகாப்தமாக எழுந்த அருமையான பிரயாணக் கட்டுரை: யாத்திரையை மேற்கொள்ளும் ஐயப்பன்மாருக்கு ஒரு வரப்ரஸாதம். விலை : 2-50
8. *முருகன் தலம் முப்பது* :—முத்தமிழ் தெய்வம் கோயில் கொண்டுள்ள எல்லா தலங்களையும் கண் முன்னே நிறுத்தும் அற்புத படைப்பு. விலை : 1-50
9. *வையத்தில் வைகுந்தம்* (திருமால்திருப்பதிகள்):— நூற்றெட்டு திருப்பதிகளில், சோழ மண்டலம், தொண்டை மண்டலம், அபிமான தலங்கள் பற்றி நகைச்சுவையும், பக்திரஸமும் ததும்பி ஆத்திக உலகத்திற்கு கிடைக்கும் சிறந்த பொக்கிஷம். விலை : 1-50
10. *ஐம்பெரு விழாக்கள்* :—தமிழகத்தின் தன்னிகரில்லா ஐம்பெரு விழாக்களான, ஸ்கந்த ஷஷ்டி, ஆருத்ரா தரிசனம், வைகுண்ட ஏகாதசி, கார்த்திகை தீபம், சித்திரைத் திருநாள் பற்றிய நுணுக்கமான, சுவையான நடைச் சித்திர நூல். விலை : 1-50
11. *கேரளம் கண்டேன் !* :—பரசுராம க்ஷேத்திர கோயில்களும், ஊர்களின் சிறப்பும், பிரயாணக் கட்டுரையாக, பக்திப்பெருமக்களுக்கு வழி காட்டுகிறது. விலை : 1-50
12. *பராசக்தி படிவம்* :—தேவியின் தலைசிறந்த உபாசகர்களான ஸ்ரீ சங்கரர், காவ்ய கண்ட கணபதி முனிவர், ஸ்ரீ பாஸ்கரராயர் ஆகிய மகான்கள் தேவியின் திருஉருவங்களை வர்ணிக்கும் இந்நூல் ஓர் நூதன படைப்பு. விலை : 1-50

முதற் பதிப்பு : ஏப்ரல் 1971
உரிமை :
சாஸ்தா பதிப்பகம்
(Sastha Publications)
MADRAS-53

விலை ரூ. 1-50

# நன்றி

வாசகர்கள் பெரிதும் விரும்பி வரவேற்கும் வகையில் எமது பக்தி நூல்கள் தங்குதடையின்றி வெளிவர உறுதுணையாக இருந்துவரும் இறைவன் செந்திலாதிபனையும், மீனாட்சி அன்னையையும் வணங்குகிறோம். வர்த்தக, தொழில் அன்பர்கள் உள்ளத்தில் இருந்து தர்ம சிந்தையை வளர்த்து அவர்களைத் தயக்கமின்றி எமது புனித முயற்சிக்குப் பேராதரவு தர வைக்கும் அத் தெய்வங்களின் பதமலரில் எங்கள் சிரமலர் வைக்கின்றோம்.

வாசகர்களின் கரமலரில் இந் நறுமலர் சமர்ப்பணமாகையில் ஒரு வேண்டுகோள் !

இத்தகைய தெய்வீக நூல்கள் தொடர்ந்து மலிவான விலைக்குத் தங்களுக்குக் கிடைக்கச் செய்துவரும் புண்ணியசாலிகளாகிய நமது வர்த்தக சமூகத்திற்குத் தாங்களும் அவ்வப்போது ஆதரவு அளித்து, மேலும் உவகையோடு பக்தி தொண்டாற்ற அவர்களை ஊக்குவிக்கும்படி கேட்டுக்கொள்கிறோம் !

செந்தில் துறவி

# 1. கணபதி கண்ட அன்னை

கண்ணை மூடிக்கொண்டு என்னை மறந்து, ஓடும் ரயிலின் சப்தத்தில் லயித்திருந்தேன். 'அம்மா! பசிக்குதே! தாயே பசிக்குதே!' என்று குரல் கொடுத்தான் சிறுவன் ஒருவன்: பசித்தால் அன்னைதானே பசிக்கு ஆதரவாக அமுதளிப்பாள்! அதனுல் தான் 'அம்மா'வை அழைத்தான் அச்சிறுவன். "பொம்மைகளை வைத்து விளையாட விட்டு விட்டு, தன் சமையல் முதலிய வீட்டு வேலைகளைக் கவனித்துக் கொண்டிருக்கும் தாய், பொம்மை விளையாட்டு விளையாடி சலித்துப் போன குழந்தை, 'அம்மா!' என்று வீறிட்டு அழும்போது ஓடோடி வருகிருள், ஆறுதல் அளிக்க: அது போலவே பராசக்தியானஜகன்மாதாவும் அவளுடைய குழந்தைகளான சமுதாயம் இம்மாய உலகில் பொம்மலாட்டம் விளையாடி களைத்து 'அம்மா!' என்று இதயத்தின் அடிப்பாகத்திலிருந்து எழுப்பும் ஒலிகேட்டு ஓடோடி வந்து அணைத்து ஆண்டு கொள்வாள்" என்று இராமகிருஷ்ண பரமஹம்ஸர் கூறுவாராம்: இப்படி அனைத்துயிர்க்கும் ஆதாரமாய் அன்னை விளங்குகிருள்!

'' அவனிதனிலே பிறந்து மதலையெனவே தவழ்ந்து
இளைஞோனாய்
அழகு பெறவே நடந்து
அமிர்த ரசமே மிகுந்த குதலை மொழியே பகன்று பதினாறாய் ''
அதிவிதம தாய் வளர்ந்து.''
என்கிறார் அருணகிரியார்.

மனிதன் பிறந்து, தவழ்ந்து, வளர்ந்து பிறகு லீலைகளில் மூழ்கி கடைசியில் தேய்வு அடைகிறான் : தன் சிறு புத்திக்கு எட்டிய அளவில் இறைவன் என்ற வரையறை இல்லா ஒன்றை பரம் பொருள் என்றும், சக்தி என்றும் கூறுகிறான் : சிவன், தான் செயலாற்றும்போது சக்தியாகவும் செயலற்ற நிலையில் 'சிவனே என்றும்' இருக்கிறான். இதனால்தான் ஒரு செயலும் நினைவும் இல்லாத நிலையைக் குறிக்க 'சிவனே என்று இரேன்' என்று கூறுவது இன்றும் வழக்கில் இருக்கிறது :

சக்தி வழிபாடு புரியும் ஒவ்வொருவரும் முக்கியத்துவம் அளிப்பது சிவனுக்கே என்பதை ஸ்ரீசக்ரத்தின் மத்தியில் குறுகிய, ஒன்றிய, ஒடுங்கிய நிலையான புள்ளிக்கே முதன்மைத் தானம் அளிப்பதிலிருந்து தெரிந்துகொள்ளலாம் : அங்கு சிவனுடன் சக்தி ஐக்கியமாகி அசைவற்ற விரிவற்ற தன் நிலையில் ஒடுங்கிய தானாக நிற்கிறாள். அதுதான் பிந்து ஸ்தானம் : அந்த சிவம் தன்விச்சையினால் செயலாற்றும் போது விரிவாகின்ற சக்தியை – அம்பாளை – அன்னை பராசக்தி என்று கூறுகிறோம். அந்த சக்தி காரணமாகவே உலகம் இயங்குகிறது. அந்த ஆதிபரா சக்தி சிவத்தினுடைய பிரதிபலிப்பே என்றும் ஞானிகள் கூறுவர்.

முன்னோர்களான மஹான்களும் ரிஷிகளும் " தவத்தின் தொடக்கம் தன்னை அறிவதே '' என்று கூறி வந்ததுடன், தன் சரீரத்துக்குள் மனத்தின் துணையினால், அறிவின் ஆற்றலால் ஆழ்ந்து ஆழ்ந்து ஆராய்ந்து 'சிவனே அடிமுடி எல்லாமாகிறது! லிங்கமே அதன் அடையாளம்' என்று

சிவயோக தத்வத்தை நிர்ணயம் செய்தனர். ஏனெனில் தன்னிடம் இல்லாத ஒன்றையோ அல்லது தனக்கு புரியாததையோ ஆராய்வது கடினம். நாம் ஆராய வேண்டுமானுல் ஒரு பொருள் தேவை. நமக்கு எளிதில் அருகில் நம்மோடு மிகத்தொடர்பு கொண்டது உடலைவிட வேறு இல்லை. அதனுல்தான் இதனைக்கொண்டே எல்லா தத்துவங்களையும் விளக்ினர். (ரேடியோ போன்ற கருவியாக இவ்வுடலை பயன்படுத்தினர்)

ஆடாமல் அசையாமல், தியான நிலையில் உட்கார்ந்துள்ள தவயோகியின் பின்புறத்தோற்றத்தையே லிங்கத்திருவுருவாக அமைத்தனர். மனிதன் தலை பாணமாக, உடல் ஆவிடையாக, மடித்துக்கொண்டிருக்கும் கால்கள் பீடமாக காட்சியளிக்கிறது. அவர்கள் சொல்லாமல் சொன்னது தவத்தின் இறுதி நிலை தியானத்தில் ஆழ்வதுதான். ஒடுங்கிய செயலற்ற நிலைதான் - உடல் ஒடுக்கி உள்ளம் ஒடுக்கி உன்னை உணர் – என்ற கட்டளை! இப்படியே உடலை மூன்று கண்டங்களாக (பகுதிகளாக) அக்னி கண்டம், சூர்ய கண்டம், ஸோம (சந்திர) கண்டம் என்றும் பிரித்தனர். தலைப்பகுதியை ஸோம (சந்திர) கண்ட மென்றும், மார்புப் பகுதியை சூர்ய கண்டமாகவும் வயிறுப் பகுதியை அக்னி கண்டமாகவும் வகுத்தனர். வயிற்றில் போடுவது எதுவும் பஸ்மீகரமாகிறது. 'ஜாடராக்னி' என்றே கூறுகிறோம் அப்படியே ஹ்ருதயப் பகுதியை பரமாத்மா ஸ்வருபமாகக் கூறினர். இறைவனை "ஸவித்ரு மண்டல மத்ய வர்த்தி நாராயண ஸ்ரஸிஞ்சாஸன: ஸந்நிவிஷ்ட;" என்று சூர்ய மண்டல மத்தியில் தியானிப்பது முறை.

கீதாசாரியனும்:

"ஈச்வர: ஸர்வ பூதானும். ஹ்ருத்தேசே அர்ஜுன திஷ்டதி" என்று இதயப் பகுதியில் இறைவன் வசிக்கிறுன் என்கிறுர்.

மூன்றுவதாக முக மண்டலம் சந்திரன்போல் என்று வர்ணிப்பதை அறிகிறோம்; எல்லா துதிகளிலும் யாவரும்

முகத்தை சந்திரனுக்கு ஒப்பாக கூறுவதைக் காண்கிறோம். " முக சந்த்ரகளங்காப மிருகந் நாபி விசேஷிகா " என்று அம்பாளுடைய முகத்தை சந்திரனுக்கு ஒப்பிட்டு ஸஹஸ்ர நாமம் கூறுகிறது. தேவியின் முகமண்டலம் 16 கலைகளுடன் நிரம்பிய பூரண சந்திரன் போல் உள்ளது. அதன்படியே 16 நித்யாளாக (ஷோடச நித்யாள்) வியாபித்து 16 வது (கலை) நித்யை அபேதமாக ஸ்ரீலலிதையுடன் விளங்குகிறதாக ஸ்ரீவித்யை வர்ணிக்கிறது. இந்தக் கருத்துடன்தான் பெரியோர்கள் மணப்பெண்ணை ஆசிர்வாதம் செய்யும் போது " பதினாறும் பெற்று பெருவாழ்வு வாழ் " என்று கூறுகின்றனர்: பூரணகலைகளுடன் இறைவி பிரகாசிப்பது போல் நீயும் ஜகன்மாதாவாகவே விளங்கு என்பதே இதன் பொருள். சந்திரனை மையமாகக் கொண்டே ஜோதிட சாஸ்திரமும் இயங்குகிறது.

புத்தியை ' மதி ' என்கிறோம் (மதி=சந்திரன்) புத்திதான் ஸ்தூல, ஸூஷ்ம, காரண சரீரம் மூன்றிலும் இயங்க முடியும். அதனால்தான் தலைவி எனப்படும் இயக்க காரணிக்கு' புத்தியை இடமாக அளித்தனர். அதனால்தான் 'சிரஸே பிரதானம் 'என்றும் கூறினர். " தலையின்றி வாலாடாது என்பர் ": தலையில்லாவிடில் உடல் அசைய முடியாது. சிவனும் சக்தியும் ஐக்யமாகி இருந்தாலேயே இயக்கம் சாத்தியமாகிறது என்பதை " சிவசக்த்யா யுக்தோயதி பவதி, நசே தேவம் தேவோ நகலு குசல: ஸ்பந்திதுமபி" என்றார் ஸ்ரீ ஆதி சங்கர ஸௌந்தர்ய லஹரியில்.

காவ்ய கண்ட கணபதி என்ற மஹான் சமீப காலத்தில் (ரமணருடைய வாழ்நாளின் போது வாழ்ந்தவர்) இருந்தார். அவர் தமது அழகான வாக்கினால் ஆயிரம் நாமத்தை அம்பாளுக்கு அள்ளிச் சொரிந்தார்.

ஒரு இடத்தில்:

" மூல ஸரோஜே வஹ்னி கலா, ஆர்த்தஸரோஜே சூர்ய கலா, சீர்ஷஸரோஜே ஸோம கலா " என்று அழகாகக் கூறுகிறார்.

ஆகவேதான் பிறந்து வளர்ந்து தேயும் மனிதன் இறைவிக்கு ஒரு படிவம் — நிலையை வகுத்து மகிழ்கிறான். எடுப்பார் கைப் பிள்ளை போல் — மனத்தின் இயல்புக்கு ஏற்ற புறத்தோற்றமே இறைவியாக, இறைவனாக, குழந்தையாக, பல்வேறு தோற்றங்களாக காணப்படுகிறது.

1. குல ஸஹஸ்ராரம் என்னும் மூலாதராத்துக்கும் கீழ் -பாலையாக (கன்னி) அங்க உபஅங்கதேவதைகளுடன் தேவியை தியானம் செய்கிறான்.

2. மூலாதராத்தில் (2) பஞ்சதசீரூபிணியாக விருப்பம் யாவும் நிறைந்த நிலையில் பூஜிக்கப்படுகிறது.

3. ஹ்ருதயத்தில் 'ச்யாமா' (பிரௌடை) என்ற நிலையில் இச் சக்தி வியாபிக்கின்றது (பிரதம புஷ்பிணீம் ருதிரபிந்து நீலாம்பராம் என்று ஸ்லோகம்)

4. ஆக்ஞாவில்—வாராஹீ—அஹங்கார தத்துவம்.

5. ஸஹஸ்ராரத்தில் மஹாஷோடசி மந்தர ரூபிணியாக அமைதியின் இலக்கணமாக பூரண நிறைவுற்ற நிலை.

6. த்வாதசாந்தத்தில்—பரா என்ற பராசக்தியாக வயது முதிர்ந்த சுமங்கிலியாக அம்பாளை உருவகப்படுத்துகின்றது மனம். பராசக்தியின் படிவமாக இப்படி பல்வேறு நிலைகள் விளங்குகிறது. இச்சக்தி பல்வேறு சந்தர்ப்பங்களில் பல்வேறு காரணத்துக்கு பல்வேறு தத்துவங்களுடன் (சாந்த, கோர, உக்ரக, வீர,) பிரகாசித்ததை பல நூல்கள் கூறுகின்றன ;

ஸத்வகுண ப்ராதான்யமாக—பஞ்சதசீ ரூபிணியாகவும் தமோகுணத்துக்கு தண்டனீ என்ற பெயருடன் பிரதம சைன்ய நாயகியாகவும், ரஜோ குணத்தில் மந்த்ரிணி என்ற பெயரில் ஆட்சி புரிபவளுடைய மந்திரியாகவும் இச்சக்தி விளங்குகிறாள். ஆணவமலம், விஷயப்பற்று முதலிய அரக்க குணங்களை ஸம்ஹரிக்க பாலா, மந்த்ரிணீ வாராஹீ, தண்டினீ முதலிய உள்முகமான மனோநிலையின் உதவியினால்

(ஆத்ம) சக்தி அடையப்படுகிறது. ஆத்மாவே இங்கு சக்தி (அம்பாள்) எனப்படுகிறது.

இவைகள் ஸத்வ, ரஜஸ், தமஸ் என்னும் முக்குண விபாக நிலைக்கு ஏற்ப அந்தந்த சக்தி பிரகாசிக்கும் ரூபத்தை பக்தன் உபாசிப்பதால் பரிபக்குவம் அடைந்து தன்னிறைவு கொள்ள காரணமாகிறது.

தன்னைத் தியானத் தீயில் இட்டு புடம் போட்டு மன அழுக்கு அகற்றி தூயராய் தனை உணர்ந்த பெரியோர்கள் அச்சக்தியை பல்வேறு ரூபங்களில் இமயம் முதல் குமரி வரை கோயில்களில் பிரதிஷ்டை செய்து அந்த சக்தி தேவியின் உடலில் ஒரு குறிப்பிட்ட அங்கம் அத்தலத்தில் மிகவும் பிரகாசிக்கும்படி செய்துள்ளனர்.

தவிர, நமது புராணம் கூறும் கதை ஒன்றும் பலருக்கும் தெரியும்.

தக்ஷன் யாகம் செய்தான்: ஈசனுக்குரிய ஆவிர்பாகம் அளிக்க மறுத்ததுமன்றி உமையவளைத் தன் மகள் என்று அலட்சியப் படுத்தியதன் விளைவாக ஹோம குண்டத்தில் 'உன் யாகம் அழியட்டும்' என்று சாபமிட்டு உடலைத் தியாகம் செய்துவிட்டாள் அன்னை! அவ்வுடலை பல பாகங்களாகச் சிதறுண்டு போகும்படி மஹாவிஷ்ணு சக்ராயுதத்தை ஏவினார். ஒவ்வொரு அங்கமும் விழுந்த இடம் ஒரு சக்தி பீடமாக திகழ்கிறது. அவை அறுபத்தி நான்கு என்றும் ஐம்பத்தி இரண்டு எனவும் பக்தர்களால் கணக்கிடப்படுகிறது. சக்தி வழிபாட்டை பிரதானமாகக் கொண்டிருக்கும் அடியாரின் மனம் இந்த சக்தி பீடங்களின் இருப்பிடங்களை சதா நினைவு படுத்திப் பார்த்துக் கொள்வதும், அவற்றைத் தமது வாழ் நாளில் ஒரு தடவையாவது போய்த் தரிசிக்க வேண்டுமென்று விழைவதும் சகஜம். இந்த நியாயமான ஆசைக்கு நானும் அடிமையாகி யிருந்தேனாதலால், ரயில் பெட்டியில் பிச்சைக் காரச் சிறுவன் கொடுத்த 'அம்மா' குரல் ஒலி என் இதயத் தினுள் வியாபித்திருந்த ஆசையைக் கிளறி விட்டது. அந்த

சமயம் நான் அம்பிகையின் 'ரேணுகா' அம்ச படிவத்தைத் தரிசிக்கப் போய்க் கொண்டிருந்தேனுதலால் சிறுவன் கூறியதும் நானும் 'தாயே ரக்ஷி' என்று வழக்கம்போல் மனதில் கூறிக் கொண்டேன். இந்த இதய ஒலியோடு போட்டி போட்டது 'காட்பாடி' என்ற போர்ட்டரின் குரல்.

காட்பாடியில் இறங்கி வேலூர் வழியாக சந்தவாசல் என்ற இடத்திற்கு அருகேயுள்ள படைவேடு என்ற ரேணுகா தேவியின் க்ஷேத்திரத்திற்குச் சென்றேன். படைவேடு என்ற குண்டல பட்டணம் மிகச் சிறந்த தனித்தலம்: தலை அறுபட்ட நிலையில் அங்கே அன்னை காட்சியளிக்கிருள்: எண் சாண் உடம்பிற்கு சிரஸே பிரதானம்: ஆகவே முதலில் தரிசிப்போம்.

"ய : குண்டலிபட்டண ராஜதானீ மாலோகதே காமபி
க்ருத்தமஸ்தாம்
நிஸ்ஸாரமானந்தகதாவிஹீனம் ஸம்சாரமேதம் ஸ
ஜஹாதி புத்தயா !"

இவ்வுலகில் குடும்ப பாரத்தில் சிக்கி அன்ருடம் உழலும் மனிதனுக்கு சந்தோஷம் என்பதே இல்லை. அப்படிப் பட்ட சம்சாரிகூட இந்த ரேணுகாம்பாளை தரிசனம் செய்தால் பந்தத்தையறுத்து, நிம்மதி பெறுவான் என்று காவ்யகண்ட முனிவர் வருணிக்கிருர். இந்த புண்ய பூமி நான்கு புறமும் சிறு குன்றுகளால் சூழப்பட்டுள்ளது. கண்ணை யும் கருத்தையும் கவரும் இத்தலம் அமைதியின் பிடியிலே ஆனந்தமாயிருக்கிறது ;

இத்தவச்சாலைக்கு அருகில் 'கமண்டலு நதி' என்ற அழகிய ஆறு சலசலத்து எக்காலமும் வற்ருமல் ஓடிக் கொண்டிருக்கிறது. நிம்மதியாக ஸ்நானம் செய்துவிட்டு வரலாம். நல்ல கிராமியச் சூழ்நிலை; பெரிய சிறிய வெளிப்பிராகாரங்கள் குளம், நந்தவனம் என்று கோயில் ஒருகாலத்தில் சிறப்பாக இருந்திருக்கும்: ஜமதக்னி மஹ

ரிஷியின் தவச்சாலையே இன்று 'படவேடு' எனத் திகழ்கிறது. மாமுனியின் தபோவலிமை பெரிது எனின்,அவரது தர்மபத்னி ரேணுகா தேவியினது கற்புத்திறன் அதை மிஞ்சியதாக இருந்தது.

ஒருநாள், ஆச்ரமத்தின் வாயிலுக்கு நீர் எடுத்து வரப் புறப்பட்டாள் ரேணுகாதேவி. ஆகாயத்தில் பறந்து சென்ற கந்தர்வனின் நிழல் கீழே தெரிந்தது. அழகான கந்தர்வன் யாரோ போகிறுன் என்று சற்று நின்று நிழலைக் கவனித்தாள். இதுதான் ரேணுகாதேவி செய்த குற்றம்! கற்புடை பெண்டிரானவர் வேறு ஆடவனின் நிழலைக்கூட நோக்கலாகாது. வெகுண்டார் முனிவர். கூப்பிட்டார் பிள்ளைகளை. தாயின் தலையைக் கொய்துவிடும்படி பணித்தார். எல்லோரும் மறுத்து முனிவரின் கோபத்தீயில் மாண்டு சாம்பலாயினர். கடைசி பிள்ளை பரசுராமர் வந்தார். 'பரசுராமா! உன் அன்னை பிழை செய்தாள். உன் தமையன்கள் என் ஆணையை மீறி மாண்டனர்: என் அருமைப் புதல்வா! நீயாவது என் கட்டளையை நிறைவேற்றுவாய்: உன் அன்னையின் தலையைக் கொய்துவிடு' என்றார். சற்றும் யோசியாமல் மழுவை எடுத்தார் பரசுராமர். துண்டாடினார் தாயின் தலைவேறு உடல் வேருக. அகமகிழ்ந்தார் முனிவர். என் செல்வமே! தாய் எனவும் பாராது என் கட்டளையை நிறைவேற்றி எனக்குப் பெருமை தந்தாய்.உனக்கு இரண்டு வரம் அளிக்கிறேன் கேள் என்றார். 'அப்பா! அப்படியானால் இறந்த என் அன்னை உயிர் பெறவும், தமையன்மார் புண்ணிய உலகு எய்தவும் அருள் புரியும்' என்றார் பரசுராமர்.

'அப்படியே அவள் பிழைப்பாள்' என்று கமண்டலத்தி லுள்ள நீரை வார்த்தார் முனிவர். அப்புனித நீர் நதியாகப் பெருகியது. அந்நதியின் கரையில் ரேணுகாதேவி தூய வளாகக் காட்சியளித்தாள். இத்தகைய ஒரு தெய்வீக நிகழ்ச்சி நடந்த தலம் தான் படைவேடு.

கோயிலுக்கு வெளியே பெரிய ஆஞ்சநேயர் இருக்கிறார்' உள்ளே பிராகாரங்களில் எல்லா மூர்த்திகளும் உள்ளன.

முக்கியமாக ஐயப்பன் (சாஸ்தாவின்) விக்ரஹம் அவரது மூலமந்திரத்துக்கு இணைந்தாற்போல், யானை வாகனத்தில் அழகும் மிடுக்கும் கொண்டு விளங்குவதை இன்றெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கலாம். சபரிகிரி வாசனைக் காணச் செல்லும் பக்தர்கள் இங்கு தரிசனம் செய்து விட்டால் சபரிகிரியில் இருப்பதாகவே நினைவு வந்துவிடும். வெளிப் பிராகாரம், மலை, அருவி இவைகள் எல்லாம் கேரளத்தின் சூழ்நிலையை நினைவுபடுத்துகின்றன.

அதுமட்டுமா! இராமபிரானுக்கு ஒரு கோயில், குன்றிலாடும் குமரனுக்கு ஒரு குன்றின்மேல் ஆலயம், அன்னை பராசக்தியோ ரேணுகாம்பாளாக மிகவும் கம்பீரமாக காட்சியளிக்கிறாள். கீழே சுயம்பு மூர்த்தியும் ஆதிசங்கரரால் பிரதிஷ்டை செய்யப்பட்டதாகக் கூறப்படும் பாணலிங்கமும் இன்றைக்கெல்லாம் பார்த்துக் கொண்டே இருக்கலாம். ஆடி மாத வெள்ளிக்கிழமைகளில் ஏராளமாக பக்தர்கள் கூடுவர். இங்கு.

பல வருடங்களுக்குமுன் ஜெர்மனி தேசத்தில் இருந்து ஒரு சாது வந்திருந்தார். அவர் இந்து சமயத்தைப் பின் பற்றுபவர். அவருக்கு சிறு வயதிலிருந்தே இந்தியாவிற்கு வர விருப்பம். இறுதியில் காஷாயத்தோடு வந்து சேர்ந்தார். நேராக இமயமலைக்குச் சென்று தவம் செய்ய விரும்பினார். ஆனால் சந்தர்ப்பவசத்தால் அவர் இலங்கைக்குச் சென்று விட்டு பிறகு குமரியிலிருந்து இமயத்திற்கு யாத்திரையாக செல்லும்படி நேர்ந்து விட்டது. அவர் அதைப் பற்றி பேசும் போதுநேராக நான் சிரசை பூஜிக்கச் சென்றேன். பாதத்தைத் தொழுது விட்டல்லவா செல்லவேண்டும் என்று அந்த சாது கூறியது வர வாசகர்களைக் குமரிமுனைக்கு அழைத்துச் செல் கிறேன். அங்கே அன்னையின் திருவடிகளைத் தொழுது விட்டு அவள் பாதங்களில் படைவேடு கிராமத்தில் கண்டதையும் கேட்டதையும் என்னோடு சேர்ந்து நீங்களும் சமர்ப்பணம் செய்துவிட்டு பாரதம் போற்றும் பராசக்தி படிவங்களை இயன்றவரை தரிசிக்கலாம் வாருங்கள்.

கன்யாகுமரி

அகிலாண்ட கோடியும் ஈன்ற பின்னரும் கன்னியாய் நின்று கடலை எல்லை தாண்டாமல் காப்பதுபோல் தோன்றும் அன்னை இங்கே 'மாயா ரூபிணியாக' மக்களுக்கு மங்களத்தையே செய்கிறாள். விண்ணுலகும் மண்ணுலகும் பூஜிக்கும் இந்தக் குமரியின் புன்னகையில் கருணை வழிந்தோடுகிறது. அப் புன்னகையின் சக்தி பாரத நாட்டின் நன்மைக்குக் காரண மாகிறது என்கிறார் காவ்ய கண்ட கணபதி:

"கன்யாகுமாரி ஸ்ுதராம் வதான்யா மான்யா ஸமநிதை:
ப்ரக்ருதேர னன்யா!

ஆக்ஷேபகம் ஸாகரபுத்புதானும் ஹாஸம் விததாம் ஜகத:
ஸுகார!

தமிழகத்தின் இருபதாம் நூற்ருண்டின் அதிசயமாகத் தோன்றிய கவி சுப்பிரமணிய பாரதியாரோ

நீலத்திரை கடல் ஒரத்திலே நின்று—நித்தம்
தவம் செய்யும் குமரி எல்லை'—

என்று உள்ளம் கனிந்து பாடுகிருர்.

இயற்கை அழகு நிரம்பிய இடம் குமரி. முக்கடல்கள் சேருமிடம். நம்பாரத நாட்டின் தென் கோடி முனை. இதுவே நம் பாரதத்தாயின் புனிதமான திருவடிகள். இந்த எழில்மிகு இடத்திலிருந்து காவல் புரிகிருள் கன்னித் தெய்வமான குமரி அன்னை. இந்து சனுதன தர்மத்தைக் காக்க கடும் தவம் மேற் கொண்டிருக்கிருளா?... தவம் புரிய அழகிய இடம் தான். ஒரு வேளை தன்னுடைய படைப்பின் சௌந்தர்யத்தை அவளே கண்மூடி ரசித்து மகிழ்கிருளோ?

பூவுலகில் சிருஷ்டிக்கப்பட்டுள்ள பொருள்களை தியானிப்பதன் மூலம் படிப்படியாக நாம் கடவுளை அடையலாம் என்று மில்டன் கூறியுள்ளார். அதேபோல் ஒருபடி மேலே சென்று "அழகான புத்திக்குப் புலப்படாத விஷயங்களைப் பற்றி அதாவது இறைமையும் கலையும் எங்கு இணைகின்றனவோ அவற்றைப்பற்றி கவி பாடுவேன்" என்று கஸின்ஸ்என்ற கவி கூறியுள்ளார். உண்மைதான். இறைவனே அழகு. அழகே இறைவன். இதை மனத்தில் கொண்டுதான் இந்தியாவின் தவப்புதல்வர் விவேகானந்தர் தியானத்தில் மூழ்க இந்தப் புனித இடத்தைத் தேர்ந்தெடுத்தாரோ! கன்னித்தாய்க்கு நேராக தனயன்.மோன நிலையில் உட்கார்ந்தாரோ! அஞ்ஞான இருளில் மூழ்கி இருக்கும் தன் நாட்டு மக்களைத் தட்டி எழுப்ப தனக்கு வழி காட்ட, அவர்களுக்கு புத்துயிர் ஊட்ட தாயின் அருள் கேட்டு மூன்று நாட்கள் அருகிலுள்ள அன்னையின் திருவடி உள்ள பாறையில்—இங்கு தானே தவம் இருந்தார்? குழந்தையின் குரலுக்கு செவி சாய்க்காமலா இருப்பாள் அன்னை? அதுவும் தன்னுடைய தலை சிறந்த பக்தனின் நிகரற்ற முதல் சீடனுயிற்றே.

அதுவும் வாழ்நாள் முழுவதும் அவள் அடியே கதி என்று கிடந்தவருக்கா இரங்கமாட்டாள்?

யா மாமா ஜன்ம வினயத்யதி துக்க மார்க்கை
ஆசம் சித்தேஹே ஸ்வகவிதை லலிதை: வியானஸஹ

யாமே ருத்திம் சுவிததே சததம தரண்யாம்
சாம்பா சர்வா மமகதி: சபலே பலேவா

ஜபோ ஜல்ப : சில்பம் ஸகலமபி முத்ராவிரசனு
கதி : ப்ராதக்ஷிண்ய க்ரமணம் அசனுத்யாஹுதி விதி:

ப்ரணும : ஸம்வேச : ஸுகமகிலமாத்மார்பண த்ருசா
ஸ்பர்யா பார்யாயஸ்தவ பவது யன்மே விலஸிதம்.

"தாயே நான் பேசுவதெல்லாம் உன்னுடைய மந்த்ரத்தை ஜபிப்பதாயும், கையால் செய்யும் சகல காரியங்களும் என்னுடைய பூஜாரூபமான முத்ரா விசேஷங்களாகவும், நடப்பதானது உன்னை ப்ரதக்ஷிணம் செய்வ

---

தாகவும், சாப்பிடுவது உனக்குத் தந்த ஹோமத்தின் ஆஹுதியாகவும், படுப்பது உன்னை நமஸ்கரிப்பதாகவும்— இம்மாதிரி நான் ப்ரம்ஹார்ப்பண புத்தியோடு மனோ வாக் காயங்களால் செய்யும் சகல காரியங்களும் உன்னுடைய ஆராதனை ரூபமாகவே இருக்கட்டும்.'' இப்படி சௌந்தர்ய லஹரியில் ஒரு ச்லோகம் கூறும் பொருளுக்கு ஒப்ப வாழ்ந் தவர் விவேகானந்தர்.

குமரிக் கரையிலே இயற்கை அழகை நன்கு காணலாம். சூரிய உதயத்தையும், சூரிய அஸ்தமனத்தையும், அதே போல் முழு நிலா நாட்களில் நிலா எழிலோடு எழும்பு வதையும் கதிரவன் மேற்குக் கடலில் விழுவதையும் பார்க்கலாம். இறங்கும் (விழும்) கதிரவன் ஆகாயத்தைக் கடந்துவிட்டான். மெதுவாக உன்னுடைய வலது கையைத் தொடுகிறான்......அவன் சக்தி முழுவதும் அவன் அழகில் அடங்கிக் கிடக்கிறது. தீக்கொழுந்தின் செந்நிறமானது ரோஜா மலர்களின் செந்நிறமாக மாறியுள்ளது. இப்படிப் பட்ட ஒரு இயற்கை வனப்பு மிகுந்த ஒரு முனை உலகில் வேறு எங்கும் இல்லை. பாரதத்தின் தனிச் சிறப்பு அது. அன்னையின் திருவடியாயிற்றே!

தேஜோத் வயஸ்ய யுகபத்வய ஸனேதயாப்யாம்
லோகே நியம்யத இவாத்ம தசாந்தரேஷு

(காளிதாஸன்)

எழும்பும் அம்புலியும் கடலில் விழும் கதிரவனும் எதைக் குறிக்கின்றன, வாழ்க்கைச் சக்கரத்தில் மாறி மாறி வரும் இன்ப துன்பங்களையல்லவா? இவற்றால் மனம் சஞ்சலப் படாமல் அன்னையின் திருவடியே கதி என்றிருந்தால் கடல் போல் பரந்த ஆழமான பேரின்பத்தை அடையலாம் என்று உலகிற்குபாடம் கற்பிக்கின்றதுகுமரித்தெய்வப் பிரதிஷ்டை! கதிரவனும் அம்புலியும் அவள் ஆணைக்கு உட்பட்டவைகளே என்று எடுத்துக் காட்டும் தலம் அது.

'காசியிலே கங்கையாடு, குமரியிலே கடலாடு' என்பது பழமொழி, தீராத பாபமெல்லாம் தீர்த்து வைக்கும் குமரித் தீர்த்தம் என்பர்—அதன் வரலாறு இதோ...

சோனிதபுரம் என்ற நாட்டை கசிய பிரஜாபதி என் பவன் ஆண்டு வந்தான். இவன் மக்களில் ஒருவன் வாணசுரன். ஓர் இரக்கமில்லாத அரக்கனாகிய அவன் வலிமையால் பிரம்மனிடம் அழியாத வரத்தைப் பெற்றான். ஆனால் கன்னியால் அழிவு வரக்கூடாது என்ற வரத்தைப் பெற மறந்துவிட்டான்!

வாணசுரனின் அட்டகாசத்தை தாங்க முடியாத நில மகள் பிரம்மனிடம் முறையிட்டாள். அவரோ சக்தியற்ற வராக திருமாலின் உதவிக்காக விரைந்தார். நிலமங்கையும் பசுவின் உருக்கொண்டு பிரம்மனைத் தொடர்ந்தாள். இருவரும் திருமாலை அடைந்த சமயத்தில் தேவர்களும், முனிவர்களும் வாணசுரனின் அட்டகாசத்தைத் திருமா லிடம் முறையிட்டுக் கொண்டிருந்தனர். அதற்குத் திருமால்

வாணுசுரனை வதைக்க சக்தியால் தான் முடியும் என்றும், அச்சக்தியைப் பெற சிறந்த ஒரு யாகம் செய்ய வேண்டு மென்றும் அதனுல் ஒளி வடிவத்தில் பெண்ணொருத்தி தோன்றுவாள் என்றும், அவளே சக்தியாய் இருப்பவள் என்றும் கூறினுர். அவ்வாறே ஹோமம் வளர்க்கப்பட்டது. பார் காக்கும் பராசக்தி தோன்றினுள். இவள் தான் நிலத் திரை கடலோரத்திலே நின்று நித்தம் தவம் செய்யும் குமரியன்னை.

குமரியம்பதி என்ற நிலப்பரப்பு குமரி என்ற பெண் ணொருத்தியால் ஆளப்பட்டதெனச் சிலர் கூறுகின்றனர். குமரி ஆண்டதால் குமரி நாடு என்ற பெயர் வந்ததாம். வேறு சிலர் சக்தி, புஸ்யகாசி என்ற கன்னியாகவே இருந்து தவமியற்றியதாகவும், அக்கன்னி தவமிருந்த இடத்தில் கோயில் கட்டப்பட்டதென்றும் கூறுவர். எனவே கன்னித் தெய்வம் தவமிருந்ததால் 'கன்னியாகுமரி' என வழங்க லாயிற்று.

குமரியன்னை தென் கடலின் ஓரத்தில் கீழ் கரையில் நின்று தவம் செய்தாள். மணப்பருவம் வந்ததும் அரன் அன்னையை மாலையிட நினைத்தார். அதற்கு தேவி பொழுது புலர் வதற்குள் நரம்பில்லா வெற்றிலை, காம்பில்லா மாங்காய் கணு விலாக் கரும்பு, கண்ணில்லாத் தேங்காய் இதழ் இல்லா புஷ்பம் கொண்டு வருமாறு சிவனை ஆணை யிட்டாள். விவாகம் செய்துகொள்ள அது ஒரு நிபந்தனை. அதன்படியே சுசீந்தை என்னும் திரு நகரில் எழுந்தருளியிருக் கும் பரமன், நிபந்தனைப்பொருள்களைச் சேகரித்துக் கொண்டு குமரியை நோக்கி விரைந்தார். ஆனுல் மணம் முடிந்தால் வாணுசுரனை வதம் செய்வதற்கான தேவியின் குறிக்கோள் தடைப்படுமே என்று நாரதர் சேவலாக உருவெடுத்து வழுக்கம்பாறை என்னுமிடத்தில் பொழுது புலர்வதற்குள் கூவினுர். சேவல் கூவவே, பரமனும் தேவியும் பொழுது புலர்ந்தது என்றெண்ணினர். இதனுல் விவாகம் தடைப் பட்டது. இந்நிகழ்ச்சி தினந்தோறும் நடக்கிறது என்றும்

தினந்தோறும் பொழுது புலர்ந்து விட்டது என்று அரன் திரும்பி விடுகிறுர் என்பதும் ஐதிகம்.

விவாகம் தடைப்பட்டதால் மனம் நொந்த தேவியும் திருமணத்திற்காகச் சேகரிக்கப்பட்டு வைத்திருந்த அரிசி பருப்பு போன்ற தானியங்களைக் கல்லாக மாறும்படி சபித்து, கோபத்தோடு கடலில் வீசி எறிந்து விட்டாள் என்று கூறுவர். கோயிலின் பிராகாரத்தில் இன்றும் கற்பாண்டங்களைக் காணலாம். கடலில் வீசி எறியப்பட்ட பொருள்களே கடற்கரையில் அரிசி போன்று மணலாகக் காணப்படுகின்றன என்றும் கூறுவர். மேலும் சிப்பி, சோழி, சங்கு, செம்மண் முதலியவற்றையும் காணலாம். ஆனல், பூகோள ரீதியாக இவ்வாறு முக்கடல்கள் சேருமிடங்களில், அங்குள்ள கடல் நீரோட்டங்களாலும், வீசும் காற்றினுலும் இப்படி வித விதமான மணல்களைக் காணலாம் என்றும் கூறுகின்றனர்.

விவாகம் தடைபட்டதே என்று தேவி சோகமயமானுள். அதனுல், கோயிலில் எழுந்தருளியிருக்கும் தேவி காலையில் சோகமாகவும், பகலில் சாதாரணமாகவும், மாலையில் பொலிவுடன் விளங்கும் குமரியாகவும் காணப்படுகிறுள்.

இனி வாணுசுரன் வதம் எவ்வாறு நிகழ்ந்தது என்று கவனிப்போம். வாணுசுரன் பல ஒற்றர்களை வைத்திருந்தான். அவர்களில் சிறந்தவர்கள் மூர்க்கனும், துன்முகனும் ஆவர். இவர்கள் தென்கடல் அருகே வந்த போது, அன்னையின் அழகில் மயங்கி அவளைத் தங்கள் மன்னன் வாணுசுரன் மணக்க வேண்டும் என்று விரும்பினர். அவர்கள் வாணுசுரனிடம் சென்று தேவியின் அழகை வருணித்தனர். அவனும் அதில் மயங்கி தேவியை அணுகி தன்னை மணஞ் செய்து கொள்ளுமாறு வற்புறுத்தினுன். தேவியோ தன்னைப் போரில் வென்று மணம் முடித்துக் கொள்ளுமாறு கூறினுள். போர் மூண்டது. வாணுசுரனுக்கு உதவ மூர்க்கன் விரைந்தான். அவனை வதைக்க பராசக்தி பத்ரகாளியை அனுப்பினுள். மூகாம்பிகை க்ஷேத்திரத்தில் மூர்க்கன் கொல்லப்பட்டான். தேவி வாண தீர்த்தம் என்னுமிடத்தில் வாணுசுரனை

வதைத்தாள். இவ்வாறு உலகைக் காப்பாற்றியதால் இவள் உலகரட்சகி என்ற பெயரும் பெற்ருள்.

குமரிக் கோயில், வங்கக் கடலும் தென் கடலும் முட்டு கின்ற முனைப்பிலே அமைந்துள்ளது. இந்த தேவப் பிரதிஷ்டை செய்தவர் பரசுராமர். பூஜை செய்து காண் பித்தவர் பரசுராமர். இவ்வூரை ஆண்ட பல அரசர்கள் இக்கோயிலைப் பிற்காலத்தில் புதுப்பித்துள்ளனர்.

கோயிலின் வடக்கே பாபநாசம் என்ற தீர்த்தம் அமைந் துள்ளது. அகல்யை அளித்த சாபம் நீங்க இங்கு இந்திரன் அன்னையின் அருள் பெற்ருன். மேலும் இங்குள்ள தீர்த்தங்களை வங்கக் கடல் தீர்த்தம், தென்கடல் தீர்த்தம். தாணு தீர்த்தம் என்று அழைப்பர். தாணு தீர்த்தம் என்பது காந்தி மண்டபத்தினருகே குடபால் கன்னிக் கடலருகே காட்சியளிக்கிறது. இத்தீர்த்தம் சுசீந்தை தாணுநாதப் பெருமானின் அபிஷேகத்தோடு கலப்பதால் இதற்கு இப் பெயர் வந்துள்ளது. ‘ தாணு தீர்த்தத்தில் வீணனும் வீடடை வான் ’ என்பது முதுமொழி. வைகாசித் திங்கள் புனர்பூச நட்சத்திரத்தில் தேவி குமரி அன்னை. விழாக்கோலம் கொள்வாள். இத்திருவிழா பத்து நாட்கள் நடைபெறும் இதைத் தவிர நவராத்திரித் திருவிழாவும் உண்டு.

கன்னியா குமரிக்குச் சென்று வருபவர்கள் எதைப் பற்றி பேசுகிருர்களோ இல்லையோ, கண்டிப்பாக அந்த அன்னையின் மூக்கணியைப் பற்றிக் குறிப்பிடத் தவற மாட்டார்கள். அந்த மூக்கணி அன்னையை அடைந்த விதமே ஒரு சுவையான வரலாறு.

கன்னியாகுமரிக்கு அருகில் அகஸ்தீசுவரம் என்ற ஒரு ஊரில் வீரமார்த்தாண்டன் என்பவர் இருந்தார். அவர் தனது குலத் தொழிலான பதனீர் இறக்குதலை மேற் கொண்டிருந்தார். ஒரு நாள் பனை மரத்தின் உச்சியில் இருந்தபோது, நாகப் பாம்பொன்று நாகரத்தினத்தை அதன் முகட்டில் உமிழ்வதைக்கண்டார். உடனே மெதுவாகக் கீழே

இறங்கி அந்த ரத்தினத்தின்மேல் சிறிது சாணம் வைத்து மூடினார். பிறகு மீண்டும் மரத்தில் ஏறிக்கொண்டார். இரத்தினத்தை இழந்த நாகம் ஆவேசத்துடன் அலைந்தது. அதன் கண்ணில் மார்த்தாண்டன் படவே, அவர்மேல் அது சீறியது. ஆனால் அதை அவர் வெட்டி வீழ்த்தினார். பிறகு இரத்தினத்தை எடுத்துக்கொண்டு அரசனிடம் அன்புக் காணிக்கையாக அளித்தார், அந்த அரசனே சிறந்த பக்தன். ஆகையால் அவன் அந்த நாகரத்தினத்தை அன்னையின் மூக்கணியாக ஒளிரச் செய்தான். இந்த மூக்கணியின் ஒளி வெகுதூரம் வரை தெரியும். ஒரு நாள் கப்பலோட்டி ஒருவன் இவ்வொளியை கலங்கரை விளக்கம் என எண்ணி அப்பக்கம் கப்பலைத் திருப்பினான். கப்லோ கரைபக்கமுள்ள பாறையில் மோதுண்டு சிதறிச் சின்னாபின்னப்பட்டது. அதற்குப் பிறகு ஆலய அதிகாரிகள் ஆலயத்தின் கிழ்வாசலை அடைத்து விட்டார்கள். ஆனால் வருடந்தோறும் அன்னையை நீராட்டு வதற்காக இவ்வாசல் ஐந்து முறைகள் திறக்கப்படும். என்பர்.

இங்குள்ள கடல்களின் புனித நீர் எக் கப்பலையும் கரை களுக்கு அண்ட விடுவதில்லை. 1937 ஜனவரி 15—ம் தேதி இங்கு வந்தபோது மகாத்மா காந்தி இதைப் பற்றி அழகாக பொருத்தமாகக் குறிப்பிட்டார். "எங்கு முக்கடல்களும் சந்தித்து அவற்றிற்கு நிகரான காட்சியை உலகில் வேறு எங்கும் இல்லாமல் செய்கின்றனவோ அக்கடல்களுக்கு முன் னால் குமரி முனையில் இதை எழுதுகிறேன். ஏனெனில், இது எக்கப்பலும் வந்து தங்கும் துறைமுகம் அல்ல. இங்குள்ள தேவியைப் போல் இங்குள்ள நீரும் கன்னியாகவே உள்ளது."

கடற்கரையிலிருந்து 1600அடி தூரத்தில் கடல்கள் சூழ 534அடி நீளமும் 429அடி அகலமும் உள்ள ஒரு புனிதப் பாறை—தெய்வீகம் நிரம்பிய பாறை உள்ளது. அதை விவேகானந்தர் பாறை என்றும் ஸ்ரீ பாத பாறை என்றும் கூறுவர். அங்கு தான் குமரி அன்னை ஒற்றைக் காலில் கடுந்தவம் இயற்றினளாம். அவ்விடத்தில் அன்னையின் திருப் பாதம் படிந்திருக்கிறது. அப்பாறையில் பழைய கோவிலின் அழிவுச் சின்னங்கள் உள்ளன. கடல்நீர் கொந்தளிப்பால்

அப்பாறை தீவாக மாறி ஆலயமும் இப்பொழுதுள்ள இடத்திற்கு மாற்றப்பட்டது என்று சிலர் அபிப்பிராயம் கூறுகின்றனர். சமீபத்தில் ஒரு புது அபிப்பிராயமும் கொடுக்கப்பட்டது. கி.மு. 3-ஆம் நூற்றாண்டில் இலங்கைக்குச் சென்று கொண்டிருந்த ஜைன பிக்குகள் அப்பொழுது நிலத்தின் ஒருபகுதியாக இருந்த இப்பாறையின் மீது ஸ்ரீபாத சந்நிதியை ஏற்படுத்தினராம். எது எப்படியாகிலும் இப்பாறையின் புனிதத்தன்மை விவேகானந்தரின் வருகையால்தான் உலகிற்குத் தெரிய வந்தது. இங்கு தான் போதி மரத்தடியின் கீழ் புத்தர் ஞானோதயம் பெற்றதுபோல் உள்ளம் நாடிய உள்ளொளிப்பெருக்கை அம் மகான் பெற்றார்.

அக்டோபர் 25—1892 மாலையில் கரையிலிருந்து 1600 அடி தூரத்தை நீந்தியே அவர் பாறையை அடைந்தார்!

---

கையில் பணம் கிடையாது. ஆனால் உள்ளத்திலோ அசைக்க முடியாத உறுதி, நம்பிக்கை! இந்தியாவின் ஆத்மீக எதிர் காலத்திற்காக தவமிருக்கச் சென்றார். அவர் நிலையை எண்ணிப் பார்க்கவேண்டும். தன்னந்தனி! தாயை இழந்த சேய்போல் வழி காட்டிய பரமஹம்சர் இல்லை! ஆனால் தனயனைவிட்டு விடுவாளா கன்னி அன்னை...?மூன்று நாட்கள் ஆழ்ந்த தியானத்தில் அமர்ந்தார். அவர் தேர்ந்தெடுத்த இடத்தைப் பாருங்கள். முக்கடல்கள் சூழ்ந்த இடம். இதுவே அவர் கலை உள்ளத்திற்குச் சான்று. பயங்கர இயற்கையையும் நேசித்து அதில் இன்பம் எய்தியவர் விவேகானந்தர்.

'புகழப்படும் உன்னுடைய கடல்கள் இதமான தாளத் தோடு கடுமையாக கர்ஜிக்காமல் அமைதியாக முணுமுணுக் கின்றன' என்று ஆங்கில கவி பைரன் கூறியது போல், ஆழமான கடலுக்கு அருகில் துணை உள்ளது. அதன் பேரிரைச்சலில் கீதம் உள்ளது. தெய்வத்தின் இனிய கீதத் தையும் சேர்க்கையையும் கண்டாரோ! இல்லை. 'நீ சிறந்த கண்ணாடி! உன்னில் இறைவனுடைய உருவம் பிரதி பலிக்கிறது' என்று தெய்வத்தின் சாயலை அங்கே கண்டாரோ, தெரியவில்லை.

இப்பாறையின் மீது அவருக்கு ஏற்பட்ட ஞானோதயம், ஓர் எளிய துறவியான அவரை ஒரு பெரிய சீர்திருத்தவாதி யாக, நாட்டின் சிற்பியாக, மாற்றி அமைத்தது. பத்தே மாதங்களில் சிகாகோவில் நடந்த சர்வ சமய மாநாட்டில் இந்து மதத்தின் சிறப்பை இந்தியப் பண்பாட்டின் சிறப்பை எடுத்துரைத்து சங்கநாதம் முழங்கினார். வியக்கத்தக்க அளவில் பல அரிய சாதனைகளைச் செய்து உலகம் போற்றும் விவேகானந்தர் ஆனார்.

இப்பொழுது பாறையின்மீது விவேகானந்தருக்காக ஒரு நினைவுச் சின்னம் எழுப்பப்பட்டுள்ளது. 1893-ஆம் ஆண்டு செப்டம்பர் 2-ம் தேதி அன்று சிகாகோவில் சர்வ சமய நாட்டில் விவேகானந்தர் பாரதத்தின் சிறப்பு விளங்கப் பேசினார். அதற்குப் பிறகு 77 ஆண்டுகள் கழித்து அதே

தேதியில் இந்த நினைவுச் சின்னம் எழுப்பப்பட்டுள்ளது. நினைவு மண்டபத்தின் மத்தியில் விவேகானந்தரின் உருவச்சிலை கம்பீரமாக நிற்கிறது. இந்த மண்டபத்திற்குச் சற்றுத் தள்ளி அன்னை குமரி பாதம் படிந்துள்ள இடத்தில் ஒரு அழகிய கோயில் காட்சி தருகிறது. விவேகானந்தர் சிலையின் பார்வை இந்த ஸ்ரீ பாதத்தின்மேல் விழுமாறு கட்டிடத்தை அமைத்திருக்கிறார்கள். இவ்வாறு பாரதம் தனது நன்றியை அந்த மாமுனிவருக்குச் செலுத்திக் கொண்டிருக்கிறது.

விவேகானந்தர் கண்ட குமரிமுனைக்கும் இப்பொழுதுள்ள குமரிமுனைக்கும் பல வித்தியாசங்கள் உள்ளன. பல

---

வருடங்களுக்கு முன் இருந்த அமைதியான சூழ்நிலை இல்லை. பல உல்லாச பயணிகள் வருகின்றனர். வரும் பிரயாணிகள் அவ்விடத்தை ஒரு பொழுது போக்கு இடமாகக் கருதாமல் 'நாம் ஒரு புனித யாத்திரையாக வந்துள்ளோம்' என்ற நினைவுடன் உள்ளத்தை, சிந்தனையை, சிதறவிடாமல் குமரி அன்னையின் பால் நிறுத்தி அமைதியான சூழ்நிலையை தானும் சுவைத்து பிறரையும் சுவைக்க வைத்தால் நலமில்லையா !

பாபநாசம்

தாமிரபரணி நதி தீரத்தின் அணைப்பிலும், அருவியின் ஓங்கார ஒலியிலும் உலகையே ஆள்பவளாக உலகம்மை விளங்கி நிற்கிறாள். பொங்கு நுரையுடன் வெளேல் என்று ஓடும் நதியின் ஓட்டத்தின் அழகும், இயற்கையின் அரவணைப்பும் இறையுணர்வை வளர்க்கும் சூழ்நிலையும் எவரையும் மெய்மறக்கச் செய்யும்.

உலகம்மை பாடல் பித்து பிடித்த நாயகி. இப்பதியில் வெகு காலத்துக்கு முன் நமசிவாயர்' என்ற சிறந்த பக்தர் ஒருவர் வசித்து வந்தார், அனுதினமும் அன்னையை வந்து வணங்குவர். ஆலயத்தைச் சுற்றிக் கொண்டே இனிய தமிழால் பாடிப் பரவுவார். ஆயினும், பக்தியின் ஆழம், பணிவின் சிகரமாக அவரை மாற்றியிருந்த படியால்...

" பேயோ எனக்குழறும் பேதாய் ! உனக்கு மொரு
வாயோ ? என்றென்னையிகழ்வாயோ ? மகிழ்வாயோ ?
தூயோர் தொழுமுலகே ! சொல்வதெலாம் சொல்வேன்
காயோ பழமோ ? நீ கட்டளை செய் காரியமே "

என்று பணிவுடன் அடக்கமாக அன்னையின் மீதே பாரம் அனைத்தையும் போடுவார்.

தினம் இப்படியே மாலையில் ஆலயம் சென்று பாடிப் பரவி வெளிவருவார். கோபுர வாயிலில் நின்று வெற்றிலையைச் சுவைத்தபடியே நடப்பார். மனம் அன்னையின் அருளைச் சுவைக்கும். நாவும் அவள் புகழ்பாடிய படியே இருக்கும். இப்படியே இல்லம் அடைவார்.

ஒரு நாள் இப்படியே:

" பொன்னை நொந்து கொண்டாலப் பொன் வருமோ
முன்னை வினைதன்னை நொந்து கொண்டால் அத்தன்மை
நன்மை ஆயிடுமோ ?
என்னை நொந்து கொள்கிலனல் இன்பமின்றி துன்பம்வரின்
உன்னை நொந்து கொள்வேன் உலகுடைய மாதாவே

என்று பாடிக் கொண்டே எச்சலைத் துப்பிய வண்ணம் நடந்தார். ஆளரவம் பின்புறம் கேட்டதால் யாரோ வருகிறார் போல் தோன்றி திரும்பிப் பார்த்தார். ஆனல் அந்த உணர்ச்சி மனத்தின் அசைவுதான் எனக்கண்டு 'யாரும் இல்லை' என்று மனச்சாந்தி பெற்று வீடடைந்தார்.

---

மறுநாள் காலை உலகம்மை கோயிலின் அர்ச்சகருக்கு அதிர்ச்சி காத்திருந்தது. ஆலயத்தைத் திறந்தவர் திடுக்கிட்டார். அன்னையின் ஆடை முழுவதும் தாம்பூல எச்சில்.

'ஆ!' என்று அலறி, தரிசனத்திற்கு வந்திருந்த மதுரை சிற்றரசனிடம் முறையிட்டார். துணுக்குற்ற அரசன் மனம் புழுங்கினான். 'நம் ஆட்சியிலும் இப்படி ஒரு அநியாயமா?' என்று கண்ணயராது வருந்தி குறுக்கும் நெடுக்குமாக தயாபரியான தற்பரையை நினைந்த வண்ணம் காவல் புரிந்தபடி நடந்து கொண்டிருந்தான். ஆனால், கடைசி யாமத்தில் தன்னையும் மீறிக் கண்ணயர்ந்தான் அரசன்.

விமலை—உலகம்மை கனவில் காட்சியளித்தாள்!

"என்னைச் சேவிக்கும் பக்தர்களில் நமசிவாயம் சிறந்தவன். அவனுடைய பாடல்களில் ஆர்வம் கொண்டு அவனைப் பின்தொடர்ந்து சென்றேன். அவனறியாததலால் எச்சிலைத் துப்பிய வண்ணம் நடந்தான். அவன் பாடல்களை நீயும் போற்று" என்று கூறினாள்.

விழித்தெழுந்த அரசன் வியந்து தேவியைப் போற்றினான். 'பாபநாசம் நமசிவாயரை அழைத்து வாருங்கள்' என்றான். ஏவலர்கள் அவரைக் கொணர்ந்து நிறுத்தினர். "நேற்றிரவு உலகம்மையின் உடையில் தாம்பூல எச்சிலைத் துப்பியது நீர் தான் எனத் தெரிகிறது. என்ன சொல்கிறீர்?" என்று வெகுண்டவனாக நடித்தான் அரசன். "நானா! அம்மைக்கு அபசாரமான இதை நானா செய்தேன்? தேவீ! இதுவும் உன் திருவிளையாடல்!" என்று வருந்தினார். அரசனோ காவலரைக் கொண்டு ஒரு பூச்செண்டை கொண்டு வரச் செய்து, அதை உலகம்மையின் கரத்தில் அமைத்து தங்க நூலால் கட்டுவித்தான்.

"இத்தவறை நீர் செய்யவில்லை என்று மெய்யாக்க தேவியின் மேல் பாடும். நீர் பாடப்பாட ஒவ்வொரு நூலாக அறுபட்டு உம்முடைய கரத்தில் பூச்செண்டு வந்து விழ வேண்டும். ஊம் பாடும்!" என்று உசுப்பினான் மன்னன்.

"என்றைக்கும் நீ துணை அம்மா! என் ஆவி இறந்திடும்
அன்றைக்கும் ஓடி வந்து அஞ்சலென்பாய்"

என்று இறைவியை வணங்கிப் பாட ஆரம்பித்தார் நமசிவாயர்.

"பொழுது கழிந்தது வீணே: எனக்கென்ன
புத்தி: உன்னைத்
தொழுது பணிந்து துதித்திலனே
இதைச் சொல்லிச் சொல்லி
அழுது புலம்பில் விடுமோ யமன்?
இனியாயினும் என்
பழுது களைந்து புரப்பாய் உலகம்
படைப்பவளே"

---

என்று பாடல்களை அவர் அள்ளிச் சொரிய சொரிய பூச்செண்டோடு இணைக்கப்பட்டிருந்த தங்கநார் ஒவ்வொரு பாடலுக்கும் ஒவ்வொன்ருக அறுந்து தெரித்தது. கடைசியில் பூச்செண்டும் அவர் கரத்தில் வந்து விழுந்தது. பார்த்திபனும் பாதத்தே விழுந்து போற்றினுன்.

பின்ஞெரு சமயம் இந்த பக்தர் வயிற்றுவலியால் வருந்தியபோது உயிர்விடத் துணிந்தவராய்,

துடைத்தாயில்லை வன் கலிநோயை ; என்னைத்
தொழும்பு செய்யப்
படைத்தாயில்லை வந்து பார்த்தாயில்லை உள்ளப்
பள்ளத்தில விட்டு
அடைத்தாயில்லை உன் கருணைப் பிரவாகத்தை
ஐவரை விட்டு
உடைத்தாய் ; உலகம்ம : நன்ருயில்லைஎன்
உயிர் பயிரே'

என்று பாடிய வண்ணம் ஓடி, அலைவீசும் அருவி நீரில் இறங்கினுர்.

அசரீரியாக அன்னை 'பிறப்புக்கு வித்தாகும் நின் செயலை விடு. பிறவிப் பிணியைவிட இது பெரிதல்ல ! அதனுல் பொறுமையோடு அனுபவி' என்று தடுத்தாள்.

பிறிதொரு நாள் உலக நாயகியே வந்து உணவளித்து மறைந்தாள் : வயிற்றுவலி அகன்று இறுதியில் உலகம்மையின் திருவடி நிழலில் இரண்டறக் கலந்தார்.

இந்த உலகம்மை ஜகதம்பிகையின் திருக்கோயில் மிகப் புராதனமானது. பாபனுசம் அருவியில் ஸ்நானம் செய்து அருள்பாலிக்கும் உலகம்மையைத் தரிசித்து தேவப்ரஸாதம் பெற்றவர்கள் பாக்கியசாலிகள்.

மாலே நேரம் குழந்தைகள் கூடி விளேயாடுகின்றன. அதில் கட்சி பிரிந்து விளேயாடும் கூட்டம், ஒளிந்து விளேயாடும் ஆட்டம், ஒவ்வொருவராக தள்ளி 'நீதான் பிடிக்கணும்' என்று சாட்,பூட், த்ரீ போடுகிருன் ஒருபையன்' 'டேய் ! நீ ஒன், டு, த்ரி எண்ணி கண்ணே பொத்து. நாங்க ளெல்லாம் ஒளிந்து கொள்கிருேம்' என்கிருன் இன்ெனுருவன். விளேயாட்டிலிருந்து எதுவும் மூன்ருகவே உள்ளது என்று புலனுகிறது. மூன்றின் மகத்துவத்தைக் குறித்து ஒரு தனிக் கட்டுரையே எழுதலாம். வீபூதி மூன்று கோடுகளாகப் போடுகிருர்கள். பார்ப்பவன், பார்க்கும் வஸ்து, அறிவு இந்த மூன்றையும் 'த்ரிபுடி' என்கிருர்கள். ஸத்வ குணம், ரஜோ குணம், தமோ குணம் என்று குணங்களே மூன்ருகப் பிரிக்கிருர்கள் ! உட்கரணங்கள் (அந்தக்காரணம்) மனம், புத்தி, சித்தம் என்று மூன்ருகக் கூறப்படுகிறது. ஸோம,

---

சூர்ய, அக்னி கண்டமாக மூன்று பகுதியாக உடல் பிரிக்கப்படுகிறது. ச்ருஷ்டி, ஸ்திதி, லயம், (உற்பத்தி, இருப்பு, அழிவு) மூன்றே. இடை, பிங்கலை சுழுமுனை என நாடிகள் மூன்று எனக் காண்கிறோம். ப்ரம்மா, விஷ்ணு, ருத்ரன் என முத்தெய்வம்! மா, பலா, வாழை, முக்கனிகள். இவ்வாறு அநேகமநேகம் உதாரணங்கள்.

இப்படியே அம்பாளின் ஸ்ரீசக்ர வடிவில், மூன்று ரேகைகள், மூன்று வலயம், என்றும் நாற்பத்தி மூன்று முக்கோணங்கள் பீஜ மந்திரமும் ஐம், க்லீம், ஸௌ: என (த்ரயக்ஷரி) மூன்றே.

காளிகா புராணம், இதையே:

த்ரிகோணம் மண்டலம் சாஸ்யா பூபுரம்ச த்ரிரேகம்
மந்த் ரோபி த்ரயக்ஷர: ப்ரோக்த ததா ரூபத்ரயம் புந:
த்ரிவிதா குண்டலீ சக்தி: த்ரிதேவாநாம் சஸ்ருஷ்ட்யே
ஸர்வம் த்ரயம் த்ரயம் யிஸ்மாத் தஸ்மாத் த்ரிபுரா மதா:

என்று கூறுகிறது.

இங்ஙனம் மூவர் என திகழும் ப்ரும்ம, விஷ்ணு, ருத்ராதிகளையே கர்ப்பத்தில் பயந்ததாகக்கூறும்தலம்தான் குற்றாலம்! இதற்குத் த்ரிகூடம், த்ரிகூடமலை என்றும் பெயருண்டு. மா, பலா, வாழை ஆகிய முக்கனிகளும் சிறப்பாக இங்கு பலன் தருகின்றன. இந்த த்ரிகூட பர்வதத்தில் உள்ள பராம்பிகை யோகினியாகத் திகழ்வதால் 'யோக பீடம்' என்றும், அனைத்துயிர்க்கும் அன்னையே மூலகாரணமானதால் 'தரணிபீடம்' என்றும் கூறப்படுகிறது. இக்கோயிலின் சந்நதியில் அரி, அயன், மால் மூவரையும் தொட்டிலிலிட்டு ஆடிக் கொண்டிருக்கிறாள் தேவி பராசக்தி.

கொட்டும் அருவியின் ஸ்நானம், இனிக்கும் குறும்பலா நாதன் தரிசனம், குளிர்விக்கும் அன்னையின் த்யானம் மூன்றும் உடல், உள்ளம், இவ்விரண்டுக்கும் ஆனந்தம் தரும் ஒன்றாய் அமைந்துள்ளது.

குழல் வாய் மொழி என்னும் திருநாமத்துடன் அன்னை நின்ற திருக்கோலமாக காட்சியளிக்கிறாள். குற்றாலத்திலுறை அன்னையின் நாதன் குற்றால நாதனின் பெருமையோ அளவிட முடியாது. 'ஆவியுள்ளபோதே போ' என்கிறார் பட்டினத்தார்.

> " காலன் வருமுன்னே கண்பஞ்சடை முன்னே
> பாலுண் கடைவாய்படு முன்னே—மேல் வீழ்ந்து
> உற்றார் அழுமுன்னே ஊரார் சுடுமுன்னே
> குற்றாலத்தானையே கூறு."

மணிவாசகப்பெருமான் "குற்றாலத்துணர்ந்துறையும் கூத்தா உன் குரை கழற்கே கற்றாவின் மனம் போலக் கசிந்துரு வேண்டுவனே!" என்கிறார்.

பெரியகோயில் : குறும்பலா மரத்தடியில் எழுந்தருளிய இறைவன் பிறவிப்பிணியையே நீக்குகிறானும். அருவியின் ஜலம் கோயிலுள்ளேயே ஓடிவருகிறது அழகாக. பெருமாள்

---

கோயிலாக இருந்ததை அகஸ்தியர் இலஞ்சி முருகன் அருளால் “ குறுகக்குறுக குற்ருல” எனக் கூறி பெருமானைப் பெருமாஞக ஆக்கியதாகப் புராணம் கூறுகிறது.

ஆடி மாதத்தில் இந்தக் குழல் வாய் மொழியின் சந்நிதி கோலாகலமாயிருக்கும். மாவிளக்குப் போடும் குடும்பங்கள் காலை ஐந்து மணியிலிருந்தே கூடிவிடுவார்கள். தவிர லட்ச தீப கைங்கர்யமும் விசேஷமாகச் செய்யப்படுகிறது. அன்னைக்கும் அப்பனுக்கும் தைல ஸ்நானம் தினந்தோறும் நடைபெறுகிறது.இத்தைலத்தை சேகரித்து வைத்து பிரசாத மாக வழங்குகிருர்கள். அன்றலர்ந்த நறுமணமுள்ள புஷ்பங் களால் அன்னையின் திருவுருவை அலங்கரித்துப் பார்க்கும் போது, நம் வீட்டுக் கன்னி கழியாச் சிறுமிகள் பட்டுப் பாவாடை சலசலக்க ஓடிவந்து நம்மடிமீது விழுந்து விளையாடு வது போல் ஓர் உணர்ச்சி ஏற்படத் தவருது. அந்தக் குழல் வாயின் மொழி இன்பத்தைக் கேட்டு உணரும் பாக்கியம் நமக்கு இல்லாவிடினும் ஊகித்து உணரும் சக்தியை அன்னை யின் எழிலுருவம் நமக்கு அருளி உதவுகிறது. ஆடலரச னுடைய சித்ரசபை குற்ருலம். அவனுடைய கனக சபையில் அடக்க ஒடுக்கமாக நின்று அவனுடைய திவ்ய நடனக் காட்சியைக் கண்டு அனுபவித்து, தாம் இருக்கும் இடத்தைச் சிறிதளவேனும் வெளிக்காட்டாமல் செல்வி சிவகாமியாகச்சிற்றம்பலத்தில் கோயில்கொண்டெழுந்தருளி யிருக்கும் பராசக்தி இங்கே ஆடும் ஆடவனுக்குப் பெரும் பான்மையான இடத்தை மட்டும் ஒதுக்கிக் கொடுத்திருக் கிருளே தவிர, பக்தி உள்ளங்களின் மனம் பூராவும் அவளே வியாபித்து நிற்கிருள். குடும்பத்தோடு செல்லும் பக்தனுக்கு இந்த தேவி சந்நிதியை அடைந்ததுமே தன்னையு மறியாமல் தனது பக்கத்தில் நிற்கும் ஏழெட்டு வயதுள்ள பெண் குழந்தையை வாரித் தூக்கி, ‘அதோ பாரு அம்மா! உன்னைப் போலவே ஒரு குழல் வாய் மொழி.ஆடாமல் அசங் காமல் நிற்கிறது...பார்...பார்த்துக் கன்னத்தில் போட்டுக் கொள்...” என்று கூறிய வண்ணம் அந்தச் சிறுமியின் குழி விழும் கன்னங்களில் அன்போடு தட்டித் தடவத் தோன்றும்.

மாடம் ஓங்கிய மதுரை

'உணர்வரிய மெஞ்ஞானம் ஓங்கு பெரும் பீடமாகத் திகழ்வது 'த்வாதசாந்தம்' என சாக்தர்களால் கருதப்படும் 'ஹாலாஸ்யம்' என்னும் மதுரை மாநகர்.

' சேடு தாங்கும் மூ வுலகினிற்
சிறந்தன சக்தி
பீடம் மூவிருபத்து நான்கு
அவற்றின் முற்பீடம்
மாடம் ஓங்கிய மதுரையாம்
மற்றது போகம்
வீடும் வேண்டிய சித்தியும்
விளைவிப்பதாகும்."

(திருவிளையாடற் புராணம்)

இறைவனை, இறைவியை ஒளிமயமாகக் கருதிவழிபடும் உயர்ந்த ஞானிகள் அஞ்ஞானத்தை இருள் எனக் கூறுவதைக் காண்கிறோம். சூரியன் பன்னிரண்டு என்கிறது மரபு. ஒளியில் ஆதவனைக் காட்டிலும் உவமைக்குக் கூற சிறந்த ஒளி இல்லை. அந்த ஒளிக்கும் ஒளியாக பன்னிரண்டுக்கும் முடிவான (யோகிகள் தன்னுள்ளே ப்ரம்மரந்திரத்துக்கு 12 அங்குலத்துக்கு மேல் இறைவனை ஜோதிரூபமாகக் காண்பதாக யோக சாஸ்திரங்கள் கூறுகின்றன.) ஒளியாக இறைவி விளங்கும் தலமாதலால் (த்வாதச அந்தம்) த்வாத சாந்தம் எனப்படுகிறது.

" அந்த சரீரே ஜ்யோதிர் மயோஹி சுப்ரோ
யம் பச்யந்தி யத, ய : க்ஷீண தோஷா :"
" ஜ்யோதிஷா தஜ்ஜோதிஸ் தமஸ : பர முச்யதே "

சாதாரணமாக பேசும்போது கூட 'மாட மாளிகை 'கூடல் கோபுரம்' என்று கூறுமளவுக்கு புகழும் சிறப்பும் விளங்கக் காரணம் இறைவனே இறைவியை மணந்து 'சிவராஜ தானியாக' இதை ஆக்கி ஆட்சி புரிந்து, தனது ஜடா பாரத்தில் தாங்கிய பிறைச் சந்திரனின் அமிர்த தாரைகளை

இக்கோபுரங்களில் தெளித்து புனிதமாக்கியதால். வருணனால் ஏவப்பட்ட சமுத்திரம் மதுரையை அழித்துவிடும்போல் பொங்கி வந்தது. பரிமள பாண்டியன் வேண்டுகோளுக்கிரங்கி ஜடாபாரத்தில் தங்கிய நான்கு மேகத்தினால் தடுத்து சமுத்திர ராஜனின் அகந்தையை அடக்கியதால் ‘கூடல்’ என்றும் அழைக்கப் பட்டது. கோயிலை நகரின் நடுவே நிர்மாணித்து, அதைச் சுற்றி சதுரமாக தெருக்களையும் நகரத்தையும் நிர்மாணித்த கலைத்திறனுள் பக்தியின் சிறப்பு விளங்குகிறது. நமது வாழ்வின் மையப்புள்ளி இறைவனே என்பதைத்தான் இந்நகர அமைப்பு விளக்கு கிறது. இறைவனை மையமாகக் கொண்டு இயங்கும் எந்தக் காரியமும் தடைப்பட்டது இல்லை.

இத்தகைய பெருமை வாய்ந்த தேன் மதுரத் தென் தமிழ் மதுரையில் கோயில் கொண்டிருக்கும் அன்னை தான் மீனாட்சி. அன்னையின் கண்கள் மீன்போன்று சஞ்சரிக் கும் சுபாவமுடையது என்பதால் மீனாட்சி என்றும் அங்கயற் கண்ணி என்றும் மீனலோசனி என்றும் கூறுவர். ஆனால் மீனுக்கு இயல்பாயுள்ள ஒரு பெருங்குணம் என்னவெனில் பார்வையிலேயே தனது குஞ்சுகளை எப்போதும் வைத்து அவைகளைப் பொரிக்கின்றது. ஆமை நினைவினாலும் பறவை தொட்டுத் தொட்டும் மீன் பார்வையாலும் அதனதன் சேய்களைக் காத்து வளர்க்கும் இந்த விந்தையான செயலைப் புரிகின்றது. ஊர்வன, நடப்பன, பறப்பன, நீந்து வன யாவும் இம்மாதிரி விந்தைகளைப் புரிந்து தங்களது பிரபஞ்சத்தை வளர்ப்பது போலவேதான் ஒருபெரும் ஞான குரு என்பவர் சிஷ்யனைக் கடைத்தேற்ற இவ்வாறெல்லாம் செய்வாராம்.

அன்னை தன் சிசுவை ஐயன் ஆமை மீன் பறவைபோல
தன்னகங் கருதி நோக்கி தடவி சன்னதி யிருத்தி
உன்னது பிறவி மாற்றும் உபாயம் ஒன்றுண்டு
சொல்வேன்
சொன்னது கேட்பாயாகில் தொடர்பவம் தொலையுமென்றார்
(கைவல்யம்)

அப்படியே அன்னையான அகிலாண்டநாயகி தன் குழந்தைகளான நம்மிடம் உள்ள அளவற்ற கருணையினால். மீன்போன்று சஞ்சரிக்கும் அருட்பார்வையை அள்ளி வழங்கி நம்மை பவசாகர அலை வந்து மோதாமல் தடுக்கிறாள்.

"லோகஸ்வ தூரிக்ருத பக்தசோகம் ஹாலாஸ்ய
நாதேக்ஷண புண்ய பாகம்
பீதி : ஸகே சேத்பவத : பவித்ரம் ஜ்யோதிர் விசேஷம்
ஜலசாரிநேத்ரம்"
(உமா ஸஹஸ்ரம்)

நமது பவ பீதியை ஒழித்து மனத்தைச் சுத்தப் படுத்தி தன் கருணையை ஏற்கும் பாத்திரமாக நம்மை இந்த மீனாட்சி ஆக்குகிறாளாம்.

"முற்று மங்கல நாண் சார்த்தி முழுதுலகீன்றாள்
செங்கை பற்றினன் பற்றிலார்க்கே வீடருள் பரமயோகி"

என்கிறார் பரஞ்சோதி முனிவர்.

சர்வ மங்களத்தையும் உண்டுபண்ணுபவன் சிவன் என்ற நாமம் தாங்கி உலக பரிபாலனம் செய்கிறான். அந்த இறைவனான ஸோமஸுந்தரன் தன்னிடம் உள்ள மங்களகர மான சக்தியையெல்லாம் 'இம் மங்களக்கயிற்றின் மூலம் உனக்களித்தேன், இதன்மூலம் நீ நமது குழந்தைகளுக்கு மங்களம் செய்' என்று இந்த ஆலவாய் க்ஷேத்திர மணமகள் மங்கையற்கரசியாம் மீனாட்சியம்மைக்குக் கூறுகின்றான்.

நமது வாழ்வில் அனைவரும் விரும்புவது ஆனந்தம். துன்பம் வேண்டாம் என்றுதான் நினைக்கிறோம். இந்த நிலையைக் கொண்டுவர அகம்பாவத்தைக் குறைக்கவேண்டும். நம்மிடம் இருக்கும் 'நான்' என்ற அகந்தை இருளை நீக்கி, 'இறைவன் நீ' என்று 'த்வம்' பாவனையை வளர்க்க வேண்டும். இதற்கு இறைவி மீனாட்சியின் அருட்பார்வை பயன்படுகிறது. அவள் ஒளிமயமாகி இருளை நீக்குகிறாளாம்.

"அகந்தைக் கிழங்கை அகழ்ந்தெடுக்கும் தொழும்பர் உளக்கோயிற்கேற்றும் விளக்கே வளர்சிமிய இமயப் பொருப்பில் விளையாடு மிள மென் பிடியே" என்று மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் கூறுகிறது.

அன்னையின் சக்தி முழுதும் கண்களிலே மிளிர்கிறது. இந்த சக்தி படிவத்தின் அருட்பார்வையில் விழுந்தோரை பிறவிப் பிணி தொடுவதில்லை.

'பிறவி எடுத்து, உண்ட தாய்ப்பால் எல்லாம் சேர்த்தால் பாற்கடலும் சிறிதாகும் போலுள்ளதே! சித்சபேசா! பிறவித் துயர்களையாய்!' என்று அடியாரும் தவம் மிக்கோரும்

---





பயப்படும் பிறவி என்னும் பெருங்கடலைத் தாண்ட உற்ற தொரு மரக்கலமாக அன்னை மீனாட்சியின் அருள்பார்வை உதவுகிறது.

எடுத்த பிறப்பெல்லாம் எனக்கு வந்த தாய்மார்
கொடுத்த முலைப் பாலனைத்துங் கூட்டின்—அடுத்துவரும்
பன்னகணைத் துயிலும் பாலாழியுஞ் சிறிதாம்
மன்னு சிதம்பர தேவா !'' (குருநமசிவாயர்.)

பயத்தினால் நடுக்குற்று பிரார்த்திக்கின்றார். 'இறைவா! எந்த ஊருக்கு வேண்டுமானாலும் என்னை அனுப்பி வை. தைரியமாகப் போகிறேன். ஆனால் இந்தக் கருப்பை என்னும் ஊர் மட்டும் வேண்டாமப்பா' என்றார் வேறொரு அடியார்.

" மாதாவும் உடல் சலித்தாள் வல்வினையேன்
கால் சலித்தேன்
வேதாவும் கை சலித்துவிட்டானே—நாதா
இருப்பையூர் வாழ் சிவனே மற்றுமோர் அன்னை
கருப்பையூர் வாராமற் கா.''

இதுவரை குழந்தைகளுக்கு அன்னையே நல்ல வழிகளைக் கற்றுக் கொடுத்து இப்படிச் செய், அப்படிச் செய்! என்கிறாள். அப்படியே வேதம் என்கிற நமது தாய் இன்னபடி செய்யவேண்டும் என்று வழிகளைக் கூறுகிறது. உபநிஷத் என்பது வேதத்தின் முடியில் விளங்கும் கிரீடம். அது கட்டளைகளைப் பிறப்பிக்கின்றது. இதைச் செய்; இதைச் செய்யாதே என்று பொதுவாகக் கூறுகிறது. மாதாவான வேதம், "இதைச் செய்தால் இன்ன பலன் உண்டு'' என்று கூறுகிறது.

அப்படியே வேதங்களுக்கு எல்லாம் தாயான தேவி பல உயரிய வழிகளைக் கடைப் பிடிக்க வழிகாட்டி நமக்குச் சாந்த ரூபிணியாக விளங்கி அன்போடும் அரவணைப்போடும் நம்மை அழைக்கிறாள். அவள் கூறுவதைக் கேட்டு நடக்கா விடில் அவளே உக்கிரவடிவினளாக 'காளி'யாக மாறி தண்டித்து அப்போதும் நல்வழிப்படுத்துகிறாள். 'விளக்

'வெண்ணெய் குடி'க்க வாழைப் பழம் தந்து ஆசை காட்டி முதலில் கெஞ்சும் அந்த தாயே நாம் சண்டித்தனம் செய்த தும் இரண்டு அறை வைத்து அழுகைக்கிடையே ஆளே வளர்க்கும் ஆமணக்கெண்ணெயைப் புகட்டுகிருள் அல்லவா? அப்படியே குமரியாகவும், காளியாகவும், வராஹியாகவும், மஹேச்வரியாகவும் பல உருவங்களில் விளங்கும் தாயாகிய பராசக்தி 'ஸகலவேதமுமான தாய்' என்று உணர்ந்து வேதம் விதித்த வழியே இன்பநடை போடலாம்.

அருணகிரியார் பாடுகிருர்:

" குமரி காளி வராகி மகேச்வரி
  கவுரி மோடிசுராரி நிராபரி
கொடிய சூலி சுடாரணி யாமளி—மகமாயி
  குறளு ருப முராரி சகோதரி
உலகதாரி யுதாரி பராபரி
  குருபராரி விகாரி நமோகரி—அபிராமி
சமர நீலி புராரி தனுயகி
  மலேகுமாரி கபாலி நனுரணி
சலில மாரி சிவாய மனேகரி—பரையோகி
  சவுரி வீரிமுநீர் விடபோஜனி
திகிரிமேவு கையாளி செய்யாளொரு
  சகல வேதமுமாயின தாயுமை—அருள் பாலா"

---

ஒன்று நம் மனம் சூரபதுமனுக ஆகவேண்டும் அல்லது பக்த பிரஹ்லாதனுக மாறவேண்டும்: எறும்பு முதல் ப்ரம்மம் வரை ஈன்று காத்து அளித்து நீக்கி மறைத்து அருளும் அவளே எப்படியும் அடையத் தக்கவள். முடிவில் எவ்வுயிரும் அந்த முடிவான நிலையை அடையவே செய்கின்றன: சுலபமாக முன்னோர் நடந்த இராஜபாட்டையிலே சென்று அந்த அன்னையைக் காண்போமாமே! அதுவும் நாமெல்லாம் மதலையென தவழ்ந்து வளர்ந்ததுபோல், பாண்டிய அரசனின் புத்திரியாக தவழ்ந்து நம் பழந்தமிழ் நாட்டின் தலைவரசியாக செங்கோல் ஒச்சிய அன்னை அருளொளி பரப்புகிருள் என்னில், உரிமையோடும், அன்போடும், நெருங்கி நாம் வேண்டும் பேறு பெற ஸ்ரீ அங்கயற்கண்ணி அம்மையைத் தவிர சிறந்ததொரு இடமும் உண்டோ?

தேவேந்திரன் தனது சபையில் கொலுவீற்றிருந்த சமயம் வியாழ (குரு) பகவான் வந்ததைக் கவனியாமல் இருந்து விட்டான். அதனல் சினமடைந்த குரு பகவான் அவையை விட்டு நீங்கினர். குருவிற்கு செய்த அபசாரத்தினுல் தனது செல்வம் தேய்வதை உணர்ந்தான் இந்திரன். (பெரியோர்களுக்கு இழைத்த அபசாரம் செல்வத்தை அழிக்கும் வித்து) பிரமதேவனை அடைந்து ஆலோசனை கேட்டான். பிரமனும் மனமிரங்கி "த்வஷ்டா" என்ற பெரியோரின் தவப் புதல்வனும் விசவருபனை குருவாகக் கொள்ளும்படி பணித்தான்.

விச்வருபனும் இந்திரன் விருப்பத்திற்கிணங்கி யாகம் செய்து, இந்திரனின் செல்வம் பெருகச் செய்ய இசைந்தான் ஆயினும் அவன்மனம் அவனது அசுரகுலத்துக்குநலமுண்டாக வேண்டும் என்ற எண்ணத்தோடு வேள்வியைச் செய்ததை ஊகித்தறிந்த இந்திரன் அவனை வச்சிராயுதத்தால் அழித்தான். இந்திரனை 'ப்ரம்மஹத்தி' தோஷம் பற்றியது. அந்தப் பாவத்தின் பலனை இந்திரன் மண்ணுக்கும், மரத்துக்கும், மாதர்க்கும், நீருக்குமாகப் பங்கிட்டு அளித்தான். மரத்தில் பிசினுகவும், மண்ணில் உவராகவும், நீரில் நுரையாகவும்

மாதரில் பூப்பாகவும் இப்பாவம் போந்தது. அப்பாவத்தை ஆற்ற அவர்களுக்கு ஒவ்வொரு வரமும் அளித்தான். மரம் வெட்டவெட்ட துளிர்க்கும்படியும் அகழ்ந்த நிலம் நிரம்பவும் நீர் இறைக்க ஊரும்படிக்கும், மாதர்க்கு மகப்பேறுமாக வரம் கொடுத்தான்.

தன்மகனை இந்திரன் கொன்றதை அறிந்த 'த்வஷ்டா' யாகமொன்று எழுப்பி, 'வ்ருத்தாசுரன் என்ற பயங்கர அசுரனைத் தோற்றுவித்து இந்திரனைப் பழிவாங்க ஏவினார். எதிர் நிற்கமுடியாத இந்திரன் ஸ்ரீவிஷ்ணுவின் ஊக்குதலினால் 'ததீசி' முனிவரை அடைந்து அவருடைய முதுகெலும்பை ஆயுதமாக உபயோகிக்கக் கேட்டான் ; அப்படியே அம் மா முனியும் உயிர் நீக்கிக்கொண்டார். அவரது முதுகெலும்பைக் கொண்டு செய்த வச்சிராயுதத்தால் போர் புரிந்து அவனைக் கொன்றான். மீண்டும் ப்ரம்மஹத்தி வந்து பற்றியது. ஓடி ஒளிந்து கொண்டான் இந்திரன். எங்கு சென்றாலும் அவனை நிழல்போல் பின்பற்றியது ப்ரும்மஹத்தி. கடம்ப மரங்கள் அடர்ந்த காட்டில் நுழைந்தான். அங்ஙனமே அவனை விட்டு விலகி நின்றது ப்ரம்மஹத்தி. அங்கு ஒரு மரத்தினடியில் சோமசுந்தரப்பெருமான் எழுந்தருளி யிருந்தான். எதிரே யிருந்த வாவியில் பொற்றாமரைகள் நிறைந்திருந்தன. அத்தாமரை மலரைப் பறித்து இறைவனுக்கு அர்ப்பணித்து வணங்கி வழிபட்டான். தேவசிற்பியைக் கொண்டு ஆலயமும் எழுப்பி இந்திரவிழாவும் கொண்டாடினான். மதுரையின் தலபுரா்ண வரலாறு இது. இங்கு 'தலவிருட்சம்' கடம்ப மரமே. இந்திரவிழா இன்றும் நடக்கிறது.

இராமேச்வரம்

அன்று தொட்டு இன்றுவரை பெரியோர்களையோ, மஹநீயர்களையோ கண்டால் பாதம் தொட்டு ஒற்றிக் கொள்வது நமது மரபு.சக்திபீடங்களில் ஒன்றாகக் கூறப்படும் 'இராமேசம்' சிவனின் ஜ்யோதிர் லிங்க ஸ்தலமாகவும் உள்ளது. இங்கு பாத தரிசனம் பாப விமோசனம். வட

நாட்டவர் இங்கு வந்து கடலாடுவதும், தென்னாட்டவர் காசியில் சென்று கங்கையாடுவதும் காணில், அக்காலத்திலிருந்து ஒற்றுமைக்கு பக்தியை வித்தாக வைத்து இயக்கியது புலனாகும். இப்படியே இமயத்திலிருந்து எல்லோரும் கூடி கடலாடி களிப்பெய்தும் தலம் இராமேச்வரம். இராமேச்வர லிங்கம் இராமநாதன் இராமபிரானால் ஸ்தாபிக்கப்பட்டதாகப் புராணம் கூறுகின்றது.

உடம்பு ஒரு பறவைக்கூடு. அதனுள் உறையும் பறவையே உயிர். உயிராகிய பறவைக்கு உடலாகிய கூடு அவசியம். ஆயின், பறவை பறக்கும் வரைதான் இந்த நிலை. அப்படியே உயிர் பிரியும்வரை உடலில் தங்கத்தான் வேண்டும். அப்போது இவ் உடல் போஷாக்குக்கு என வயிற்றுக்கு உணவு அளித்தேயாக வேண்டும். அப்பா ! உடலை வளர்த்து

---

வருவது உடலுக்கு அல்லவே! உயிருக்காக அல்லவோ? அப்போது இவ்வுயிரை வளர்க்க என்ன செய்தாய்? உடலுக்கு உணவுபோல உயிர்க்கு உணர்வு தேவை; உணர்வு தான் 'சிந்தனே'. சிந்திப்பவன்தான் தீர்க்க தரிசனம் பெறுகிறுன்; "சிந்திக்கிலேன் நின்று சேவிக்கிலேன் நின் தண்டை சிற்றடியை வந்திக்கிலேன்" என்கிருர் அருணகிரி. சிந்திப்பது எதனே? எனின் 'சிற்றடியை' என்று கூறி விட்டனர்.

திருவடியே சிவமாவது தேரின்
திருவடியே சிவலோகம் சிந்திக்கின்
திருவடியே செல்கதியது செப்பின்
திருவடியே தஞ்சம் உள் தெளிவார்க்கே

(திருமூலர்)

ஆக, அகமுகமாகி சிந்தித்தால் திருவடி தான் சிவலோகம், எனக் காண்கிறது எனில், பாதமே நமது தஞ்சம்.

"அங்கணு உன் அடியிணே அன்றியே தங்க வேறிடம் உண்டோ?" என்கிருர் தாயுமானுர்.

"பதத்தே யுருகி நின் பாதத்திலே மனம் பற்றி" என்றும் 'வல்லபம் ஒன்றறியேன் சிறியேன் நின் மலரடிச் செம் பல்லவ மல்லது" என்றும் அபிராமி பட்டரும் பாதப் பெருமையைப் பாடுகின்றனர்.

இவ்வாறு வினேயினுல் விளேந்த வினேப்போகமான இவ் வுடலில் உயிர் உள்ளபோது காமம், க்ரோதம், லோபம் மோஹம், மதம் மாற்சரியம் என்ற ஆறு சத்ருக்களே எதிர்த்து வெற்றி கண்டு வயிற்றுக்குப் பிணிக்கு மருந்துபோல், பிக்ஷை உண்டு முக்தியை நீ விரும்பினுல் இராமேச்வரத்தில் எழுந்தருளியுள்ள பர்வதவர்தினியின் பாதத்தில் சரணடைந்து "பிறவிப் பிணி நீக்கு" என்கிருர் காவிய கண்டம். என் பாதத்தை வந்தடைந்தால் பவசாகரத்தின் அலேகள் உன்னே அணுகா என்று கூறுவதுபோல் இங்கு சமுத் திரம் அலேயின்றி அமைதியாக குளம்போல் இருக்கிறது.

இந்த தேவியின் சக்தி முழுவதும் பாதங்களிலே மிளிர்கிறதாம்.

" ரக்ஷ ஸ்வசேதோ மதமத்ஸராதே பிக்ஷஸ்வ
காலே தனுரக்ஷணாய
வீக்ஷஸ்வ ராமேசவதூ பதாப்ஜம் மோக்ஷஸ்வலாபே
யதி தேஅபிலாஷ :"

அகிலாண்டேச்வரி

சிறு கூடை. அதற்குள் கோழிக்குஞ்சுகள் கீச் கீச் என்று வளைய வந்து கொண்டிருக்கின்றன. அவைகளை பருந்தும், நாய் நரியும் எடுத்துப் போகாமல் பாதுகாக்கின்றது, அந்தக் கூடை. இதுபோல் தான் நாம் வாழும் நம் உலகும். ப்ரம்மாண்டமான ஆகாயம் நம்மைக் கவித்து மூடிய கூடைபோல்தான் உள்ளது. அண்டம்—(முட்டை) அதிலிருந்து வருவது கோழிக்குஞ்சு முதலிய பறவை உயிரினம். ப்ரம்மாண்டம்—(உலகு) இதில் சகல ஜீவராசிகளும் வாழ்கின்றன. அண்டத்திலுள்ள (முட்டை) உயிர் வளர்ந்து வெளியே முழு உருவாகி வருவதற்கு ஒரு சக்தி தேவையாகிறது. அது தான் உஷ்ணசக்தி. ஒவ்வொரு இயக்கத்துக்கும் சக்தி (Energy—power) தேவையாகிறது. இவ்வாறே நமது ஆத்மா என்னும் உயிர், தனது இயல்பான நிலையை உணர, பெருமுயற்சி செய்து தவமியற்றி உடற் கூட்டை வருத்துவதன் மூலம், எண்ண அகழிகளைத் தூர்த்து மனக்கோட்டையைத் தகர்த்து, அரசனும் இறைவன்உறையும் இதயக்கோயிலுக்குள் நுழைவதற்கு ஆத்ம சக்தி தேவையாகிறது. எட்டுக்கால் சிலந்தி நூற்கும் நூலிழைகளில் அது தன்னிச்சையாக சஞ்சரிக்கிறது. அத்தகைய நுண்ணிய சக்தி (சூக்ஷ்ம சக்தி) அனைத்துக்கும் ஆதாரமாகிறது. இந்த ஆத்மசக்தியை பரிவோடு வழங்குபவளாகத் திகழ்கிறாள் அகிலாண்ட பரமேச்வரி, ஆனைக்காவில். இதனால்தான் அன்னையின் ஆயிரம் நாமாக்களில் "பிஸதந்து தனீயஸி" என்று ஒரு நாமம் கூறுகிறது. தாமரைத் தண்டை உடைக்

கிறோம். அதனுள் குழலோடுகிறது ! நூல்போன்ற மெல்லிய இழையைப் பார்க்கிறோம் : இத்தகைய சூக்ஷ்ம சக்தியாக அன்னை பிரகாசிக்கிறாள். ஆத்ம சக்தியை நாம் அள்ளி அள்ளி அனுபவிக்க உதவும் அன்னையை

" அட்டசித்தி நல் அன்பருக்கு அருள
விருது கட்டிய பொன் அன்னமே
அண்டகோடி புகழ் காவை வாழும்
அகிலாண்ட நாயகி என் அம்மையே "

என்கிறார் தாயுமானார்.

புஜங்கா காரரூபேண மூலாதாரம் ஸமாச்ரித
சக்தி : குண்டலினி நாம பிஸதந்து நிபாசுபா."

என்கிறது வாமகேச்வர தந்திரமும்.

திரு ஆனைக்கா திருச்சி நகரில் உள்ளது. ஜம்புகேச்வரம் என்று பரசிவத்தின் பஞ்ச பூத ஸ்தலங்களில் அப்புலிங்கமாக (ஜலவடிவமாக) திகழும் தலமிது. தன்னை அண்டிய பக்தர்களின் மாயை இருள் விலக்கி ஞான தீபம் ஏற்றும் ஆத்ம ஒளியாகத் திகழ்கிறாள் அன்னை.

" யோ லோகதே தாமகிலாண்டராக்ஞீம் அஞ்ஞான
வித்வம்ஸ விதான விக்ஞாம்
அம்பாம் பராம் ஜீவனலிங்கசக்திம் பூய : ஸகாயம்
ந பவே லபேத் !

என்கிறார் காவிய கண்டம்.

உருவில் பெரியது யானை. உருவில் சிறியது சிலந்தி உயிர் சிலந்தியிழையோல் (சூக்குமம்) நுண்ணியது. (தூலம்) உடல் யானைபோல் பெரியது. சிலந்தியும் யானையும் சேர்ந்து வழிபட்டதலம் ஆனைக்கா. உயிரும் உடலும் சேர்ந்துள்ள போதே வழிபட வேண்டுவது ஆனைக்கா. இறை தரிசனம் பெற இந்த ஒன்பது·வாயின் குடிலுக்குள்ளே தான் பார்க்க வேண்டும். இதை உணர்த்துகிறது இங்கு ஒன்பது கண்களுடன் கூடிய பலகணி வழியே சிவதரிசனம். இங்கு ஐந்து பிராகாரங்கள் உண்டு.

மீண்டும் சூக்ஷ்மார்த்தமாக இக்கோயிலைப் பார்ப்போமானுல் எவ்வளவு பெரிய தத்துவம் பொதிந்த கோயில் என உணரலாம்.

அன்னமய, ப்ராணமய, மனோமய, விஞ்ஞானமய ஆனந்தமயம் என்று ஐந்து உறைகளால் மூடப்பட்டு அதன் நடுவே தன் ஸ்தானத்தை சக்தி (ஆத்ம) பெற்றுள்ளது. "பஞ்சகோசாந்திர ஸ்திதா" என்று லலிதாஸஹஸ்ர நாமம் கூறும். இந்த ஐந்து கோசங்களே அம்பிகையின் இருப்பிடமான இருதய கமலத்திற்கு பஞ்சப் பிராகாரங்களாக அமைக்கப்பட்டுள்ளன.

அருளோடு பெரு நிலமளிக்கும் ஆனைக்கா ஆத்ம சக்தி பீடம் என்பதில் இனியும் விளக்கம் தேவையோ ?

ஜகதாம்பிகை இங்கு நின்று அருள் பாலிக்கிருள். ஸ்ரீ ஆதி சங்கரர் வழிபட்டு, அம்பிகையின் ஆவேசத்தைத் தணிக்க தாடங்கம் அணிவித்து அகிலாண்டேச்வரியை யாரும் அச்சமின்றி அணுகி, அருள் பெற வழிவகுத்துக் கொடுத்தார்கள். மகேஷ்வரியின் தாடங்க மகிமையை இன்றும் தேவி தாஸர்கள் இங்கு கண்டு மன நிறைவு பெறுகிருர்கள். 'தன்னுடைய வாழ்நாள் இன்னும் கொஞ்சம் நீளாதா ? கிழத்தன்மை வராமல் ஏதாவது காயகற்பம் உண்டா ? மரணம் வராமல் இருக்க ஏதாவது மருந்து உண்டா என்று சித்தர்கள்கூட அலைந்து திரிந்துள்ளதை படிக்கிருேம். உலகியலில் இன்றும் காண்கிருேம். இதுபோல் தங்கள் சாவா வரத்தை வேண்டி அம்ருதபானம் உண்ட தேவர்கள்கூட பிரளய காலத்தில் மரித்துவிடுகிருர்கள். அம்ருதபானம் செய்தவர் இறக்கின்றனர். ஆனுல் கால கோடி விஷத்தை உண்ட பரமேச்வரனே மஹாபிரளயத்தில் கூட அழிவை அடைவதில்லையே ! தாயே ! இதன் ரகசியம் எனக்கு நன்ருகத் தெரிகிறது. இது உன்னுடைய 'தாடங்கத்தின் மஹிமைதான்' என்கிருர் சங்கரர். தன்னலத்தின் அழிவும் பிறநலத்தின் மாண்பும் விளங்குகிறது. தான் வாழ நினைத்து மரித்தனர். ஆயின் உலக உபகாரத்துக்கு விஷத்தை

தான் உண்டவர் நஞ்சுண்ட கண்டராக திகழ்கின்றார் இன்றும்.

" ஸுதாமப்யாஸ்வாத்ய ப்ரதிபய ஜரா ம்ருத்யு ஹரிணீம்
விபத்யந்தே விச்வே விதிசத மகாத்யா திவிஷத :
கராலம் யத்க்ஷ்வேலம் கபலிதவத : கால கலனா
ந சம்போ : தந்முலம் தவஜநநி தாடங்க மஹிமா !"
(ஸௌந்தர்யலஹரி)

இகத்துக்கும் பரத்துக்கும் உறுதுணையாக நின்று உலக மாந்தரை உய்விக்கும் இத்தல தெய்வத்தைக் காணக் கண் கோடி வேண்டும். மிகவும் சாஸ்த்ரீய முறையில் வைதிக பூஜை செய்யப்படும் இத்தலத்தில் அம்பிகையின் கமல நயனங்களில் வழிந்தோடும் காருண்யத்தைக் காணும் வாய்ப்பைப் பெற்றவர் பாக்கியசாலிகள். ஜம்புகேச்வரரும், இங்கு மதுரை சுந்தரேச்வரரைப் போலவே பத்னியின் புகழ் நிழலில் லயித்து அன்பர்களுக்கு தரிசனம் தந்து கொண்டிருக்கிறார்.

அகிலாண்டேச்வரியின் திருவுரு கம்பீரமாக அமைந்துள்ளது. அண்டபிண்டங்களை ஈன்ற தெய்வத்தாய் அவள். காத்து ரட்சிக்கும் கௌரி அவள். நாடாளும் மன்னனுக்கும், அவனை ஆளும் மாமன்னனுக்கும் அரசியாக உலகையாளும் சக்கரவர்த்தினியாகத் திகழ்கிறாள் அகிலாண்டேச்வரி. அவள் திருப்பாத கமலங்களில் அவள் புகழ்பாடும் அருட்பாக்களை —லலிதாஸஹஸ்ரநாமம், அஷ்டோத்ரம், சௌந்தர்யலஹரி பிள்ளைத்தமிழ் பாசுரங்கள்—அன்பர்கள் விதவிதமான வண்ணமாலைகளாக அணிவித்து, பயபக்தியோடு அவள் சந்நிதியில் கரங்குவித்து நிற்கும் காட்சி கண்கொள்ளாக் காட்சி.

## திருவாரூர்

அடியார்கள் அறுபத்தி மூன்று பேரில் முதன்மை குரவர்களாக சிவமதம் தழைக்க பாடுபட்டவர்களில், சிவனோடு தோழமை பூண்டு வன்றொண்டன் என வழங்கிய ஸ்ரீ சுந்தர

மூர்த்தி நாயனுர் சிறப்புடன் தியாகேசனுடன் உறவாடி மகிழ்ந்த தலம் திருவாரூர் : 'அப்பர், சுந்தரர். மாணிக்க வாசகர், ஞானசம்பந்தர், இந்நால்வருள் சிறந்தவர் யார் ?'' என சீர்தூக்கிப் பார்த்தபோது தம்பிரான் தோழரான சுந்திரரே சாலச்சிறந்த அடியார் என முடிவு கூறினுராம் சிவப்பிரகாசர் என்ற சிவனடியார். காரணம் : திருஞான சம்பந்தப் பெருமான் பூம்பாவையின் எலும்பை ஆதாரமாக வைத்துக் கொண்டு அப்பாவையை உயிர் பெறும்படி செய்தார்.

அப்பரோ கல்லேயே தோணியாக மிதக்கச் செய்து கரையேறினுர். நீரில் மிதக்க கல் ஆதாரமாயிற்று. அவனுசி க்ஷேத்திரத்தில் குளத்தில் குளிக்கச் சென்றனர், ஒரே தெருவில் எதிர் எதிர் வீட்டு இரு அந்தணக் குழந்தைகள். வீதி விளையாடியது. ஒரு பாலனே முதலே ஒன்று கவர்ந்து சென்றது. குடும்பத்தார் பதைத்தனர். பயன் இல்லே. வருடங்கள் உருண்டோடியது. எதிர் வீட்டுப் பிள்ளேக்கு (உபநயனம்) பூனூல் இடுகிருர்கள். சிரிப்பும் கொம்மாளமும் மேளதாளமும் முழங்க அந்த வீடு ஆனந்தத்தில் மிதக்கிறது. ஆனுல்! எதிர் வீட்டில் அழுகையும் துக்கமுமாக இருந்தது. ஆகா என் பிள்ளே இருந்திருந்தால் இதே வயதிருக்குமே என அலறினுள் பிள்ளேயைப்பறி கொடுத்த தாய். அவினுசி வந்திருந்த அடிகளார் கால்களேப் பற்றி தன் குறையைக் கூறினுள். ஸ்வாமி ! இங்கு இருந்த குளத்தில் சில வருடங் களுக்கு முன் நீர் நிரம்பி யிருந்தது. அதிலிருந்த ஒரு முதலே என் மகனே விழுங்கி விட்டது. என் மகனே எனக்கு அளிக்க நீங்கள் தான் அருள் புரிய வேண்டும்'' என்று மன்ருடினுள். இறைவனே எண்ணி சுந்திரமூர்த்தி நாயனுர் பதிகம் பாடினுர்.

இறைவனின் கருணேயால் அடை மழை பெய்து குளம் நிரம்பி, அதில் முதலே தோன்றி அது தன் வாயினின்று ஏழு வயது பாலகனுகவே பிள்ளேயை கக்கிற்று. இதுவல்லவோ அற்புதம் என வியக்கிருர் கந்த புராண ஆசிரியர் கச்சியப்பர்.

" வறந்திடு பொய்கைமுன் நிரம்ப, மற்றவண்
உறைந்திடு முதலை வந்துதிப்ப, அன்னதால்
இறந்திடு மகன் வளர்ந்தெய்தப் பாடலொன்
றறைந்திடு சுந்திரன் அடிகள் போற்றுவோம் "

இப்படி இறைவனையே ஆதாரமாகக் கொண்டு நிகழ்த்தியது அற்புதம். "பரவை மனை மீது அன்று ஒருபொழுது தூது சென்ற பரமன்" என்று போற்றுகிறார் அருணகிரி. இறைவனையே பரவை வீட்டுக்கு தூது அனுப்பி, எந்த திருவடிகளை அயன்மால் இருவரும் அறியமுடியாமல் தவித்தனரோ அந்தத் திருவடிகளே நேராக திருவாரூர் தெருவில் நடந்து தூது 'செல்ல வைத்த சுந்திரர் சாலச் சிறந்தவர்தானே! அந்த சுந்திரரின் பசி போக்க ஆரூர் தெருவிலே நடந்து பிக்ஷையேற்று சுந்தரருக்கு அளித்த பரம கருணையாளனான இறைவன் உறை திருவாரூர் சிறந்த சக்தி பீடமும் ஆகும்.

---

"பிறந்தவர்க் காரூர், காணப் பெற்றவர் தமக்குத்தில்லை
இறந்தவர் தமக்குக் காசி, எவ்விடத்தேனும் நின்று
மறந்திலர் நினைத்தவர்க்கு வான்தொடும் அருணையாகும்
சிறந்திறை வீற்றிருக்கும் தெனுது பொறகயிலைக் குன்றே"

என்றபடி கமலையில் பிறக்க முக்தி தரும் என்று போற்றப் படும் திருவாரூர்.

இங்கு கமலாம்பாள் என்ற பெயருடன் இறைவி தவக் கோலத்தில் வீற்றிருக்கிறாள். அநிந்திதை, கமலினி என்ற இரு தோழிமார்களைத் தரிசனம் செய்து கொண்டு உள்ளே சென்றால் கமலாம்பிகை, கால்மேல் காலிட்டு யோகாசன மாக வீற்றிருந்து பாசம், ருத்ராக்ஷம், தாமரை, அபயம் ஏந்திய கைகளுடன் காட்சியளிப்பாள். இக்கோயிலுக்கு மேற்கு மூலையில் அக்ஷரபீடம் என்ற பீடம் ஒன்றும் உள்ளது. இத்தேவியைத் தவிர நீலோத்பலாம்பிகை என்று கையில் பூச்செண்டு தாங்கி தெற்குமுகமாக உள்ள அம்மனும் உண்டு. இந்த அல்லியங்கோதை இடக்கரத்தால் பக்கத்தில் தோழியின் இடுப்பில் உள்ள முருகனின் சுட்டுவிரலை பிடித்த வாறு நிற்பாள். எக் கோயிலிலும் இல்லாத சிறப்பு இது.

இத்தலத்தில் குளம் ஐந்துவேலி, கோவில் ஐவேலி, செங்கழுநீர் ஓடை ஐவேலி என்று எல்லாம் விஸ்தாரமாக இருக்கும்.

கணபதி முனிவரும் 'முக்திக்கு வித்தாகும் இத்தலத்தின் தேவியினுடைய பெருமையை வர்ணிக்க ஆயிரம் நா படைத்த ஆதிசேஷனாலும் இயலாது' என்கிறார்.

விப்ரத்ஸஹஸ்ரம் முகானி சக்தோ வக்தும் குணான்
க ! கமலாலயஸ்ய '
ஜன்மாபி யத்ர ப்ரவேஜ்ஜனனம் முக்த்யை
முனீனமபி துர்லபாயை "

"பிறப்பு உற்ற எவ்வுயிரும் இறப்பை அடையும். ஆயின் இறப்பெய்திய அவ்வுயிர் பிறவாமையை அடைய உரிமையும் உரிய வழியும் உலகிலே உண்டு. தர்மம் செய், மனத்தை

இளக்கு, கல்லான உன் மனத்திலே அருள் நீர் சுரந்து அதில் இறைவனின் திருவடித் தாமரை மலரட்டும். இயற்கை யிலேயே பகிர்முகமாக (வெளியே) ஓடும் மனத்தை அடக்கி உண்முகமாக்கு. உயரிய கமலையின் நாமத்தை ஓயாமல் உரு வேற்று! அதிலே பிறக்கும் ஒரு உணர்வு. அவ்வுணர்விலே தெரியும் ஒரு தெளிவு. தெளிவு கொணரும் முக்தி. 'தெள்ள தெளிந்தார்க்கு சீவன் சிவலிங்கம்' என்பர் முந்தையர். இப்படி அரும்பாடு பட்டு அடையவேண்டிய இம் முக்தி முனி ஜனங்களுக்குக் கூட துர்லபமாகிறது. தறிகெட்டு அலையும் மனம் தன் நிலை பிறழ்ந்தால் பெறுதற்கரிய வித்தக விளைவு ஏற்படாமல் போகிறது.

தர்மம், அர்த்தம், காமம் மோக்ஷம், என்ற நான்கு புருஷார்த்தங்களும் ஒவ்வொரு மனிதப் பிறவியும் அடைய வேண்டியவை. இந்நான்கையும் அள்ளிக் கொடுக்கிருள் அன்னை இங்கு. தர்ம காமம் : அர்த்த மோக்ஷம் என்று

---

மோக்ஷத்துக்கு காரணமாக இருக்கக்கூடிய பணம், தர்மத்துக்கு விருத்தமாகாத காமம் என்று பிரித்துக் கொள்ளுங்கள்.

காமம் எனில், எல்லாவிதமான ஆசைகளும்தான். ஒருவனுக்கு ஏற்படும் எந்தவித ஆசையும் தர்மம் என்ற வரம்புக்கு உட்பட்டுள்ளதா என்று ஆராயவேண்டும். ஒவ்வொரு காரியமும் தர்மம் என்ற சட்டத்துடன் தொடர்புடையது. இப்படியே உன் பொருள் எல்லாம், மோக்ஷத்தை சம்பாதிக்கக் கூடியதாக உனக்கு உதவட்டும். நீ உனக்குத் தான் உதவிக்கொள்கிறாய். பிறனுக்கு அல்ல! இப்பொருளினால் மோக்ஷத்தை அடைய என்ன செய்யலாம்? இறைவனுக்கு அர்ப்பணிப்போம், அடியார்களுக்கு உதவுவோம்: ஏனென்றால் இவ்வளவு பெரிய உடம்பை என்னதான் போஷாக்காக வளர்த்தாலும் எவ்வளவு பருமனாக ஆனாலும், வெயிலுக்கு கூட ஒதுங்கிக்கொள்ள முடியாத நிழலுடையதாகத்தான் இருக்கும். ஆனால் அதுவே ஆலமரமாக இருப்பின் வேந்தர்க்கு இருக்க நிழலாகும். கைப்பொருளும் இவ்வாறே கடைவழியான முக்திக்கு (பொருளாகவே புதைத்தாக இருப்பின்) உதவாது. ஆகவே புத்திசாலியான நீ இப்புருஷார்த்தங்களை கமலா தேவியின் கடாட்சத்தால் சுலபமாகப் பெற முயல்வாயாக.

விதைபோன்றது பணம். அதைப் பன்மடங்காகப் பெருக்க ஈகை எனும் மண்ணுடன் தொடர்பு கொள்ளச் செய்யவேண்டும். அப்போது இனிய உணவுக்குப்பயனாகும்படி பெருமளவுக்கு விருத்தியாகும், விதையை மண்ணில் இடாது போயின் உண்ண ஒட்டாது. அப்படியே அத்தமும் புதைத்து வைத்தால் கடைவழிக்கு உதவாது. சுருங்கக் கூறின், மண்ணில் புதைத்த பொருள் விண்ணுக்கு உதவாது. மண்ணில் புதையாத விதை உண்ணற்கு உதவாது. இதையே அருணகிரியும்.

" கோழிக் கொடியோன் அடி பணியாமல் குவலயத்தே
வாழக்கருதும் மதியிலிகாள்! உங்கள் வல்வினை நோய்

ஊழிற் பெருவலி உண்ண ஒட்டாதுங்கள் அத்தம் எல்லாம்
ஆழப் புதைத்து வைத்தால் வருமோ நும் அடிப்பிறகே''

என்கிறார்.

சிதாகாசம் சிற்றம்பலம்

எங்கும் நிறைந்தது வானம். எதனிலும் நிறைய வேண்டுவது ஞானம். ஞானத்தின் வடிவாக அமைந்தவன் இறைவன். ஐம்பூதங்களின் சேர்க்கை இந்த வையம். இவ்வையம் பூதங்களின் அழகுத் திருக்கோலங்களே. ஐயன் நமை ஆட்கொள்ள அமர்ந்த புனிதத் தலங்கள் பல. ஆகாச வடிவமாக ஈசன் அமைந்தது சிற்றம்பலம். ஞானவெளியில் இறைவன் ஆடும் நடனமே சிற்றம்பலம். வியாக்கிர பாத முனிவர் ஈசனைக் குறித்துத் தவம்புரியத் தில்லைக்கு வந்தார். அங்கு சிவகங்கைப் பொய்கைக் கருகில் ஈசனைப் பிரதிஷ்டை செய்து புலிக்கால் பெற்று, மரங்களிலிருந்து பூக்கொணர்ந்து பூசித்து யோகத் தியானத்தில் அமர்ந்தபோது, தாருகா வனத்தில் ஐயன் நடம் புரியும் காட்சி தெளிவாயிற்று. வியாக்கரபாத முனிவருக்கோ அது முதல் கண் நிறைந்த அந்தக் காட்சியை மீண்டும் ஊனக் கண்கொண்டு காண வேண்டும் என்ற ஆவல் அளவு கடந்தது.

தாருகா வனத்து முனிவர்களின் செருக்கடக்கி, முனிவர்கள் ஏவிய புலி, பாம்பு முயலகன் யாவற்றையும் ஈசன் தனது ஆடை அணியாகக் கொண்டு, ஆடும் பீடமாக முயலகனைக் கொண்டு ஆடிய திரு நடனத்தின் கண்கவர் காட்சியைத் திருமாலிடம் கேட்ட ஆதிசேஷனுக்கு அந்த நடனத்தைக் காண வேண்டும் என்ற துடிப்பு மிகுந்து வர பாதிப் பாம்பும், பாதி மனிதனுகவும் வடிவு கொண்டு தில்லைக்கு வந்து ஈசன் பால் மனத்தை இருத்தி இடைவிடாது தவமியற்றிவந்தார். ஆதிசேஷன், வியாக்கிரபாதர் இருவரது கனிந்த தவத்திற்கு உளம் உவந்து திருக்காட்சியளிப்பதற்காகத் தில்லைக்கு வந்தார் சிவபெருமான்.

காரணம் ஒன்றில்லாமல் காரியம் எதுவும் நடப்பதில்லை. காரணத்தோடு இயங்கும் காரியத்திற்குத் தான் அழகு இருக்கிறது. காரணமும் அவனாக, காரியமும் அவனாக இருக்கும் பரமேச்வரன் அன்பர்களின் திருவுளம் இசைய நிகழ்த்த விருக்கும் நடனத்திற்கும் தில்லையின் கிராம தேவதையான காளியைக் காரணமாக்கினார். ஈசனும் காளியும் நடனமாடத் துவங்கினர்; தூக்கிய பாதம் காட்டிக் காளியைத் தோற்க வைத்து, ஊருக்கு வெளியில் தில்லை வனத்தில் அவளை உறையச் செய்து விட்டார் ஈசன். உடுக்கையின் ஒலியில் உயிர் தோற்றத்தை உணர்த்தியும் 'அருட்கரத்தால் உலகை அணைத்துக் காத்துத் தாங்கிய பொற்கனலால் தரணியை அழிக்கும் நிலையுணர்த்தியும், தூக்கிய திருவடியை நோக்கி கரத்தால் மோட்ச நிலை காட்டியும், ஐந்தொழில்களையும் ஒன்றாக்கி ஆனந்த நடனம் புரியும் நடராஜர் ஆவிர்பவித்திருப்பது ஆகாச ஸ்வரூபமாக தத்துவங்களின் நுட்பமும் சிறப்பும் தன்னகத்துக் கொண்டதே தில்லையம்பதி.

பெரிய மாமரம். நல்ல ஜாதி. வேரிலே நீரும் வளமும் இடுகின்றார். மரம் தனக்கு என்று ஒன்றும் வைத்துக் கொள்ளாது பழுத்து குலுங்கிக் கொடுக்கிறது. அப்படியே வேதம் ஓதும் அந்தணர் மூவாயிரவர் அள்ளிச் சொரிகிறார் அவியை எரியிலே. ஊரே மணக்கிறது நெய்மணம். கலியின் கொடுமையை வராமல் தடுக்கிறதாம் அப்புனித மந்திர அருட்புகை. எல்லோரும் இன்புறுகின்றனர்.

"கற்றாங்கு எரியோம்பி கலியை வாராமே
செற்றார் வாழ்தில்லைச் சிற்றம்பலம்."

என்கிறது தேவாரம்.

இயக்கமே சக்தி. அமைதியே சிவம். ஆயின் இங்கு இயக்கமே சிவம், அமைதியுருவே அன்னை; சிவகாமி அன்னையின் கோயிலும் இப்படியே ஆளரவமின்றி இருக்கும். அன்னை, இருக்கிறாளா? என்று கூட எண்ணாது ஆடும் அப்பனையே, தில்லை அரசனையே தரிசனம் செய்து போவார் பலரும். சிவகங்கையின் புகழைப்பாடிய குரு நமசிவாயர்.

" கண்டமட்டில் கண்டவினை காதம்போம், கையிலள்ளிக்
கொண்டமட்டில் கொண்டவினை கொள்ளைபோம்—
வண்தமிழ்சேர்
வாயார வேபுகழும் வண்ணச் சிவகாமித்
தாயார் திருமஞ்சனம் "

என்று அன்னைத் திருமஞ்சனம் என்று அடை மொழியிட்டு கூறுகிறார்.

சிவனை ஆடவைத்து, (காளி நடனத்தை நிறுத்தி) அன்னவனின் ஆடலுக்கு கைகொடுத்த அன்னை சிவகாமியை எண்ணி நீ பெற விழையும் இஷ்டங்களையெல்லாம் பூர்த்தி செய்துகொள் என்கிறார் கணபதி முனி.

" வ்யாக்ராங்க்ரி வாதாசன பூஜிதஸ்ய நாட்யஸ்தலி
நாயிகயா சிவஸ்ய
நேத்ராத்வபாஜா சிவகாமயா வோ மித்ராணி காமா :
பலினோ பவந்து !!

பிலாகாசம்! காமாட்சி

ஒடாகிய உடலிலும், உயிர் இறையாகிய சிவத்திலும் கலந்துறையும் உயிரே சக்தி. ஐந்தொழில் புரியும் ஈசனுடைய பரமாத்ம சக்தியாக—அறிவிற்கும் தெளிந்த கல்விக்கும் கலைமகளாகவும், திருவுக்குத் திருமகளாகவும், எதிர்ப்பை அழிக்கும் சக்திக்குக் காளியாகவும், அமைதிக்கும், சாந்த நிலைக்கும் மாகேச்வரியாகவும், நிறைந்த இன்பத்திற்கு மனோன்மணியாகவும், ஆகாச ஸ்வரூபமாக விளங்குபவள் காமாக்ஷி. பரமேச்வரனுக் குகந்த பஞ்சபூதஸ்தலங்களில் ஆகாச ரூபமான 'சிதாகாசம்'—சிதம்பரத்தைப் போல் ஈச்வரிக் குகந்த பஞ்ச பீடங்களில் ஆகாச பீடமாக பிலாகாசத்தில் பிரகாசிக்கும் காஞ்சி காமகோடி காமாக்ஷி மிகச் சிறப்புடையவளாகும். எண்ணுபவை யெல்லாம் தூய்மை நிறைந்த யாவும் எண்ணற்கரிய பல கோடியாகக் குவித்தளிக்கும் கருணைக் கடல் காமகோடி அன்னை இங்கெழுந்தருளியமையைக் 'காமராஜபீடம்' என்று அழைக்கிறோம்.

பௌத்த மதம் காஞ்சியில் சிறப்புற்றிருந்த போது, மணிமேகலா தெய்வத்திற்கு அன்று மணிமேகலை எடுப் பித்த கோயிலே இன்று காமகோட்டத் துறை காமாட்சி அம்மையின் திருக்கோயிலாக உருப்பெற்றிருப்பதாகச் சரித்திர வரலாறு கூறுகிறது. பின்னர் இவ்வாலய தெய் வத்தை உக்கிர காளியாகக் கருதி சாக்தர்கள் வழிபட்டு தங்கள் தலையைப் பலியாக்கும் வழக்கம் தொடர்ந்தது. இப்பழக்கத்தை ஒரு முடிவிற்குக் கொண்டு வரவே ஷண்மத ஸ்தாபனம் செய்தருளிய சங்கர பகவத் பாதர்கள் காஞ்சி நகர் வந்தடைந்தார்கள். ஸ்ரீகாமகோடி பீடமாகிய ஸ்ரீசக்ரத்தை அம்பிகையின் எதிரில் பிரதிஷ்டை செய்து, இவ்வழக்கத்தை மாற்றினார்கள். ஸௌந்தர்ய லஹரீ-லலிதா திரிசதி முதலிய கிரந்தங்கள் இயற்றி அருளினார்கள். பகவத் பாதர்கள் கைலாய யாத்திரை தொடங்கியது இந்தப் 'பிலம் என்ற குகையில் இருந்து தான். குகையில் நுழைந்து பின்னர் மறைந்து விட்டார் என்று கூறுவர். இன்றும் ஆதிசங்கரர்

சிலாரூபமாக முதல் பிராகாரத்தில் யோகாசனத்தில் அமர்ந்து, காமாக்ஷி அம்மையின் அருளமுதை தியான நிலையில் பெற்று சமூகத்திற்கு வழங்கி வருகிறார்கள் என்பது கண்கூடு.

இந்தப் பிலாகாசம் அமைந்துள்ள இடம் ஸ்ரீகாமகோடி ஸ்ரீகாமாக்ஷியின் வலதுபுறம் இருக்கும் ஸ்ரீதபஸ் காமாக்ஷியின் எதிரில் உள்ளது. முன்பு பார்வதி தேவி ரிஷிகளின் சாபத்தால் பூலோகம் அடைந்து, பின்பு பரமசிவனைக் குறித்து காசியில் தவம் இருந்து, காத்யாயன முனிவர் ஆணைப்படி காஞ்சியில் காமகோடி பீடத்தை அடைந்து தவமியற்றி மாமரத்தின் அடியில் மணலில் லிங்கம் அமைத்துப் பூஜித்து, ஈச்வரனுடன் இரண்டறக் கலந்தாள். இந்த தபஸ் காமாக்ஷியின் எதிரில் அமைந்துள்ளதுதான் பிலமாகிய குகை. இந்தப் பிலாகாசத்தினின்று தான் பண்டாசுரன், பந்தகாசுரன் முதலிய அரக்கர்களை அழிப்பதற்கு ஈச்வரி முற்பட்டாள். ஸ்ரீகாமகோடி காமாக்ஷியின் ஆத்ம சக்தி இந்தப் பிலாகாசத்தில் என்றும் சாந்நியத்துடன் விளங்குகிறது. ஸ்ரீகாமகோட்டத்தில் எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீகாமாக்ஷியின் ஸ்ரீசக்ர ராஜ கிரஹத்திற்கு அன்னத்தை வாகனமாகக் கொண்ட பிராம்மி, கருடனை உடைய நாராயணி, எருதினை உடைய மகேச்வரி, மகிஷனை உடைய காளி, யானையை உடைய இந்திராணி, மயிலையுடைய கௌமாரி, சிங்கத்தையுடைய வாராகி ஆகியோர் காவலாக இருக்கின்றனர்.

ஸ்ரீகாமாக்ஷியின் இடது புறத்தில் வடக்கு நோக்கி அமர்ந்திருப்பவள் தான் 'அஞ்சன காமாக்ஷி' என்னும் அரூப லக்ஷ்மி. ஒரு சமயம் தன் கணவரான மகாவிஷ்ணுவை தனது அதி ஸௌந்தர்யத்தின் நினைவால் மகாலட்சுமி பரிகாசம் செய்ய, கோபமுற்ற திருமாலும் மகாலக்ஷ்மியின் ஸௌந்தர்யம் அரூபமாகப் போய்விடும்படி சாபமிட, அந்த சாப விமோசனத்திற்காகவே காம கோட்டத்தை அடைந்து மகாலட்சுமி பராசக்தியை வேண்டித் தவமிருந்தாள். காமாக்ஷி அன்னையும் பிலத்துவாரத்தில் இருந்து வெளி

வந்து மகாலட்சுமிக்குக் காட்சி தந்தருளினள். இன்றும் காமாக்ஷி அம்மன் அர்ச்சனைப் பிரசாதம் அருப லக்ஷ்மியின் மேல் போடப்பட்டு, அந்தப் பிரசாதத்தைப் பெறுவதே மரபாகி இருக்கிறது. இந்த நிர்மால்யப் பிரசாதத்தின் விசேஷத்தால் மகாலக்ஷ்மிக்கு சுயரூபம் சித்திப்பதும், அம்பிகையைத் தரிசித்து வரும் பக்தர்களுக்கு தரிசன பலன் ஏற்படும் என்பதும் ஈச்வரியின் ஆணை. தன்னால் சபிக்கப்பட்ட மகாலக்ஷ்மி சாபம் தீர்ந்து சுயரூபம் அடைந்தாளா என் பதைக் கண்டறியக் கள்ள வேடம் பூண்டு வந்த மகாவிஷ்ணு ஈச்வரியின் அருள் பெற்று கள்வர் பெருமாளாக காயத்ரி மண்டபத்திலேயே அமர்ந்துள்ளார்.

அன்னையின் அன்பில் மனம் உருகிய மகாலட்சுமி, மால் கிடந்த பாற்கடலில் உள்ள சங்குகளைச் சேர்த்து வளையாக்கி அம்மைக்கு அணிவித்து மகிழ்கிருள் என, கவிஞர் காஞ்சி ரா. குப்புசாமி அவர்கள், காமட்சியம்மை பிள்ளைத் தமிழில்

'அரி கிடந்துஞ் துயிலு சயன
மாமரவ முள்ள ஆழி
தந்த ஒளி வீசுபல சங்குகளை யுங்கொண்டு
தான் கடைந் துற்ற வளையை
எங்கு முளையாகியெம துள்ள......

என்று பாடியுள்ளார்.

புலவர் ஒருவர் வந்தார். அரசன் முன், அவர் எடுத்த எடுப்பிலே பாடும் பொருளைக் கூறியவுடன் பாடுவார் அரசன் அவரை பின்னத்தையே வைத்துப் பாடுக என்றான். (ஒன்று, முக்கால், அரை அரைக்கால் இப்படி) உடனே காஞ்சிதான் அவருக்கு ஞாபகம் வந்ததாம். மூன்று கால் களாக கோல் ஊன்றி நடப்பதற்குள் முன்னேநரைத் தலையாக விழுவதற்குள் காலனை கால்கண்டு பயப்படுவதன் முன் விக்கி இருமி, அவதிப்படு முன்னே, ஒரு மாமரத்தின் கீழ் உறை ஏகாம்பரேச்வரனை உள்ளத்தே கொள் என்னும் பொருள் படும் படியும், அதேசமயம் பின்னங்கள் வருவதாகவும் அமைந்த பாட்டை,

முக்காலுக் கேகாமுன், முன்னறையில் வீழாமுன்
அக்காலரைக் கால் கண்டஞ் சாமுன்—விக்கி
இருமாமுன் மாகாணிக் கேகாமுன் கச்சி
ஒரு மாவின் கீழறை என்று ஓது

என்று பாடினுராம். அறம் வளர்த்த நாயகி கொலுவீற்றி ருக்கும் பீடம் காஞ்சி, நகரில் உள்ள மற்றகோயில் மூர்த்திகள் வீதிவலம் புறப்பட்டால் அன்னையின் கோயிலைச் சுற்றித் தான் வரவேண்டும்.

ஆசைகள் அற்ற இடத்துக்கு வந்தால் காமகோடி அன்னையை உள்ளத்தில் கண்டு களிக்கலாம் என்று உணர்த்தும் படியாகவும் அதேசமயம் உன் அபிலாஷைகள்

நிறைவுபெற அன்னையை நாடு என்று பொருள்பட 'காமகோடி' அன்னையின் திருப்பெயர் விளங்குகிறது.

பஞ்சலிங்க க்ஷேத்திரங்களில் ப்ருத்விஸ்தலமான இப்பதி யின் நாயகியாக பொற்சதங்கைகளும், சப்திக்கும் ஒட்டி யாணமும் கொண்ட 'காமாட்சி தேவி' பிரகாசிக் கிருள். அன்னையின் திரு நாமத்தில் உள்ள எழுத்துக்கள் ஆனந்தக் கடலாகத் திகழ்கிறது. 'இதைத் திரும்பத் திரும்ப உருப்படுத்துவதில் ஏற்படும் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை' என்கிருர், அன்னையைப் பல்வேறு வடிவில் கண்டு பேரின்பம் எய்திய காவ்ய கண்ட கணபதி.

"காஞ்சீ ரமண்யா: குருதாம் க்ருஹஸதே க்வாணொர்முதம்
காமபி கிங்கிணீஞம்
காஞ்சீ புவ: புண்யபுரீ யதீந்த்ர த்வா மம்பிகாமநாம
ரவைர் திஞேது."

கவியில் சிறந்தவன் எங்கள் காளிதாசன்! இல்லை தண்டிதான் தலையாவான் என்று ஊர்மக்கள் கட்சி கட்டி மோதினர். எங்கும் இதே பேச்சு. வஞ்சகம் இல்லா கவிஞர் கள் செவிமடுத்தனர். அதிர்ந்தது அவர்கள் மனம்: 'எம்மை விட தண்டியே சிறந்தவர்' என்ருன் காளிதாஸன். 'அல்ல காளிதாஸனே ஏற்ற மிக்கவர்' என்ருர் தண்டி. கேட்பார் இல்லை. கடைசியில் போட்டி ஒன்றும் முடிவாகியது. வேறு வழியின்றி இருவரும் அதில் கலந்தனர். நாட்கள் நகர்ந்தன. முடிவு தீர்மானமாகவில்லை. கடைசியில் காளியையே நீதி வழங்க நியமித்தனர். வெள்ளியன்று தீர்ப்பு என்றது அசிரிரி. அரசர் உள்பட பெருங்கூட்டம் கூடியிருந்தது. இறைவியின் தீர்ப்பாயிற்றே! ஏற்றமான கவி யார் என்ற தீர்ப்பைக் கேட்க திரளான மக்கள் திரண்டனர்.

குறித்த நேரத்தில் கூறியவாறு அன்னை "கவிர்தண்டி" என்றதுமே பொறுமிய காளிதாஸன் கூறுபவர் யார் எனவும் ஆராயாது, வசைமாரி பொழிய, வாய் திறககுமுன், 'மூகோ பவ' என்றனள். கவிமழை சிந்திய காளிதாஸன் ஊமை யாயினன்,

கவியில் சிறந்தவன் தண்டி. நீ சாதாரண கவியல்ல. நானே நீ. இதையறியாது என்னை இகழ நினைத்தாய். அடுத்துவரும் பிறப்பில் என்னைப் போற்ற வாக்கையும் பெரும் புகழையும் அடைவாய் எனக் கூறினள் காளி.

தொடர்ந்த பவம் தலைதூக்க இப்படி எத்தனையோ அவதியான செய்திகள். பதியிற் சிறந்தது காஞ்சி. காளி தாஸன் ' நகரேஷு காஞ்சீ என்றான். கூறினவன் மறப்பானா? பிறவியில் மூகனாக வந்தான். முன் விட்டக்குறையில் தொடங்கியது தவம். காமாட்சி தேவியை உள்முகமாக ஏற்றி தவசிகள் பலர் வீற்றுள்ளனர். சாதனைபுரியும் வித்தக சோதனைத்திக்கு தன்னை பலியிடாது மூகனும் மெய் மறந்து அன்னையின் பாதமலரில் சிந்தை பொதிந்துள்ளனன். தேவி விளையாட்டாக கன்னியுருக் கொண்டு தாம்பூலம் தரித்து மூகன் முன் பிரசன்னமாயினள். வாயைத் திற, தாம்பூலம் துப்புகிறேன் என்றாள். முன்னைப் புண்ணியம் உந்த வாயைத் திறந்தான். அன்னை கருணையோடு உமிழ்ந்தனள் எச்சிலை. அவ்வளவில் அன்னையின் அருட்சக்தியை மீண்டு பெற்றான் மூகன் ! கவிமழை பொழியத் தொடங்கினான். பாதம், புன் சிரிப்பு இப்படி ஒவ்வொன்றையும் நூறு நூறு ஸ்லோகங் களாக ஊமைக்கவி ஐந்நூறு ஸ்லோகங்களைப் பாடினான். அது இன்றும் ' மூக பஞ்சசதி ' என்று போற்றப்படுகிறது.

அன்னையின் தாம்பூல கபலத்தின் பெருமையை சங்கரரும் கூறுகிறார். குமரப் பெருமான், சூரஸம்ஹாரம் முடித்து திரும்புகையில் அன்னையின் மாளிகைக்கு சென்ற சமயம் அன்னை உணவு முடித்து தாம்பூலம் தரித்துக் கொண்டிருந்தாள் வெற்றியுடன் வரும் தன் செல்வக் குழந்தைக்கு கடித்துமென்ற தாம்பூல எச்சிலைத் தந்தாளாம். அதனால்தான் தந்தைக்கு உபதேசிக்கும் திறனடைந்து ' ஞான பண்டிதன் ' எனப் புகழ் பெற்றான் விசாகன்.

" ரணே ஜித்வா தைத்யாந் ; அபஹ்ருதசிரஸ்த்ரை ;
கவசிபி :
நிவ்ருத்தை : சண்டாம்ச த்ரிபுர ஹர நிர்மால்ய விமுகை :

விசாகேந்த்ரோபேந்த்ரை : சசிவிசத கர்பூர சகலா
விலியந்தே மாதஸ்தவ வதன தாம்பூல கபலா :''
("ஸௌந்தர்ய லஹரி")

அருணாசலத்து அபீத குசாம்பிகை.

"ஞானத் தபோதனரை வாவென்று அழைக்குமலை' அண்ணாமலை'' என்று புகழ்பரப்பி முகில் உலாவும் வான ளாவிய கோபுரத்துடன் நிமிர்ந்து கம்பீரமாக நிற்பது அண்ணாமலைத் தலம்.

விளையாட்டாக இறைவனது கண்களை கையினால் மூட, சூரிய சந்திரர்களையே கண்களாகக் கொண்ட இறைவனின் அருளொளியின்றி உலகம் யாவும் இருண்டது. அதனால் உலகிற்கு விளைந்த துன்பம் நீங்க, தாயான தற்பரை தரணியில் வந்து காஞ்சியில் இறைவனுக்கு மணலால் திருவுருவு அமைத்து வழிபட்டு இறைவன் ஊக்குவித்தபடி அண்ணாமலைக்கு வந்து இடப்பாகத்தை பெற்று 'அர்த்தநாரி' யென்ற பெயரை இறைவனுக்கு அளித்தாள். அருள் பெருகும் அம்மனின் சந்நிதிக்கு வந்து அபீத குசாம்பாளை தரிசிக்கும் பக்தனுடைய எல்லா எண்ணங்களும் நிறைவுபெறும் என்கிறார் காவ்ய கண்டம். ஞான குருவைத் தேடி அலைந்த கவி காவ்ய கண்ட கணபதி முனிக்கு தவ ச்ரேஷ்டரான ரமண பகவான் குருவாக இத்தலத்தில் கிடைத்தார் என்றால் அபீதகுசாம்பிகை அபீஷ்டங்களை நிறைவு செய்பவள் என்பதற்கு வேறு சான்றே தேவையில்லை. அழகிய செப்பு வடிவத்தில் அர்த்தநாரியாக இறைவனும் இறைவியும் அமைந்ததை இத்தலத்தில்தான் காணலாம்.

"ஆலோகதே அபீதகுசாமயி த்வா மாலோல சித்தா
மருணாசலே ய:
ிர்வேதவான் பர்வஸுதாம்சுவக்த்ரே ஸர்வே வசேதஸ்ய
பவந்தி காமா:'

குகை நமசிவாயர், குரு நமசிவாயர், சேஷாத்ரி, ரமணர் முதலிய மகலரியர்கள் எல்லாம் இத்தலத்தை அடைந்து முக்தி பெற்றனர்.

தேஜோலிங்க ரூபியான அண்ணுமலையானின் பெருமையையே கொண்டு சிவக்ஷேத்திரமாக விளங்கும் இது ஒரு சக்திபீடம் ஆகும் என்பதை நினைத்தாலே தலத்தின் பெருமையும் சிறப்பும் மனத்தை குளிர்விக்கிறது. அருணுசலத்தையே வாசஸ்தலமாக்கிக் கொண்ட சேஷாத்ரி ஸ்வாமிகள் ஒரு தலை சிறந்த தேவிதாசர், குரு நமசிவாயர் என்ற தவமுனிவரோ அம்மையின் கரங்களாலேயே அமுதளிக்கப்பட்டவர்.

இச்சக்தி பீடநாயகியின் அருளால் சென்ற இடமெல்லாம் அம்மையை நினைந்து பாடுவார்.

---



---

" மின்னும்படி வந்த மேககளத்து ஈசருடன்
மன்னும் திருமுகத்து வாளியே—பொன்னின்
மலையாளே ! தாயே ! வன்மனத்தே நின்ற
மலையாளே ! சோறு கொண்டுவா என்பார்.

அமுதளிப்பாள் அகிலாண்ட நாயகி.

ஆதிசங்கரர் தனது ஸௌந்தர்ய லஹரியில் " தவாபாங்கே லோகே பதிதம் " என்று 'எதேச்சையாக உனது த்ருஷ்டியில் விழுந்த மனிதன்' என்று ஒரு இடத்தில் கூறுகிறார். அப்படியே அபீத குசாம்பாளின் தரிசன மாத்திரத்தில் நற்பயனை அடைகிறான் பக்தன்.

திருவொற்றியூர்.

"தாயே! குழந்தைபோல் உன்னை நேசிக்கின்றேன். என்னை உருவாக்கி, சீர்குலையாது வாழ்க்கையைச் செப்பனிட்டு என்னைச் தீநெறியினின்று புனிதனாக்கிய உன் பேரருளுக்கு நன்றியை செலுத்துகிறேன். வேறென்ன கைம்மாறு உனக்கு யான் செய்ய முடியும்! இதுகாறும் என்னைக் காப்பாற்றி உள்ளும் புறமும் தூய்மைப்படுத்தியதுபோல என்றும் உன் அருட்பார்வை என்மீது விழுந்த வண்ணமே இருக்க அருள் செய். உனது விருப்பமே எனது விருப்பமாக அமையப்படும். வாழ்க்கையில் இன்ப துன்பங்களை நீ எவ்வாறு விதிக்கின்றாயோ அவ்வாறே ஏற்றுக்கொள்ளும் மனச்சாந்தியை எனக்கு அளிப்பாயாக. உடற்கூட்டில் வதியும் உயிர்பறவை உள்ளபோதே உன்பேரருளுக்கு பாத்திரமாகி உன்னோடு ஒன்றி பேரானந்த நிலையிலிருக்க அருள் புரியம்மா :

தூய்மையும் வாய்மையும் கொண்டு, விரதங் காத்து வரினும் தெரிந்தும் தெரியாமலும் அடிக்கடி நான் பலவித மான தவறுகளைச் செய்து விடுகிறேன். என்னுடைய குறை களைக் கவனியாது குணத்தை மட்டும் கொள்ளும் ராஜ அன்னமே ! பெருங்கருணைப் பிழம்பே ! என் தவறுகளை மன்னித்து அருள்வாய், மீண்டும் தவறிழைக்காமல்

நன்மைக்கும் தீமைக்கும் உள்ள வேறுபாட்டை ஆராய்ந்து நல்லொழுக்க வழியில் நிற்க மன உறுதியை எனக்குக் கொடு.

மேற் சொன்னவாறு ஒருபக்தர் மண்டியிட்டு உரக்கப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தார். ராஜ அன்னமே! ஆகா எவ்வளவு உயர்ந்த உவமை! அன்னத்தின் சிறப்பு பாலையும் நீரையும் கலந்து வைத்தாலும் நீரை நீக்கி பாலைக் கொள்ளும் தனித்தன்மை வேறு எதற்கும் இல்லையே! அது போல் குற்றமும் குணமும் கலந்த நமது வாழ்வில் அன்னை குற்றத்தைப் பார்த்தாளானல் ஒருபிடி சோறு கூட கிடைக்காது. குணத்தின் விசேஷம் கொள்ளுவதால் தான் நாம் உய்ய உயர்கதியளிக்கிருள். சங்கரரும் தனது வாக்கினுல்,

"ஸமுன்மீலத் ஸம்வித் கமல மகரந்தைக ரஸிகம்
பஜே ஹம்ஸத்வந்த்வம் கிமபி மஹதாம் மானஸசரம்
யதா லாபாத் அஷ்டாதச குணித வித்யா பரிணதி:
யதா தத்தே தோஷாத் குணமகிலம் அப்ய: பய இவ ||

என்று தேவியின் குண விசேஷத்தையும் குற்றம் நீக்கி குணம் கொள்ளும் தன்மையையும் கூறுகிருர்.

ஐயடிகள் காடவர் கோன் நாயனர் 'மூவுலக ஆளும் பேறு வரினும் ஒற்றியூரைப் பற்றி, பசி வந்தபோது பிச்சை ஏற்று இருத்தலையே விரும்புவேன்' என்கிருர்.

"தஞ்சாக மூவுலகும் ஆண்டு தலையளித்திட்டு
எஞ்சாமை பெற்றினும் யான் வேண்டேன்—நஞ்சம்
கரந்துண்ட கண்டர் தம் ஒற்றியூர் பற்றி
இரந்துண்டிருக்கப் பெறின்"

என்பது வெண்பா.

"ஆதிபுரி க்ஷேத்திரம் என்னும் இத்தலத்தில் கோயில் கொண்டுள்ள வடிவுடை அம்மன்-திரிபுர சுந்தரியை-வணங்க அகமும் புறமும் தூய்மைபெற்று, கெட்டகுணங்கள் விலகும்.

முக்தி நிச்சயம்" என்கிறுர் காவ்யகண்டம். அம்மஹான் இங்கு தாமும் தவமியற்றியிருந்தார். அப்போது அவருக்கு தியானத்தின் போது கபாலம் வெடித்தது. அது ஸ்ரீ ரமணுரால் தடுக்கப்பட்டு உலகிற்கு அவராற்ற வேண்டிய தொண்டின் நிமித்தம் மீண்டும் பழய நிலை போலானது என்று கூறுவர்.

" த்ருஷ்ட்வா வதூமாதி புரீச்வரஸ்ய யோ லோசனு
ரோசக மாதுனுேதி
தலயாந்தரங்கம் த்ருதஸர்வஸங்கம் பூயோபவா
ரோசகமாவ்ருணுேதி "

வடிவுடை அம்மான் சந்நிதியைத் தவிர வட்டப் பாறை அம்மன் என்னும் காளியின் சந்நதியும் உண்டு.

பட்டினத்தடிகள் பேறுபெற்ற க்ஷேத்திரம் திருவொற்றியூர். கண் மூன்றுடைய கண்டங்கரிய கரும்பு இனித்தது அவருக்கு. சந்திரருக்கும் சங்கிலிக்கும் இனிது மணம் முடித்த இறைவனுக்கு எழுத்தறியும் பெருமாள் என்றும் ஒரு திருநாமம் உண்டு. மாந்தாதா என்ற மன்னன் திருக்கோயில்களின் கட்டளையைக் குறைத்து எழுதினான். அந்த ஏட்டில் இறைவன் 'ஒற்றியூர் நீங்கலாக என்று' எழுதினன். அதனால் எழுத்தறியும் பெருமாள் என்னும் நாமமும் கொண்டனன். மேலும் கலிய நாயனார் இறைவனுக்கு தட்டுவராது விளக்கு எரித்தார். இறைவன் சோதனையால் வறுமை ஏற்பட, கடைசியில் தன் இரத்தத்தையே விட்டு விளக்கு எரிக்க முயன்றார். இறைவன் அருள் பாலித்து அவருக்கு முக்தியளித்தான். ஆகவே ஆதிபுரி புராதனக்ஷேத்ரங்களில் ஒன்று.

"முன்னைப்பழம் பொருட்கு முன்னைப்பழம் பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே"

என்று மணிவாசகப் பெருந்தகை கூறியதுபோல் இன்றும் பழமையுடனும் புதுமையுடனும் மிளிர்கிறது.

காளஹஸ்தி

எடுத்த பிறவி ஈடேற இவ்வுடலைக் காப்பாற்றி அதனுடைய உதவியால் பிறவிக்கடலைத் தாண்ட வேண்டும். இது அருமையான பாண்டம், எடுப்பார் கைப்பிள்ளைபோல் பழக்குவான் விதமே பழகி உதவியாகவும்; எதிரியகாவும் இருக்கும் மாயாவினோத மான உடற்கூடு. அதனால்,

ஊத்தைச் சடல மென்றெண்ணாதே—இதை
உப்பிட்ட பாண்டமென் றெண்ணாதே—
பார்த்த பேருக்கோ ஊத்தையில்லை—இதைப்
பார்த்துக்கொள் உன்றன் உடலுக்குள்ளே

என்று கூறினர் அனுபவிகளான ஆன்றோர்.

இவ்வுடலை ஆட்டிப் படைக்க நாம் கற்றுக்கொள்ள வேண்டும். இல்லையேல் காம,க்ரோத, முதலியன முக்குண

வசப்பட்டு இவ்வுடல் நம்மை ஆட்டும். இவைகள் எழுப்பும் நசைகளைத் துறக்க வேண்டும்.

" துறப்பெனும் தெப்பமும் துணை செய்யாவிடில்
பிறப்பெனும் பெருங்கடல் பிழைக்கலாகுமோ ?"

துறந்து உள்ளொளியை உள்ளத்தே காண்பவர்கள் உத்தமர்கள். ஆவிக்கு மோசம் வருமே என ஏங்கிய மெய் அன்பர்கள். அன்பினால் தூயதங்கமானவர்கள். இடையறாது இறைவனை என்றும் பண்பினால் என்பும் உருக இறைஞ்சும் அடியவர்கள்.

' இனம் இனத்தைச் சாரும் ! என்பதுபோல் அன்பெனும் மந்திரத்தால் அன்புருவான ஆண்டவனையே பெற்றவர்கள். அன்புக்கு லக்ஷணம் கூறவேண்டுமானால் 'கண்ணப்பனைத் தவிர கூறவும் இயலுமோ ?' 'கண்ணப்பன் ஒப்பதோர் அன் பின்மை கண்டபின்' என்று நால்வரில் ஒருவரே வியக்கிறாரே! கண்ணப்பநாயனார் என்றால் காளத்தி மனதில் வரும்.

சீகாளத்தி – காற்றுதலம் — பஞ்சபூத க்ஷேத்திரத்தில் வாயுத்தலம் : இது தென் கைலாயம். இருப்பது பொய் போவது மெய் - உள்ளேயும் வெளியேயும் ஓடி ஆடும் இம் மூச்சுக்காற்று இல்லையேல் உடல் பிணம். நாம், நமது எனும் இவ்வுடலை இக்காற்று இல்லையெனில், நரி எனது என்றும், கழுகு எனது என்றும் நெருப்பு எனதே எனவும் பேய்கள் தமதே எனவும் கூறும் என்கிறார் பட்டினத்தார். முக்கியமான காற்றுக்கு முக்கியத்வம் தரும் தலமூர்த்தமாக முதல்வனார் 'காளத்தி அப்பர்' எழுந்தருளியிருக்கிறார். 'காற்றுள்ள போதே தூற்றிக்கொள்'. இவ்வுடலில் காற்று உள்ளபோதே உன் உடலின் அழியும் தன்மையை நீ தூற்றி (வெறுத்து) (ஞானமாம் ஆன்ம ஒளியை) கொள் என்று கூறினர் அறிஞர். அதனால் இறைவியும் " ஞானப்ரஸூனாம்பிகை " என திரு நாமம் பூண்டாள் இங்கு.

கைலையில் வாயுபகவனுக்கும், ஆதிசேடனுக்கும் பலப் பரீட்சை நடந்ததாம்.

கைலையின் மூன்று சிகரங்களை பெயர்த்து எறிந்தான் வாயுபகவன். ஒன்று விழுந்தது சீகாளத்தியில். அடுத்தது திருச்சியில்-மூன்றுவது திரிகோணமலை-இலங்கையில் விழுந்தது. ஆக இம்மூன்றும் கயிலைக்கு சமமாக தக்ஷிண கைலாயமாக போற்றப்படுகின்றது.

முன்னர் வீழ்ந்திரு சிகரி காளத்தியாமொழிவர்
பின்னர் வீழ்ந்தது திரிசிராமலையெனும் பிறங்கல்
அன்ன தின் பிற தமைந்தது கோண மாஅசலம்
இன்ன மூன்றையும் தக்ஷிண கயிலை யென்றிசைப்பார்

(செவ்வந்திப் புராணம்)

சிறும் பாம்பும், காற்றும் பூசித்த தலம். நம் உடலிலேயே நாதன் உளன். சிறும் அரவமே பஞ்சஇந்திரியங்கள் (ஐந்து தலைநாகம்) மூச்சுக்காற்றுதான் யாரும் அறிந்தது. இவ் வைந்து தலைநாகமாம் இந்திரியக் கூட்டமும், முச்சும் நமது கட்டுக்கு அடங்கி இறைவனை பூசிக்க வேண்டும் என்பதே. குறிக்கோள். இத்தலத்து கண்ணப்பன் என்ற வேடுவர் (திண்ணனுர்) அன்பின் மிகுதியால், வாயே கலசமாகக் கொண்டு, இறைவனை அபிடேகித்தார். ஆறே நாட்களில் இறைவனுக்கு தன் கண்ணையே பிடுங்கி அர்ப்பணித்தார். மீண்டும் அடுத்த கண்ணில் இரத்தம் வரவே காலினுல் அடையாளம் வைத்துக் கொண்டு தனது அடுத்த கண்ணையும் பிடுங்கப் போகும் திண்ணிய அன்பு கொண்டவரை இறைவன், ‘நில்லு கண்ணப்ப நில்லு கண்ணப்ப’ என்று தடுத்து ஆட்கொண்டார்.

இறைவனின் பாடலில் பொருட் குற்றம் கண்ட நக்கீரர் குமரனின் அருளால் தக்ஷிண கைலாசமான இப் பதியைக் கண்டதும் தன் குஷ்ட நோய் நீங்கப் பெற்று இன்புற்றுர்.

“உன்னியிருந்து நினைமின்கள் உந்தமக்கோர் ஊனம் இல்லை” என்ற வாக்குபோல் உள்ளேயே ஆழ்ந்து அன்னையின் அருள்கடலில் குளிக்கும்படி கூடும் நாள்தான்

நம் பிறவி பெற்ற நாள். நிழல் மனிதனைத் தொடரும். நிழல் ஒழிய வேண்டுமானால் நிழல் இல்லா இடத்தில் நிற்க வேண்டும். அப்படியே பிறவி நீக்கவேண்டுமானால் அதை அளிக்க வல்ல கைலாய நாதனின் துணைவியைத்தொழு. அவ்வன்னையின் பெயரே உனக்கு அஞ்ஞானம் என்னும் இருளைப் போக்கி ஞானம் என்னும் ஒளியை வழங்கும் என்று தெரிவிக்கவில்லையா ?

" ஸ்ரீகாள ஹஸ்தி ஸ்தல தர்சனஸ்ய கைலாஸ வீக்ஷாம்
புனருக்தி மாஹு:
ஞானம் ப்ரதாதும் சரணச்ரிதேப்யோ ஞானம்பிகா
யத்ர நிமத்ததீக்ஷா "

என்கிறார் காவ்யகண்டம், அன்னையின் சரணத்தை நிஜமாக சரணடைந்து உய்ய வழிதேடுவோம்.

ஸ்ரீசைலம்

அம்பிகையின் மூன்று ஸ்தலங்கள் விசேஷமாக கருதப் படுகிறது. இவைகளை அம்பிகை த்ரய தலங்கள் என்கின்றனர் மூகாம்பிகை, ஞானம்பிகை, பிரமராம்பிகை. ஸ்ரீசைல நாயகியே ப்ரமராம்பிகை. எனப்படுகிறாள்.

இயற்கைக் காட்சிகளின் எழிலூட்டும் இத்தலப்பெருமை எழுத ஏடுகொள்ளாது. சிவபெருமானின் த்வாதச ஜோதிர் லிங்கத்தில் இதுவும் ஒன்று.

காமம், குரோதம், மோஹம், லோப, மதம், மாத்சர்யம் என்னும் ஆறு கால்களையுடைய மனம் என்னும் வண்டு பராம்பிகையின் பாதாரவிந்தம் என்னும் தாமரையில் ஞானம் என்னும் தேனை உண்ணவேண்டும். அப்போது ' பவம் ' என்னும் பூர்வ ஜென்ம க்லேசங்களால் தபிக்கப் படும் நாம் நிம்மதி பெறுவோம். ஸ்ரீசைல சிகரத்தைக் கண்ட மாத்திரத்திலேயே பாவம் தொலையும். (வடமொழியில் பிரமரம் எனறால் வண்டு) மல்லிகார்ஜுனர் என்ற இறைவனை மல்லிகை மலராகவும், அதனுடைய பக்கத்திலேயே ஹ்ரீம்

கார, சப்தம் செய்தவாறு (ப்ரமர) அம்பிகை சுற்றிச்சுற்றி வருகிறதாக நினைத்துப்பார்க்கையில் சிவசக்தி ஐக்யமே இவ்வுலகம் நிம்மதியுடன் இயங்க காரணம் என தெளிவு பெறலாம்.

இல்லாததை இருப்பதாகவும், இருப்பதை இல்லாத தாகவும் கருதுபவனை பிரமை பிடித்தவன் என்கிறோம். நம் வீடு, நம் ஊர், நான், எனது என்று எதையும் தன்னுடைமை யாகக் கருதும் நினைவே பிரமை. உண்மையில் இவ்வீடு, பணம், முதலியன நமதானால் நம் இறுதிக்காலத்திற்கு

பிறகும் பயன் படவேண்டுமே ! அது நம் வாழ் நாளிலேயே சில சமயம் நம்மைவிட்டுப் போய்விடுகிறது. அதனுல் நமது என்ற வீண் மயக்கம் இங்கு ஏற்படுகிறது. இது பற்றுக்கும் துன்பத்துக்குமே காரணமாகும். ஆனுல் இவையாவும் இறைவியாம் அன்னையுடையது, அவளுடைய குழந்தைகளே இவ்வையகத்துள்ளவர்கள். ஆகவே எல்லோரும் நமது சுற்றம், என்று பார்ப்போமானுல் அது தெளிவு. அல்லது ஞானம்.

இதையே, பாரதியார்.

காக்கை குருவி எங்கள் சாதி—நீள்
கடலும் மலையும் எங்கள் கூட்டம்
நோக்கும் திசையெல்லாம் நாம் அன்றி வேறில்லை
நோக்க நோக்கக் களியாட்டம்''

என்று ஆனந்தமாக மனதை விரிவாக்கி களிப்பெய்யப் பாடுகிருர்.

இப்படிப்பட்ட பல ஜென்ம பழக்கமான பிரமை நீங்கி ப்ராந்தி ஒழிந்து தெளிவு அடைந்து அஸங்கனுக இருக்க வேண்டுமானுல் வண்டுகள்போல் முன்கேசம் நெற்றியில் புரளும் பிரமராம்பிகையை தரிசனம்செய் என்றுர் ஸ்ரீகாவ்ய கண்ட கணபதி முனிவர்.

" ஸ்ரீசைல ச்ருங்கஸ்ய விலோகனேன ஸங்கேன
ஹீனோ பவிதா மனுஷ்ய :
தாமஸ்தி யத்ர ப்ரமராலகாயா : சாந்த ப்ரமம்
தத் ப்ரமராம்பிகாயா :

பத்ரகர்ணி—கோகர்ணம்

பெரிய சிவக்ஷேத்ரம் கோகர்ணம்: சூர்யோதயம், ஆனதும் இருள் விலகுவது போல் கோகர்ணத்தில் ஸ்நாநம், ஜபம், சிவ தரிசனம் முதலியன பரம பாவனமாக்க வல்லது இராவணனுல் கைலாயத்திலிருந்து கொண்டுவரப்பட்ட " மஹாபலேச்வரர் " மஹா கணபதியின் உதவியால் இங்கு

பிரதிஷ்டையானுர் என்று புராணம் கூறும். இங்குள்ள அன்னே பத்ர கர்ணி எனப் புகழ் பெறுகிருள் : மங்களகர மான புத்தியும், ஸர்வ அபீஷ்டஸித்தியும் பெற ஆசையுள்ள வஞக இருந்தால் பத்ர கர்ணீயை சேவை செய்ய வேண்டும் என்கிருர் கணபதி முனிவர்

" தீரே விபஸ்சித்வர பச்சிமாப்தே கோகர்ணகாம்
லோகய பத்ர கர்ணீம்
புத்திம் சிவாம் ஸர்வமனேரதாஞம்
ஸித்திம் ச யத்யஸ்தி மனேதிகந்தும் "

பத்ரம் என்ருல் க்ஷேமம் என்று பொருள்படும். மங்களம் நமக்கு வேண்டுமென்ருல் அமங்களமானவற்றை நீக்க வேண்டும் என்று ஆகிறது. மஹாதபஸ்விகளும், புத்திமான் களும் அனுஷ்டித்த உயர்வழியே நமக்கு மங்களத்தையும் உண்டுபண்ணும்.

கொல்லூர்

கோகர்ண புண்ணிய க்ஷேத்திரத்தின் அருகில் மேற்கு கடற்கரை யோரத்தில் கொல்லூர் என்னும் பகவதித்தலமும் சக்திபீடங்களில் ஒன்று. இங்கு அன்னே மூகாம்பிகை எனப் போற்றப்படுகிருள்.

'குடசாத்ரி' மலேயென்றும் சஞ்சிவினி என்றும் கூறப் படும் மலேயடிவாரத்தில் 'ஸௌபர்ணிகா' நதிக்கரையில் மங்களத்தை உண்டுபண்ணும் மஹாலக்ஷ்மி அம்சமாக இத் தேவி கோயில் கொண்டிருக்கிருள். சங்க, சக்ர, வரத அபய முத்திரையுடன் தன்னே சரணடைந்தார்க்கு உறுதுணையாக அன்னே பத்மாஸனத்தில் வீற்றிருக்கிருள்.

வனத்தின் அடர்ந்த இயற்கை சூழலில் உள்ள கோயிலானதால் தபோவனமாக, மனநிம்மதிக்கு காரண மாக, இருக்கிறது இப்பதி. இத்தலமே ஸ்ரீசக்ர ரூபமாக காண்கிறது. கோலமஹரிஷியின் பெயரால் கோலபுரம்

என்பது மருவி கொல்லாபுரம் என வழங்கும் இங்கே தான் தேவி மூகன் என்ற அசுரனைக்கொன்று அவனுடைய வேண்டுகோளின்படி, தன்னை தரிசிப்போருக்கு சௌபாக்கி யங்களை வாரி வழங்குகிருள்.

உக்ர தீவிர சக்திப்பிரதிஷ்டைகளை சக்ரப்பிரதிஷ்டை களால் உலக உபகாரமாக செய்து "ஸ்ரீ சக்ர ப்ரதிஷ்ட விக்யாத" என்று விருது பெற்ற ஸ்ரீ சங்கரர் இங்கு வந்து 'ஸர்வக்ஞ பீடம்' என்ற இடத்தில் தவமிருந்ததாக நம்பப் படுகிறது.

இத்தெய்வ நாயகியின் முன்னே கோல மஹரிஷியால் பூஜை செய்யப்பட்ட ஜ்யோதிர்லிங்கம் (ஸ்வயம்பு) ஸ்வர்ண ரேகையுடன் சிவசக்தி ஐக்யமாகப் பிரகாசிக் கின்றது. இருபாகமாக தங்க ரேகையால் பிரிக்கப்பட்டு காணும் இம் மூர்த்தியில் இடது பாகம் மஹாகாளி, மஹா லக்ஷ்மி, மஹா ஸரஸ்வதி ரூபமாகவும், வலப்பகுதி ப்ரம்ம, விஷ்ணு, ருத்ராம்சமாகவும் விளங்குகிறது.

கரவீரம்

கோலமஹரிஷியின் தவப்பயனும் மூகாசுரனைக்கொன்று மூகாம்பிகை என்ற பெயருடன் விளங்கும் கொல்லூர்தேவி போலவே, இக்கரவீர க்ஷேத்திரமும் மஹாலக்ஷ்மி பீட மாகும். கோலாப்பூரில் விளங்தும் இந்ததேவி கோல்ஹாசுரன் என்ற அரக்கனைக் கொன்று அவன் பிரார்த்தனைக்கு இணங்கி 'கோஹலா' என்னும் பழத்தை ஆண்டுதோறும் ஏற்கிருள். இத்தலமும் அவ்வசுரன் பெயரால் அழைக்கப்படுகிறது' பம்பாய் பெங்களூர் ரயில் பாதையில் உள்ளது கோலப்பூர்.

இவ்வுலக வாழ்வு அநித்யம். இதில் நம் ஆயுள் ஒட்டைக் குடத்திலிருந்து ஒழுகும் நீர்போல் போய்க் கொண்டிருக் கிறது. ப்ரம்ம ஸ்வரூபியான தேவியின் பாதாரவிந்தமே ஸகல துக்கமும் நிவர்த்தியாக்கும் என்று மலமாயை நீங்கின மனதுடன் அன்னையை உபாசிக்கும் பக்தனுக்கு எளிதில் முக்தி என்னும் ஸ்தானம் கிடைக்கிறது என்பதை கவி காவ்யகண்டம் வெகு அழகாக வர்ணிக்கிருர்! ஸாந்நித்யத்

துடன் விளங்கும் இப்பராசக்தி உலக வாழ்க்கையை வெறுத்து விரக்தியுடன் வந்து தரிசனம் செய்யும் அந்த பக்தனுக்கு முக்தி என்னும் பெண்ணை கலியாணம் செய்து வைக்கும் சக்தி வாய்ந்தவள் என்று முக்தியைப் பெண்ணாக ஒப்பிட்டு காவ்ய ரஸனையுடன் கூறுகிறார்.

" தாம்னி ப்ரஸித்தே கரவீரநாம்னி
புண்யாபிதானம் க்ருத ஸந்நிதானும்
தேவீம் பராம் பச்யதி யோ விரக்தோ முக்தே :
ஸ பாணிக்ரஹணாய சக்த ;"

துளஜாபுரி

சத்ரபதி சிவாஜியின் குருவான இராமதாஸரும் சிவாஜியும் உபாஸித்த ப்ரத்யட்ச தேவியான பவானியே துளஜாபுரி நாயகியாக எட்டுக் கரங்களுடன் காட்சியளிக்கிருள் ! வீராங்கனையாகக் காட்சி தரும் இவ்வன்னை ஸ்வயம்பு மூர்த்தம் என்று கருதப்படுகிறது. வருஷத்தில் பதினெட்டு நாட்கள் நித்திரையில் இருப்பதாக கூறுவர். அப்போது பூஜை செய்வதில்லை. எல்லோருக்கும் ஞானம் அடைய ஆசையிருக்கிறது. ஆனால் அதை அடைய முயற்சி தான்

இருப்பதில்லை. ஒரு வேளை ஆத்ம ஞானம் போதிக்கும் நூல்களைப் படிப்பதால் வருமோ எனின், தர்க்கம், நியாயம் என வாதப் பிரதிவாதத்தோடு அவைகள் நின்று விடுகின்றன. மேன்மேல் போக அனுகூலமாக இருப்பவைகளான இந்நூல்கள் கூட தடைதான். ஆகவே, காலம் வீணே சழிகிறது ; வாழ்நாளும் வீணே போகிறது என்று எண்ணாமல், வீண் வார்த்தைகளிலும், விளையாட்டு, உல்லாசம், போகம் என்று காலத்தை வீணடிக்காதே. இப்பவானியின் மூலம் நீ ஆத்ம ஸாம்ராஜ்யத்தை உடன் அடையலாம். ஏனெனில் கருணையுடன் விளங்கும் இம் மாதாவை நீ "பவானி என்னை கருணாகடாக்ஷம் செய்ய வேண்டும்" என்று நினைத்து பிரார்த்தனையைத் தொடங்கினதுமே ஸாயுஜ்ய பதவியை அளித்து விடுகிறாள் ; அதாவது 'பவானித்வம்' 'பவானி நீ' என்பதைக் கூப்பிடும் அர்த்தத்துடன் பக்தன் கூறினாலும், தேவி, தனது இயல்பான கருணையுடன் அதை வேறு விதமாக 'நீயாக நான் ஆகின்றேன்' என்று வேதாந்த மஹாவாக்கியமாக மாற்றி பொருள் செய்து கொள்கிறாளாம். அதனால் 'நான்வேறு நீவேறு' என்று இல்லாமல் அபேத ஞானம் அடைந்ததாக எண்ணி உடன் தனது ஸாயுஜ்ய ஸாம்ராஜ்ய பதவியை பக்தனுக்கு அளிக்கிறாளாம் :

சங்கரர் தனது ஸௌந்தர்யலஹரியில் இதே கருத்தை

"பவானி த்வம் தாஸே மயி விதர த்ருஷ்டி : ஸ கருணாம்
இதி ஸ்தோதும் வாஞ்சன் கதயதி பவானி த்வம் இதிய :
ததைவ தஸ்மை திசஸி நிஜ ஸாயுஜ்ய பதவீம்
முகுந்த ப்ரஹ்மேந்த்ர ஸ்புட மகுட நீராஜித பதாம்"

என்று புகழ்கிறார்.

"ஆத்மஸ்வருபமான இத்தேவியை ஞானஸம்பாதனையில் ஆசையுள்ளவனாக இருப்பாயாகில் வீணே காலத்தைப் போக்காமல் உபாஸிப்பாய்" என்கிறார் காவ்யகண்டம் :

"ஞானேத்ருடா தே யதி காபி காங்க்ஷா
நானேஹஸம் மித்ர முதா க்ஷிபேமம்
ஸேவஸ்வ தேவீம் துளஜா புரஸ்தாம் நைவ
ஸ்வருபாதிதரா கிலேயம்"

ஆத்மஸ்வருபத்தை உணரவேண்டிய அவசியத்தைக் குறித்து ஒரு கதை: தேஹம் என்னும் பட்டணத்தை 'மனம்' என்னும் அரசன் ஆள்கிறுன். அரசன் தனக்கு மெய்க் காவலனுக 'ஸத்ஸங்கம்' என்பவனே வைத்திருந்தான். ஸத்ஸங்கனுக்கு நிஸ்சலசித்தன் என்று ஒரு குமாரன் இருந் தான். அவன் மஹா ஞானி. ஸத்ஸங்கனுக்கு பதிலாக நிஸ் சலசித்தன் ஒரு நாள் அரசனே காவல்புரியும் வேலேயில் ஈடு படவேண்டியிருந்தது. ஒவ்வொரு யாமத்துக்கும்'ஜாக்கிரதை! ஜாக்கிரதை' என்று அரண்மனே தலே வாசலில் மணியடிப்பது வழக்கம்!

அன்றும் ஒவ்வொரு ஜாமத்திலும் வழக்கப்படி ஜாக்கிரதை மணியை அடித்தான் நிஸ்சலசித்தன். ஆனுல் கூடவே ஒரு சுருதியைக் கூறியபடியே அடித்தான். அந்த வாக்கியங்கள் அரசனே யோசனேயில் ஆழ்த்தியது. முதல் யாமம் முடிந்ததும்,

"காம! க்ரோதஸ்ச லோபஸ்ச தேஹே திஷ்டந்தி
தஸ்கரா : ஞானரத்ன அபஹாராய தஸ்மாஜ்
ஜாக்ரத ஜாக்ரத :

"ஞானம் என்னும் இரத்தினத்தை அபஹரிக்கும் பொருட்டு காமம், குரோதம், லோபம் என்னும் திருடர்கள் தேஹத்தில் இருக்கிறுர்கள்: ஆகையால் ஜாக்கிரதையாயிரு! ஜாக்கிரதை யாயிரு!" என்றுன். இரண்டாவது யாமம் ஆயிற்று,

"மாதா நாஸ்தி பிதா நாஸ்தி நாஸ்தி பந்து :
ஸஹோதர :
அர்த்தம் நாஸ்தி க்ருஹம் நாஸ்தி தஸ்மாஜ்
ஜாக்ரத ஜாக்ரத :"

'மாதா இல்லே பிதா இல்லே, பந்துவும் சகோதரனும் இல்லே. பொருளும் வீடும் உன்னதில்லே ஜாக்கிரதை! ஜாக்கிரதை! என்றுன். மூன்ருவது யாமம் ஆயிற்று,

"ஆசயா பத்யதே லோக : கர்மணு பஹுசிந்தயா
ஆயுக்ஷீணம் நஜாநாதி தஸ்மாஜ் ஜாக்ரத ஜாக்ரத :"

"ஆசையினுல் லோகத்தில் பந்தத்திலும் கர்மத்தினுல் பலவாருன எண்ணத்திலும் ஈடுபடுகின்ருய். ஆயுள் க்ஷீணமாகி வருகின்றது என்பதை அறியவில்லை. ஜாக்கிரதை, ஜாக்கிரதை!" என்று கூறினுன் : நான்காவது யாமமும் சென்றது. இப்போது என்ன சொல்கின்ருன் நிஸ்சலசித்தன் என்று கூர்ந்து கவனித்தான் அரசன்.

" ஜன்ம துக்கம் ஜரா துக்கம் ஜாயா துக்கம் புந : புந :
ஸம்ஸார ஸாகரம் துக்கம் தஸ்மாஜ் : ஜாக்ரத ஜாக்ரத :"

"பிறப்பு, இறப்பு,மூப்பு, பிணி என்பவை துக்கம்! ஸம்ஸாரம் என்னும் கடல் பெருந்துக்கம்! ஜாக்கிரதை ஜாக்கிரதை !" என்ருன். பக்தியுடனும் சிரத்தையுடனும் அரசன் நிஸ்சல சித்தனின் துணையுடன் ஆத்மா என்னும் இறைவனை அடைந்தான்.

---

உத்கலக்ஷேத்திர புவனேச்வரி

பசு என்ற பிராணி சாதுவானது: அதை வைத்துக் காப்பாற்றுகிறவன் இடையன் (கிருஷ்ணன்). நாம் எல்லோருமே பசுக்கள்; நம்மைக் காக்கும் இறைவனே பதி. கோ(பசு)பாலன். அதனால் தான் பசுபதி எனவும் அவன் அழைக்கப்படுகிறான். "எது நித்யம், எது அநித்யம் என்று அறியாத இளங் குழந்தை போல் உள்ள என்னைக் காப்பாற்று. ஜன்ம, மரண துக்க பீதியினின்றும் என்னை எஜமானனாகிய நீ காப்பாற்று" என்று எந்த பக்தன் புவனேச்வர தல நாயகியை வணங்குகிறானோ அவனுக்கு கைமேல் பலன் உடன் கிடைக்கும். இடைச்சியாக கோபாலினி வேஷந்தாங்கியுள்ள இவ்வன்னை 'கீர்த்தி மதி' என்றும் போற்றப்படுகிறாள்.

" கோபாலினீவேஷப்ருதம் பஜஸ்வ லீலாஸகீம் தாம்<br>புவனேச்வரஸ்ய<br>இஷ்டம் ஹ்ருதிஸ்தம் தவ ஹஸ்தகம் ஸ்யாத்<br>கஷ்டம் ச ஸம்ஸார பவம் ந பூய:"

என்கிறார் முனிவர் கணபதி.

புவனேச்வரத்திற்கு அருகிலேயே ஹீராபூர் என்னும் கிராமத்தில் அறுபத்து நான்கு யோகினிகளின் கோயில் பிரபலமானதாகும்.

விரஜாதேவி

வைதரிணீ நதிக்கரையில் ஜாஜ்பூர் என்னும் தலம் சிறப்பு பெற்ற சக்தி ஸ்தானம்! "ஸத்வ, ரஜஸ், தமஸ்" என்னும் முக்குணமுடையவர் மாந்தர். இதில் காமமும் கோபமும் உலகிடலை ஊக்குவித்து ஆத்மாவினின்றும் நம்மை வெகு தூரம் அனுப்பி விடுகிறது. மாயை சூழ்ந்த உடல்தான் நாம் என்று எண்ணும் அளவுக்கு தூலதேகாபி மானமும் அகந்தையும் தான் எஞ்சி நிற்கிறது. இதற்குக் காரண பூதமாக அமைவது ரஜோகுணம்.

" காம ஏஷ க்ரோத ஏஷ ரஜோகுண ஸமுத்பவ :
மஹாசனம் மஹா பாப்மா வித்யேனம் இஹ வைரிணம் "
(பகவத்கீதை)

ஆசையே துன்பத்திற்கு மூலம் : அது ஒழிந்தால்தான் இன்பம் எய்தலாம் ; ஆனால் ஆசைப்படும் வஸ்து கிடைத்தால் பூர்த்தியாகி மனச்சாந்தி பெறமுடியுமா எனில் தீயிற்கு விறகு இட்டுக் கொண்டே இருப்பதுபோல் அவ்வாசை மேன்மேலும் வளர்ந்து நம்மை அழிக்கும் சக்தியுடையதாக ஆகிறது. உடன் பிறந்தே கொல்லும் வியாதி. அதுபோல் நம்முள் முளைக்கும் ஆசையே நமக்குப் பல பிறப்புகளையும் அளிக்க வல்லதாக ஆகிறது. அவா என்பது பிறப்பினும் வித்து என்கிறார் வள்ளுவரும்.

" அவா என்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும்
தவா அப் பிறப்பீனும் வித்து."

ஆதலால் அழியாத தெளிந்த அறிவாகிய (ஞானம்) இன்ப நிலையைப் பெற விழைவாயாயின் மாசற்ற மனத்தினனாதல் வேண்டும். அதற்கு (நிஷ்காம்யமாக) ஆசையின்றி இறைவனை பூஜிக்க வேண்டும். " பூஜையில் சிறந்தது இறைவியின் பூஜை " என்கிறார் சங்கரர்.

" பவேத் பூஜா பூஜா தவசரணயோர்யா விரசிதா "
(ஸௌந்தர்யலஹரி)

அதிலும் விரஜா (ரஜோகுணம் இல்லாதவள்) என்ற நாமம் தங்கிய இந்ததேவி உன்னுடைய ரஜோகுணத்தை நீக்கி, பிறவியென்னும் தளையில் நீ அகப்படா வண்ணம் தடுக்கும் கருணையுள்ளவள் என்பது இத்தல தெய்வத்தின் பெயரே அறிவிக்கிறது.

" இத்தேவியை ஆராதிப்பவனே இப்புவியில் ஸாரமுள்ளவன்! அவன் ஸகல தேவதைகளையும் பஜித்தவனாகிறான்" என்கிறார் காவ்ய கண்டம்.

" ஆராத்யதே வைதரணீ தடஸ்தா யேனேயமம்பா
விரஜோ அபிதானு
ஆராதிதும் தேன ஸமஸ்த மன்யத் ஸாரே
தராயாமய மார்யகீத :"

இங்கு மக்கள் தூண்களை நிறுத்தி அதில் அன்னையை ஆவாஹனம் செய்து ஸ்தம்பேச்வரி என்று அழைத்து பூஜிக்கிற வழக்கமும் உள்ளது.

வங்காளக் காளி

துஷ்ட நிக்ரஹமும் சிஷ்ட பரிபாலனமும் தெய்வீகத்தின் இருகரங்கள். அடிக்கும் கரம் அணைக்கும் கரமாகத்தான் இருக்கும். இதுபோலவே உலகின் கண் அவ்வப்போது தோன்றும் தீமைகளை ஒழித்து, மெய்யுணர்வுக்கு வழி காட்டும் பல அவதாரங்களை நம் ஹிந்து புராணங்கள் கூறு கின்றன: ஆயின், ஒரே மனிதன் தான் வீட்டிலே தந்தை என்றும், கோர்ட்டிலே நீதிபதியென்றும், பாடும்போது சங்கீத வித்வான் என்றும், இறுதியில் காட்டிலே பிண மென்றும் பெயரிட்டு அழைக்கப்படுகிறான் என்பது உலகறிந்த உண்மை. இவ்வாறே அகிலாண்ட கோடியும் ஈன்ற அக் கருணைத்திருவுருவமே அன்னையென்றும், துர்க்கை யென்றும், காளியென்றும், பிடாரி யென்றும் பலபல பெயர்களில் இடத்துக்கும் உருவத்துக்கும் தகுந்தாற்போல் அழைக்கப் படுகிறாள்.

" ஏகைவ சக்திர் பரமேச்வரஸ்ய
பின்னு சதுர்த்தா வினுயோக காலே
போகே பவானீ புருஷே ச விஷ்ணு:
கோபேச காளீ ஸமரே ச துர்க்கா "

அன்றுடம் இறந்தவர்களின் பூத உடலை எரிக்கும் 'சுடுகாடு' நமக்குப் பயம் ஏற்படுத்துவதாகத் தான் இருக் கிறது. ஆனால் அங்குதான் உயிர்களின் களை (துயரம்) ஆற்றப்படுகிறது என்பது உண்மை! இப்படியே தீமையைப் போக்குகிற காளியைக் கண்டாலும், கேட்டாலும் பீதி

யடைகிறோம். உண்மையில் அவள் துயர் துடைக்கும் அன்புக்கரசி.

தக்ஷிணேச்வரத்தில் சாதாரண கதாதரன் என்ற தன் பக்தனை, தானாகவே ஆக்கி, இராமகிருஷ்ணபரமஹம்ஸராக தந்தவளும் இக் காளி யென்னும் உக்கிர சக்தியே. இக்காளி என்னும் தேவி ப்ரம்ம வித்யா ரூபிணியான பரதேவதையே யின்றி வேறல்லள். இவளை சரணடைந்தவர்களுக்கு யமபீதி கூட இல்லை என்றால் வேறு என்ன பயம் ஏற்பட இட முள்ளது? கங்கைக்கரை தனிலுள்ள கல்கத்தா காளி கோயில் பிரசித்தி பெற்றது. தொங்கும் சிவந்த நாக்கும், கருத்த சிகையும், கபால மாலை தரித்தும் உலக மக்களின் மரண பயத்தைப் போக்குகிறவள்

" ஸங்கியமானம் ஸதலமார்ய ப்ருந்தை :
ப்ருந்தாரகாணும் ஸரிதஸ்தடேஸ்தி
ய : காளிகாம் பச்யதி காலகேசீம் தத்ராஸ்ய
காலாதபி நைவ பீதி :"

என்று ஸ்ரீ காவ்யகண்ட கணபதி மகான் இந்தக் காளி சொருபத்தைப் புகழ்ந்திருக்கிறார்.

காமரூபம்

அகில உலகிற்கும் காரணபூதமான தேவி உகந்த தலம் காமரூபம் என்னும் நீலாசல மலைத்தொடரின் கண் உள்ள சக்தி படிவம்: ஸித்த ஸமூகத்தினர், தவச்சிரேஷ்டர்கள் சேவித்துக்கொண்டே இருக்கும் இந்த தேவி, பக்தர்களால் மிகவும் போற்றப்படுகிறாள் என்கிறார் காவ்ய கண்டம்.

" நீலாசலம் ஸித்த ஸமூக ஸேவ்யம் லீலாநிகேதம்
ப்ரவதந்தி யஸ்யா :
பத்ரா பரா காசன குஹ்யமுத்ரா காமேச்வரீ ஸா
புவனஸ்ய மூலம் "

நேபாளத்து காஞ்சன மலையில் இருந்து பிரம்ம புத்திரா நதிவரையில் காமரூபம் பரவி இருந்தது என்று யோகினி தந்திரம் என்ற நூல் கூறுகிறது. வடக்கே காஞ்சன மலையும்

கிழக்கே காரோதய நதியும் உள்ளது. அஸ்ஸாம் பிரதேசமே ஆதியில் காமரூபம் என்று வழங்கப்பட்டது. இதன் தலைநகர் கௌஹதி.

கௌஹதியின் பழைய பெயர் பிராக் ஜோதிஷபுரம் என்பது. இந்த இடம் ஆதியில் ஜோதிடக் கலையின் பிறப்பிடமாக இருந்திருக்கலாம் என்பது கெயிட் என்பவரின் அபிப்பிராயம். இதை ஆண்ட நரகாசுரன் (இந்த நரகாசுரன் தான் நரக சதுர்த்தியன்று கிருஷ்ணனால் கொல்லப்பட்டான் என்று மகாபாரதம் கூறுகிறது.) சக்தி உபாசகன்; இவனே இந்நகருக்கு காமரூபம் என்று பெயர் கொடுத்து சக்தி ஆலயத்தை நிறுவினான். ஆனால் கால ஓட்டத்தில் அவன் கட்டிய கோயில் மறைந்து போயிற்று. காமரூபத்தில் கொச் மன்னர் ஆட்சியை நிறுவிய விசுவசிங்கன் பழைய ஆலயத்தை உயரிய முறையில் புதுப்பித்து கன்னோசி பிராம்மணர்களைக்கொண்டு கும்பாபிஷேகம் நிகழ்த்தினான். பின்னர்

கி. பி. 1553-ல் முகம்மதியரால் அக்கோயில் அழிக்கப் பட்டது. ஆயினும் என்ன ? சக்தி பீடமாகிய அது மீண்டும் உயிர் பெற்றது. விசுவசிங்கன் மகன் நர நாராயணன் தான் அதற்குக் காரணம். அஸ்திவாரம் பழைய கட்டிடம். இப் பொழுது இருக்கும் கோயிலின் மேல் பகுதி தான் புதியது.

தேவியின் ஆலயத்தில் உருவச்சிலை எதுவும் இல்லை. கோயிலுக்குள்ளே ஒரு குகை இருக்கிறது. அதன் மூலைப் பகுதியில் தேவியின் யோனிச் சின்னம் குகையின் உட்சுவரில் செதுக்கப் பட்டிருக்கிறது. குகையின் ஊற்று நீர் எப்பொழுதும் இடை விடாது இச்சின்னத்தின் மீது விழுந்து அதை நனைத்த வண்ணம் இருக்கிறது. இச்சின்னத்திற்கே பூஜைகள், பூமாலைகள், கடாப்பலி யாவும் நிகழ்கின்றன. பலி இடுவதில் பெண் இனத்தைச் சேர்ந்த மிருகங்களை பலியிட மாட்டார்கள்.

கௌஹதியிலிருத்து மூன்று மைலில் இருக்கும் இக்கோயில். மலையின் மீது கம்பீரமாக அமைந்துள்ளது. இம்மலை நீலாசல மலை எனப்படுகிறது. இந்த ஆலயத்தின் வரலாற்றை காளிகா புராணம் விரிவாகக் கூறுகிறது. தட்ச யக்ஞத்தில் தன் கணவனான ஈச்வரனுக்கு ஏற்பட்ட நிந்தனையை எண்ணி மனம் நொந்த தாட்சாயணி அவ்விடத்திலேயே உயிரை நீத்தாள். இதனால் பெருங் கோபமுற்ற சிவன் தட்சனைத் தண்டித்தும் தேவியைப் பிரிந்த துயரத்தால் அச்சரீரத்தை ஏந்தியவாறு ஊரெங்கும் அலையத் தொடங்கினர். சிவபிரானின் கோபம் தணிய விஷ்ணு மூர்த்தி தனது சக்கரா யுதத்தால் அவ்வுடலை ஐம்பத்தோரு கூறுகளாக்கினர். அவைகள் பல ஸ்தலங்களில் விழுந்தன. அவற்றில் யோனி ஸ்தானம் விழுந்த இடமே காமகிரியாகிய நீலாசலம் என்பர்.

இம்மலையே சிவபெருமானகக் கருதப்படுகிறது. தேவியின் யோனிஸ்தானம் இங்கு விழுந்ததால் இது நீல நிறமாயிற்று என்று கூறுகின்றனர். தேவியின் உடல் பல கூறுகளாகப் பிரிந்த பின் சிவபெருமான் இங்கே கடும் தவம் புரிந்தார். மன்மதனின் பாணம் பட்டு கண் விழித்தபோது அவர் எதிரே நின்ற காமன் எரிந்து சாம்பலானன்.ஆகவே, காமனை எரித்த

இடம் காமரூபம் என்றும், மன்மதன் சுய உருவை அடைந்ததும் இவ்விடம் என்பதால் இது காமரூபம் என்ற பெயர் பொருந்துகிறது என்றும் கூறு.

ஒரு காலத்தில் பிரம்மாவின் உற்பத்திச் சக்தியை தேவி எதிர்த்தாள். ஆகவே பிரம்மா யோனிகளின் மூலமே சிருஷ்டியை நடத்த வேண்டி இருந்தது. பரிசுத்தமான மனத்தோடு பிரம்மா தவம் புரிந்து சிவ ஒளியைக் கொண்டு யோனி வட்டத்தில் வைத்தார். இதை தேவியே சிருஷ்டித்தாள் என்றும் ஒரு புராண வரலாறு கூறுகிறது.

இச்சக்தியின் கோயிலின் கோபுரம் முட்டை வடிவம் கொண்டது. ஆலயத்தின் கோயில் சுவர்களில் பற்பல சிற்பங்களும், அதனைப் பற்றிய காட்சிகளும் அழகுறச் செதுக்கப் பட்டுள்ளன. கோயிலைச் சுற்றிய அழகிய இயற்கைக் காட்சிகள். வெகு ரம்யமாக உள்ளன. கோயிலின் ஒரு புறம் பிரம்மபுத்திரா நதி கரையைத் தொட்டு அணைக்கிறது. தெற்குப் புறத்தில் காசி மலைகள் தன் வனப்புகளோடு அடுக்கடுக்காக வான் நோக்கி எழும்பி இருக்கிறது. வடக்கே பாக்கு மரங்களும், வயல்களும் மூங்கில் புதர்களும் குன்றுகளுக்கிடையே தோன்றுவதைக் காணும்போது மெய் சிலிர்க்கும்.

காமாக்கியை லலிதா சண்டிகா அழகு மிகுந்தவள் ஆகவே தன்னைச் சுற்றிலும் எழிலைப் பரப்பிக் கொண்டு எண் திசையையும் ஆண்டு வருகிருள்.

மகதத்து மங்கள கௌரி

மங்களஸ்வரூபியாகவே உள்ளவளும், ஸுக்ருதம் (புண்யம்) செய்யப்பட்டவர்களுக்கு சுலபமாக அடையப் படுபவளும், மஹான்களால் எந்த உன்னதமான லக்ஷ்யம் அடையப் பெறுகிறதோ அந்த உயர்ந்த லக்ஷ்யமாகவும், எந்த பதத்தை அடைந்த பிறகு மற்றவைகளில் நாட்டம்

ஏற்படாதோ அந்த இன்பமய ஸ்தானமே மங்கள கௌரியின் பாதாரவிந்தம் என்கிறார் காவியகண்டம்.

"மாங்கல்ய கௌரீ பததர்சனஸ்ய கர்த்தா துபூத்வா
ஸுக்ருதஸ்ய பர்த்தா"
ஆசார பூதைரதிகம்யமக்ரயம் ஸ்தானம் ப்ரபத்யேத்
யதோ ந பாத:"

ஏதேனும் ஒன்றை நினைத்து நினைத்து அதுவாகவே ஆவது இயற்கையின் நியதி. இவ்வாறு மங்களமான ஒன்றையே எண்ணி அதிலேயே மூழ்கிய மனத்தினராவதால் அம்மங் களத்தையே சாட்சாத்கரிக்கின்றனர் என்பது கண்கூடாகக் காணும் நிகழ்சி. கூட்டில் புழுவை வைத்துவிட்டு வண்டு வந்து வந்து கொட்டுவதால் புழுவும் வண்டாகின்றது. அது போல் மனிதத்தன்மையுடன் நாம் பிறந்து இருந்தாலும் இறைதன்மைக்கு உண்டான பதினாறு குணாதிசயங்களும் நம்மில் புதைந்துள்ளன. இவ்வாறு ஒருபெரும் சக்தியை ஊன்றின உள்ளத்துடன் எண்ணி அச்சக்தியை ஸ்வீகரித்த வர்களாய் பலர் நம்மிடையே திகழ்ந்து, இன்றும் இருக்கின் றனர். அச்சுத பதம் அடைய இம் மங்கள கௌரி உறுதுணை யாக இருக்கின்றாள்.

அவிமுக்த அன்னபூரணி (காசி)

மனிதன் முதல் பறப்பன, ஊர்வன, நடப்பன, நீந்துவன அனைத்தும் முதன் முதல் தனக்கு இரை தேடத்தான் தொடங்குகின்றது என்பது இன்றும் நாம் காணும் இயல் பான நிகழ்ச்சி. இரைதேடும் அனைத்துக்கும் ஆகாரம் அளித்தாக வேண்டுமே! நம் வீட்டில், கூட்டில் வளர்க்கும் பறவை, அல்லது முயல், நாய் முதலியன இருந்தால் அவை களுக்கு உணவு அளிப்பதைப் பற்றி அவைகளை விட எஜமானனாகிய நாம்தான் அதிகம் கவலைப்படுகின்றோம்.

இதுபோலவேக் அகில உலகத்தையும் படைத்தவள் அவைகளைக் காத்துத்தானே யாக வேண்டும்! அம்மா! அவள் கவலை பெரிது!

கல்லினுள் தேரைக்கும் கருப்பையுட் உயிருக்கும் அவள் அன்னமிட்டாக வேண்டும்:

அத்தி முதல் எறும்பீருய் சித்தம் மகிழ்ந்தளிக்கும் தேசிகா என்ருர் பட்டினத்தடிகள். உலகுக்கெல்லாம் உணவூட்டுபவன் உமாபதி ! அவனுக்கும் கபாலத்தில் பிச்சை யளிப்பவள் அன்னபூரணி. உடலுக்கு உரமூட்டுவாள் உலகத் தாய். அவளோ அகில உலக காரணி, அன்னபூரணி ! அவள் ஆவிக்கும் உணவு ஊட்டவேண்டும்: அனைத்துயிர்களின் களைப்பையும் நீக்கி இறுதியிலும் உறுதுணையாக இருந்து கர்ம பந்தங்களாகிய முடிச்சுக்களை அவிழ்த்து, நம் தீவினைகளை திருநோக்கால் போக்கி, மீளாத இன்பத் திருவடியை அளிக் கிருளாம், காசியாந்தே மரணும் முக்தி:'' என்று காசியில் இறப்பதுபற்றி'' கூறினர்.

"யதா வர்ணயத் கர்ணமூலே அந்தகாலே
சிவோ ராம ராமேதி ராமேதி காச்யாம்
ததேகம் பரம் தாரகம் ப்ரும்ம ரூபம்
பஜேஹம் பஜேஹம் பஜேஹம் பஜேஹம் ''

(சங்கரர்)

"அன்ன பூர்ணே ஸதாபூர்ணே சங்கரப்ராண வல்லபே
ஞான வைராக்ய ஸித்யர்த்தம் பிக்ஷாம் தேஹிச பார்வதி''

என்கிறது துதி. ஞானம், வைராக்யம் என்னும் இரண்டு மோக்ஷ சாதனங்களையும் பிக்ஷையிடுபவளாக அன்ன பூரணி விளங்குகிருள்.

மூவுலகிலும் முதன்மையாகும் தலம் காசியம்பதி. பாபங் களை நீக்கி பவித்திரமாக்குவதில் பராசக்தி விசாலாட்சிக்கு ஈடு-இணையே இல்லை என்கிருர் காவ்யகண்டம்.

"வாராணஸீ சுப்ரகிரேரநூனம் க்ஷேத்ரம் பவித்ரம்
புவனத்ரயேபி
அர்த்தே ப்ரஜாநும் வித்ருதான்னபாத்ரா
கௌரீ ஸ்வயம் யத்ர விசால நேத்ரா ''

காசிக்ஷேத்திரம் போல்' தென்னாட்டிலும் காசிக்கு வீசம் அதிகம் என்று திருவாஞ்சியம், குத்தாலம் முதலிய பதிகளைக் கூறுவர். கங்கை தன் பாவத்தை காவிரியில் கரைப்பதற்காக துலாமாதத்தில் வருகிறாள் என்பது ஐதிஹம். காவிரிக் கரையிலே குத்தாலத் தலத்து அரும்பன்ன முலையம்மையும் திருத்துருத்தியீசரும் எழுந்தருளியுள்ளனர், இங்கு உத்தாலம் தலவிருட்சம். அருங்கலை பல கற்றவர் ஒரு அந்தணர். திருத்துருத்தி ஈசரே கதியென முப்போதும் திருக்கோயில் சென்று வழிபடுவார். வயது வளர்கிறது.

"வ்யாக்ரேவ திஷ்டதி ஜரா பரிதர்ஜயந்தி"

என்று முதுமையும் நரையும் பயமுறுத்துகின்றன புலிபோல்.

---

சன்மத்தைக் காசியில் தொலைப்போம்: விச்வ நாதரை சேவிப்போம் என்று எண்ணினர். தடுத்தனர் மனை மக்கள். ஊரார் உபதேசம் செய்தனர்: "எங்கும் உள்ளான் இறைவன். விச்வநாதரை இங்கேயே எண்ணி இரும்'' என்றனர். திருத்துருத்தியீசர் சொன்னவாறு அறிவர். எதையும் செய்யார். மூர்த்தி விசேஷம் தலவிசேஷம், தீர்த்த விசேஷம் எதிலும் சிறந்தது காசிமாநகர்! என்று உள்ளூர் கோயிலை வணங்கவும் மறந்து புறப்பட்டார். அந்நாளில் நடந்ததுதானே பிரயாணம்! வழியோ பெரிய காடு—வழி மறைத்து படுத்துள்ளது மலை போல் பெரியதொரு பாம்பு. தயங்கியபடியே தாண்டிச் செல்ல நினைத்தார். சுற்றி வளைத்துக்கொண்டது அது. கருட மந்திரத்தை உச்சரித்தார். கருடனையும் சட்டை செய்யவில்லை அக்கொடிய நாகம்.

செய்வதறியாது பழக்க வாசனையால், "திருத்துருத்தியீசா, குத்தாலத்துறையும் தேவா, என அலறினர். எங்கிருந்தோ வந்தான் ஒரு பிடாரன். வந்தவன் மகுடி ஊத பாம்பின் பிடி தளர்ந்தது. எதிரே நிற்கிறார் உமைமணாளர்''.

"காசி உயர்வு, குத்தாலம் தாழ்வு என்றெல்லாம் எண்ணாதே. நீ விரும்பிய காசியை இங்கேயே பெறுவாய் இத்தடாகத்து மூழ்கு''எனக் கூறினர். அவ்வளவில் காவிரித் துறையில் எழுந்தார். எதிரே விமலர் விச்வநாதரும் விசாலாட்சியும் காட்சியாயினர். உள்ளம் குளிர்ந்தது. ஆனந்தப்பட்டார். ஸ்ரீ சங்கரரோ,

" காசீக்ஷேத்ரம் சரீரம் த்ரிபுவனஜநநீ வ்யாபிநீ ஞான கங்கா
பக்திச்ரத்தா கயேயம் நிஜகுருசரண த்யானயோக: ப்ரயாக
விச்வேசோயம் துரீய:ஸகலஜன மந:ஸாக்ஷிபூதோ அந்தராத்மா
தேஹே ஸர்வம் மதீயே யதி வஸதி புனஸ் தீர்த்தம்
அந்யத் கிமஸ்தி ''

என்று சரீரத்தையே காசி க்ஷேத்திரமாகவும், ஞானத்தையே கங்கையாகவும், பக்தி சிரத்தையையே கயையாகவும் குரு

சரணத்யான யோகமே ப்ரயாகையாகவும், துரியங்கண்ட நிலையே விச்வேசனாகவும் கூறுகிறார்.

### விந்த்யாசல வாஸினி

மிர்ஜாபூரிலிருந்து நான்கு மைல் தூரத்தில் உள்ளது விந்தியாசலம். நந்தாதேவி என்றும் அழைக்கப்படும் இந்தத்தேவி தேவர்களால் ஆராதிக்கப்படும் பாத பத்மம் உடையவள். பூர்ண சந்திர காந்தியுடைய முக மண்டலத்தையுடைய இவ்வன்னை ஸம்ஸார பயத்தைப் போக்குகிறவள். ஸம்ஸார பயம் என்பதே புத்தியில் தோன்றாது செய்பவள் என்கிறார் கவி காவ்ய கண்டம்.

" ப்ருந்தார காராதித பாதபத்மம் நந்தாமிமாமிந்து
ஸமான வக்த்ராம்
ஆலோக்ய விந்த்யாசல வாஸினீம் நா நாலோசயேத்
ஸம் ஸ்ருதிதோ பயானி "

இங்கு ஸதி தேவியின் இடதுகால் பெருவிரல் விழுந்ததாகக் கூறப்படுகிறது. சிவன் புண்ணிய பாஜன் என்று நாமம் தாங்கியுள்ளார்.

### அவந்திபுரி (உஜ்ஜெயினி)

கீர்த்திபெற்ற விக்ரமாதித்தன் இரண்டாம் சந்திர குப்தன் ஆகியோரால் ஆளப்பெற்ற நாடு மாளவம். உஜ்ஜெயினி மகாகாளியை உபாஸித்தவன் அவ்வரசன். இவ்வன்னையே கவிமழை பொழிந்த காளிதாஸனுக்கு வாக்விலாஸத்தை அளித்தவள்.

நீத்வாத ஜயோதிர் லிங்கஸ்தலத்தில் இதுவும் ஒன்று.

வடநாட்டில் காளி பரமசிவத்தின் மேல் நின்ற கோலமாய்க் காணப்படுகிறாள். இது ஒரு பெரும் தத்துவத்தை உணர்த்துகிறது. சிவமின்றி சக்தியில்லை. சிவத்திலிருந்து வெளிப் போந்த சக்தியே அனைத்துக்கும் ஆதாரமாகின்றது.

" இந்திர ஜாலம் புரிவோன் யாவரையும் தான் மயக்கும்
தந்திரத்தில் சாராது சார்வதுபோல் "

(குமரகுருபரர்)

எல்லாம் சிவத்தினுல் இயக்கப்படுகிறது எனினும் தான் எப்போதும் சாட்சிபூதமாகவே உள்ளது அச்சிவம். சூரியனும் அதன் கிரண ஒளிபோலவும் அக்னியும் உஷ்ணமும் போலவும் சக்தியும் சிவமும் இரண்டாகக் கண்டாலும் ஒன்றேயன்றி வேறல்ல.

" நம் கையினுல் நாம் அனைத்தும்
செய்தாற்போல் நாடனைத்தும்
நங்கையினுற் செய்தளிக்கும்
நாயகன் "

என்று திருக்களிற்றுப் பாடியார் செய்யுள் இக்கருத்தை உணர்த்துகிறது.

"மோக்ஷமென்னும் ஸ்தானத்தை தழுவ விரும்புவாயாகில் ஆனந்தமே உருவாக அமைந்த இவ்வன்னையைத் துதிப்பாய். அப்போது இந்த தேவி மோக்ஷத்துக்கு செல்ல உனக்குதூதி யாக இருப்பாள்' என்கிருர் கவி.

" ஆனந்த தேஹமிஹ முக்திஸம்க்ஞாம் நாரீம்
பரிரப்துமபஹ மனுஷ்ய !
தூதீம் வ்ருணேது ப்ரமதேச்வரஸ்ய காந்தா மவந்திபுர
நாயிகாம் தாம்."

கைலாஸம்

கணபதியும் முருகனும் உல்லாசமாக விளையாடும் கைலயில் எங்கும் இன்ப மயம்; சௌபாக்கியத்தின் இருப்பிடம் அது. பராம்பிகையின் வாசல்தலமாகிய கைலாயத்தை நினைத்த மாத்திரம் பாபங்கள் அகன்று மங்களம் ஏற்படும்.

யத்ராசலச்சித்ரக்ருதா ஸஹாஹம் ப்ராத்ரா முஹு:
கேலித வான் வனேஷு
தம் ஸித்ததே வரிஷிநுதம் ஸ்மராமி கைலாஸ மாவாஸ
கிரிம் ஜனன்யா !

அகாசத்தில் பூர்ணமாக நிரம்பியவள் இமயத்தின் வெள்ளைப் பனியில் விளையாடுகிருள். சந்திரனை விட அதிக சோபை யுடைய அத்தேவி காசி முதலிய முக்கிய க்ஷேத்திரங்களில் ரகஸ்ய சக்தியாக வஸிக்கிருள். அதே சக்தி இந்த ஸ்துதி யிலும் ஸத்யமாக பூர்ணப்ரகாசத்துடன் விளங்குவதால், கைமேல் பலனை அடையலாம் என்று தமது தேவி பக்தி யாத்திரையை முடிக்கிருர் காவ்ய கண்ட கணபதி.

" பூர்ணும்பரே சீதகரே திகாரம் பிப்ரத்யகேந்த்ரே
தவலே ஸலிலா
க்ஷேத்ரேஷு காச்யாதிஷு குப்த சக்தி—கௌரீந்தர
வ்ரஜாஸு ச ஸந்நிதத்தாம் '

---

## 2. பாஸ்கரராயரும் பராசக்தியும்

பராம்பிகையின் படிவங்களைத் தரிசிக்கும் நோக்கத்தோடு இருந்த நான் ஒரு தேவீதாஸரை அணுகி ஆலோசனை கேட்டேன். "அது என்ன படிவம் என்றீர்களே? படிவம் என்றால் வகுப்பு, பிரிவு என்று பிளவைத்தான் குறிக்கும். ஈரேழு பதினான்கு உலகங்களையும் ஈன்று, தாயினும் சாலப் பரிந்து ஜீவராசிகளைக் காத்து ரட்சிப்பவள் எங்கும் வியாபித்துள்ளவளல்லவா? அவளைப் பிரித்து, வகுத்து, பின்னப் படுத்திப் பார்ப்பது பொருத்தமாயில்லையே?..." என்றார்.

"நியாயம் சுவாமி!... ஆனால் அண்டம் பிண்டம் இரண்டிலும் அவள் வியாபித்திருக்கிறாளல்லவா?...பிண்டத்தில் இருப்பவள்தானே அண்டத்திலும் உள்ளாள்?... தங்களைப் போன்று ஞானம் வளர்ந்ததேவி பக்தன் அல்லவே நான்? அஞ்ஞானத் திரை என் கண்ணை மறைக்கிறதே! முழுமையில் அவளை நான் பார்க்க முடியாதல்லவா?...அதனால்தான் படிவமாக்கிப் பார்த்து இன்புறத் திட்டமிட்டிருக்கிறேன்... உங்களாலான உதவியைச் செய்யுங்கள்...!" என்றேன்.

பெரியவர் என் நிலையைப் புரிந்து கொண்டார். பரிபக்குவமாகா விட்டாலும், பரிபக்குவமடைந்த பரமசாதுக்களை உணரும் தன்மையுடையவன் நான் என்று தீர்மானம் செய்தவராக எழுந்து உள்ளே சென்று, ஒரு பெரிய புஸ்தகத்

-தைக் கொண்டு வந்து என் கையில் வைத்து, அதோடு ஒரு சிறிய பொட்டணம் சுத்தமான குங்குமத்தையும் வைத்து, " வீட்டுக்கு இது இரண்டையும் எடுத்துப் போங்கள். முகம் கழுவி அம்பிகையை த்யானித்து பிரசாதத்தை அணிந்துகொண்டு, இந்நூலை எடுத்து வாசியுங்கள். மிகப் பழமையான நூல் இது. அச்சிலும் இல்லை...விற்பனை நிலையங்களிலும் இல்லை. தேவி தஸர்களுக்கெல்லாம் ஞான குருவாக அமைந்த ஒரு பெரியாரின் வரலாறும், அவர் இயற்றிய தேவி ஸ்தோத்திரங்களும், பாஷ்யங்களும் இந்நூலை அலங்கரிக்கின்றன. படித்துப் பார்த்தீர்களானால், பராசக்தி படிவங்களைப் பற்றி உங்களுக்கு மேலும் தெளிவு ஏற்படும். என் உதவி இல்லாமலேயே படிவ யாத்திரையை மேற்கொள்வீர்கள். பின்னர் யாத்திரையின் நுட்ப நுணுக்கங்களைப்பிறருக்கும் எடுத்துச் சொல்வீர்கள் " என்றார். பக்தி சிரத்தையோடு அதைப் பெற்றுக் கொண்டு, அப்பெரியவரை வணங்கி விட்டு வீடு திரும்பினேன்.

ஒருவரையொருவர் வணங்குவது என்பது சமுதாயத்தின் தோற்றத்திலேயே ஜீவனோடு ஒட்டிய ஒரு பண்பு. வணக்கம் பல வகை. கால,தேச, சமய நீதிகளுக்கேற்ப அது மாறுகிறது. நமது பாரத ஹிந்து சமுதாயத்தை முதலில் பார்க்கலாம். கரங்குவித்து சிரம் தாழ்த்தி நின்ற நிலையில் வணங்குவது. இந்த இருமுறைகளும் ஹிந்து சமூகத்தின் தனிச் சிறப்பு. முஸ்லிம்கள் மண்டியிட்டு தொழுகை நடத்துகிறார்கள். கிறிஸ்துவர்கள் இருகரங்களையும் கோத்து சிரம் தாழ்த்தி இறைவணக்கம் செய்கிறார்கள். சிலர் மண்டியிட்டும் வணங்குவது உண்டு. நம்மைப் போல் தரையோடு தரையாகப் படுத்து வணங்குவது உலகில் வேறு எந்தப் பகுதியிலும் இல்லை. ஆனால், வெவ்வேறு வகையில் இந்த உடல் உறுப்புக்களை நீட்டியும் மடக்கியும் வணங்குவோர், எல்லாவற்றிற்கும் மேலான ஒரு வஸ்து, கண்டறியாத வஸ்து, ஐம்புலன்களைக் கடந்த வஸ்து, அதுவே பரம் பொருள் என்ற எண்ணத்தின் அடிப்படையிலே அந்த பரப்ரும்மத்தை அவரவருடைய மதக் கொள்கைக்கேற்ப சிந்தையில் இருத்தி

வணங்குகிறார்கள். முஸ்லிம்கள் அல்லாவையும், கிறிஸ்துவர்கள் இயேசுவையும் பரம்பொருளாகக் கருதுகிறார்கள். ஆனால், நாமோ தாய்வழிபாட்டை முதன்மையாக வைத்து வாழ்ந்து வருகிறோம். "மாதா, பிதா, குரு, தெய்வம்" இப்படி ஒருவரிசை. முதலிடம் பெற்றிருக்கும் தாயின் திருவுருவில் பிதா, குரு, தெய்வம் மூன்றும் அடக்கமாகி விடுகிறது. ஆகவே, தாயை விட சக்தி வாய்ந்ததொரு தெய்வம் நமக்கு இல்லை. அந்தத் தெய்வத்தாயின் திருக்கோலமே நாம் காணும் இந்த உலகம். எல்லாம் அவளுடைய பிரதிபலிப்பு.

மேற்குறிப்பிட்ட எண்ண அலைகள் மனத்தளத்தில் வீசிக் கொண்டிருந்த போது தேவி தாஸர் கொடுத்த தேவிப் ரஸாதம் ஞாபகத்திற்கு வந்தது. சர்வமங்களத்தையும் அளிக்க வல்லதான அந்த குங்குமப்ரசாதத்தை நெற்றியில் இட்டுக்கொண்டு, அவர் கொடுத்த நூலைப் பிரித்து வாசித்தேன். என் எண்ணங்களுக்கு பலமளிப்பது போல் அந்நூலாசிரியர் முதன் முதலில் "ஸ்ரீமாதா" என்ற சொல்லுக்கு விளக்கம் கொடுத்திருந்தார். நூறு பக்கங்களுக்கு மேல் இருந்த அந்த விளக்க உரையைக் கண்ணீர் கசியவாசித்தேன். அந்த வர்ணனைக்கு ஈடு இணை கிடையாது. என்னைப் பெற்றெடுத்த தாய் இல்லை. அவள் முன்னால் வந்தவள்; கிரமப்படி முன்னால் போய் விட்டாள். அவளை ஈன்ற தாயை நான் அறியேன். ஆனால் அந்த வர்ணனையைப் படித்து முடித்ததும் அனைத்துயிரையும் ஈன்ற அந்தத் தெய்வத்தாயை அறிந்து கொள்ள முடிந்தது. பராசக்தியின் படிவங்களைக் காணத்துடித்துக் கொண்டிருந்த எனக்குத் தாயின் திருவுருவை மிக மிக எளிதாக எடுத்துக்காட்டிய அந்நூலின் ஆசிரியர் யார்என்பதைக் கவனிக்கலானேன்.

அதை உற்று நோக்கியதும் மெய் சிலிர்த்தது; கண்கள் ஆனந்த பாஷ்பத்தைப் பெருக்கின. கரங்கள் என்னையுமறியாமல் உயர்ந்து குவிந்தன. எப்போதோ ஒரு தடவை அறியாப் பருவத்தில் பெற்றோரோடு ஒரு கலியாண

வைபவத்திற்காகப் போயிருந்த அந்தச் சின்னஞ்சிறு கிராமம் — பாஸ்கரராஜபுரம்—மனக்கண்களில் பளிச்சிட்டது. "ஆஹா! இத்தனை மகிமை வாய்ந்தவரா அது?... அங்கேயா லலிதா ஸஹஸ்ரநாம பாஷ்யம் இயற்றி யருளிய தேவிதாஸ மேதை வாழ்ந்து வந்தார்...? உலகம் அறியா நிலையில் எப்போதோ போனேம். இப்போது உலக மறிந்த நிலையில் உடனே அங்கு போக வேண்டும். போவ தற்கு முன்பு அவர் இயற்றிய இந்த பாஷ்ய நூலைப் படித்து

---

அறிவை வளர்த்துக்கொள்ள வேண்டும்'' என்று துடிப்போடு அத்தெய்வீக இலக்கியத்தை ஆழ்ந்து படித்தேன்.

[ஸ்ரீ பாஸ்கரராயர் மஹாராஷ்ட்ரத்தில் பிறந்து, இளம்வயதிலேயே சகல சாஸ்த்ரங்களையும் பயின்று, காலக்ரமத்தில் சிறப்பானதொரு விற்பன்னராய்த் திகழ்ந்தார். பால்ய வயதிலேயே மஹாபண்டிதர்கள் வாழ்ந்து வந்த புண்ய தலமாகிய காசி மாநகருக்குச் சென்று தகுந்ததொரு குருவிடம் சிஷ்யனாக இருந்து கல்வி கேள்விகளை அபிவிருத்தி செய்து கொண்டு, நாடு வியக்கும் வகையில் தேவி வழிபாட்டின் மேன்மையை எடுத்துக் கூறும் வல்லுனராகத் திகழ்ந்தார். அவருடைய வாழ் நாளில் பெரும் பகுதி சோழ நாட்டில் கழிந்தது. தஞ்சை மன்னர்களின் குருதேவராகவும், ஆஸ்தான வித்வானாகவும், மந்த்ராலோசனை கூறுபவராகவும் இருந்த ஸ்ரீ பாஸ்கரராயருக்கு அநேக கிராமங்களை மன்னன் மான்யம் வழங்கினான். வேத பரிபாலனம் தேவீ த்யானம் இரண்டையும் தமது இரண்டு கண்களாகக் கொண்டு வாழ்ந்த அப்பெரியார், இவ்விரண்டும் என்றென்றும் பாரதத்தில் தேய்வின்றி மேலும் மேலும் பரவ வேண்டி, மான்யக் கிராமங்களில் பெரும் பகுதியை வேத சாஸ்த்ர மேதைகளுக்கு தானம் செய்து கொடுத்து, அவர்களைப் பராமரிப்பதன் மூலம் நமது ஸநாதன தர்மத்தைப் பராமரித்து வந்தார். அவருக்கென எஞ்சியிருந்த குக்கிராமம் அவர் பெயரையே பிற்காலத்தில் தாங்கி *பாஸ்கரராயபுரம்* என வழங்கலாயிற்று.]

நூலாசிரியரின் வாழ்க்கை வரலாறு சுருக்கமாக அந் நூலில் தரப்பட்டிருந்தது. ஆனால் ஜகந்மாதாவின் திருப் பாத கமலங்களில் சரணடையும் பக்தனுக்கு பாஸ்கரராயர்-தமது லலிதா ஸஹஸ்ரநாம பாஷ்யத்தின் மூலம் மகத்தானதொரு பாக்கியத்தை வாரி வழங்குகிறார். அம்மாபெரும் நூலைப்படிக்கும் போது நாம் அதில் மூழ்கிவிடுகிறோம். ஒன்றிப் போய் விடுகிறோம். எத்தனை தடவை படித்தாலும் அது ஒரு தெவிட்டாத தேனமுது. அந்தத் தேவாமிர்தத்தை நாலைந்து முறை படித்து இன்புற்ற பின்பு, அந்நூலை எனக்குத் தந்த

தேவீ தாஸரிடம் மீண்டும் சென்று என் நன்றியையும் மரியாதையையும் தெரிவித்துக் கொண்டேன். அவரும் பெரு மிதத்தோடு, "முதலில் பாஸ்கர ராஜபுரத்திற்குப் போய், அம்மகானுல் எழுப்பப் பெற்ற தேவாலயத்தை தரிசனம் செய்யுங்கள். அப்புறம் உமது 'பராசக்தி படிவ' யாத்திரை பூரணமாக நிறைவேறும்,..." என்று ஆசீர்வதித்து அனுப் பினுர். அன்று இரவே அந்த மகான் பாத தூளி பட்ட கிராமத்திற்குப் பிரயாணமானேன்.

பாஸ்கர ராய்புரம்

கும்பகோணம் — மாயவரம் நெடுஞ்சாலையில் ஒரு சிறிய கிராமம். ஊருக்குள் நுழையும் போதே பக்தி மணம் கமழ் கிறது. புராதன ஆஸ்திகக் குடும்பங்கள் நாலைந்து மிகப் பழமையான ஒட்டு வீடுகளில் வசித்து வருகின்றன. அந்தக் குடும்பத்தினர்கள் அனைவருமே ஒரோரு விதத்தில் பாஸ்கர ராயரோடு தொடர்பு கொண்டிருப்பவர்கள். ஸ்ரீ வித்யையின் இருப்பிடமாகக் காட்சியளித்த அந்தக் கிராமத்தில் கால் படிய நடக்கவே கூசியது. கிராமத்தின் பிரதான தெருவை யடைந்ததும், பணிவோடு இரு கைகளையும் பூமியில் ஊன்றி வணங்கிவிட்டு, தெருவின் கிழக்குக் கோடியில் அன்னைக் காவிரியின் அன்பு மடியில் தவழ்ந்து விளையாடிய அத்தேவா லயத்தின் சிறிய கோபுர வாயிலை நெருங்கினேன்.

கோயில் சிறியது. மூர்த்தியும் சிறியது தான். ஆனுல் கீர்த்தி மிக மிகப் பெரியது. அம்பிகையின் திருநாமம் ஆனந்தவல்லி. பாஸ்கர ராயரின் அருமைப் பத்னியின் பெயர் ஆனந்தி. ஈசன் பெயர் பாஸ்கரேச்வரர். இந்த கிராமத்தின் பெயருக்கும், இங்கு கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் மூர்த்திகளின் திருநாமங்களுக்கும் காரணமாயுள்ள அந்த ஸ்ரீ வித்யை தம்பதிகளை மனக்கண் கொண்டு பார்த்து வணங்கி னேன். ஏறக்குறைய ஐ நூ று ஆண்டுகளுக்கு முன்பு நிர்மாணிக்கப்பட்ட ஆலயமாயிருந்தும் அதுபுது மெருகோடு பிரகாசித்துக் கொண்டிருந்தது. அவ்வப்போது கோயிலைப் பழுது பார்த்து, சீர்ப்படுத்தி வைக்கிருர்களாம். ஸ்ரீ பாஸ்கர

ராயருடைய அருமை பெருமைகளை எடுத்துச் சொல்லிக் கொண்டு வந்த உள்ளூர் பிரமுகர் மிகவும் பக்தி விஷயத்தோடு சில விவரங்களை எடுத்துரைத்தார்.

பிராகாரத்தை வலம் வந்து மூலஸ்தான சந்நிதிகளைத் தரிசிக்க உள்ளே சென்றேன். அங்கு ஆனந்தவல்லி அம்மனின் சந்நிதியில் பெரியதொரு ஸ்ரீ சக்ரம் பிரதிஷ்டை செய்யப்பட்டிருந்தது. அப்போது நவராத்ரி சமயமாதலால் லக்ஷார்ச்சனை நடந்து கொண்டிருந்தது. ஸ்வர சுத்தமாக ஒவ்வொரு நாமாவுக்கும் முன்னால் அம்பாளுடைய பீஜாக்ஷர மந்த்ரங்களையும் சொல்லி, இரு வைதீக பிராமணர்கள் அர்ச்சனை செய்து கொண்டிருந்தார்கள். மெய்சோர அக்காட்சியில் லயித்திருந்த என் எண்ணத்தில் பாஸ்கர ராயர் வியாபித்து நின்றார். உள்ளம் அம்மனாேடு உரையாடியது.

"என்ன திட்டத்தோடு நீ இங்கே வந்திருக்கிறாய் என்பது எனக்குத் தெரியும். உன் தூய சங்கற்பம் நிறை

வேற உதவி செய்கிறேன். என்னோடு வருகிறாயா ?'' என்று உள்ளத்தின் ஒரு பாகத்தில் அமர்ந்து அந்த மகான் கேட்டார்.

உள்ளத்தின் மற்றொரு பாகம் உவகையோடு, “என் வேண்டுகோளும் அதுதான். அன்னையின் படிவங்களைப் பார்க்கப் புறப்பட்டிருக்கிறேன். அதற்கு உற்ற துணை தங்களைக் காட்டிலும் உலகில் ஒன்றும் இல்லையோ ? நான்செய்த பெரும் பாக்கியம். தாங்களே வலிய வந்து எனக்கு பேருப காரம் செய்கிறீர்கள். தங்கள் வழியில் சென்று கோடானு கோடி மக்கள் இன்று பராசக்தியின் பேரருளுக்குப் பாத்திர மாகி யிருக்கிறார்கள். அவர்களில் நானும் ஒருவன் என்றாலும், அவர்களைக் காட்டிலும் நான் ஒரு படி உயர்ந்தவன் என்று நான் பெருமைப்படக் காரணமாக தாங்களே என்னை அழைத்துச் செல்ல முன் வந்திருக்கிறீர்கள்.'' என்று எக்களிப் போடு உரைத்தது. உடன் அம் மகானின் முன்னே செல்ல அவர் பின்னால் நான் சென்றேன்.

நாம் வாழும் இந்த உலகத்தை மாயப்ரபஞ்சம் என்று அத்வைத தத்வம் கூறுகிறது. ஆனாலும், நாம் பிரத்யட்சத் தின் பிடியில் சிக்குண்டு உழலுகிறோம். காணுவதெல்லாம் மாயை என்ற உணர்வு அவ்வப்போது ஏற்படுகிறதே தவிர, அதை ஒப்புக்கொள்ள முடியாமல் மாயை வந்து குறுக்கே நிற்கிறது.இவ்வாறு உணர்வு பிளவுபட்டதும் உலக சிருஷ்டிக் குக் காரணமான கண்ணுக்குப் புலப்படாத அந்த வஸ்துவைக் கருத்தில் வைத்து ஆராய்கிறோம். இந்த ஆராய்ச்சியின் முடிவாக ச்ருஷ்டிக்குக் காரணமாயிருப்பவளைத் தாய் என விளிக்கிறோம். நம்மைப் பெற்றெடுத்த தாயின் தாயையும், அவள் தோன்றக் காரணமாயிருந்த குடும்ப முதாதையர் களையும் ஈன்ற தெய்வத்தாயை ‘பராசக்தி' என்றும், ‘அந்தப் பராசக்தியே பரம் பொருள்; அவளே ஜகந்மாதா, அகில உலகங்களையும் ஈன்ற தாய்' என்றும் கொண்டாடுகிறோம். அத்தகைய பெருமை வாய்ந்தவளை லலிதா ஸஹஸ்ரநாமம் முதன் முதலில் வைத்து—ஸ்ரீமாதா—சக்தி வழிபாட்டை ஆரம்பித்து வைக்கிறது.

ச்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் முத்தொழிலேயும் செய்பவள் இந்த பராசக்தி என்று உணர்த்துகிறது. ஸஹஸ்ரநாமத்தின் மூன்று முதல் நாமாக்கள்—ஸ்ரீ மாதா ஸ்ரீ மஹாராக்ஞீ, ஸ்ரீ மத்ஸிம்ஹாசனேச்வரீ—இம் மூன்று நாமாக்களின் சொரூபமாகத் திகழ்பவள் அகிலாண்டேச்வரீ. ஜம்புகேச வரம் என்ற திருஆனக்காவில் அவள் கம்பீர்யமாகக் காட்சி தருகிருள். அகில அண்டங்களேயும் ஈன்று, அவற்றிற்கு தாயா கவும் ராணியாகவும் இருந்து பரிபாலனம் செய்து வருகிருள். இங்கு அம்பிகை நின்றபடி காட்சி தந்தருளினுலும் ஸர்வோத்க்ருஷ்டமான ஸிம்ஹாஸனத்தில் அமர்ந்திருப்ப தாக ஐதீகம். ஏனெனில் இந்தப் பராம்பிகையை அகில உலக அரசி என்று—ஸ்ரீ மஹாராக்ஞீ—என்று சொல்லப்படுவ

---

தால் அரசிக்கு உரிய ஸிம்ஹாஸனம் சூக்ஷ்மமாக இங்கு பொருந்துகிறது.

சிதக்னி குண்டத்தில் ஆவிர்ப்பவித்து தேவர்களுடைய இன்னல்களைத் தீர்த்து அம்பிகையின் சித்த ஸ்வரூபத்தை சிராப்பள்ளி மலையிலே தரிசனம் செய்தேன். தாய்க்குத் தாயாக இருந்து சேய் தோன்றக் காரணமாயிருந்த பெருமான் தாயுமானவரின் துணைவியான மட்டுவார்க் குழலியின் திருவுருவில் லலிதையின் சித்தஸ்வரூபம் பிரகாசிக்கிறது. அந்தத் தெய்வநிலையை உற்றுக் கவனித்தபோது கணக்கிலடங்கா கிரணங்களை வெளிப்படுத்தி உலகையே சிவக்கச் செய்யும் சூர்யனுடைய காந்தி பிரதிபலித்தது. பிரகாசம், விமர்சம் இவ்விரண்டின் இலக்கணமாகத் திகழ்ந்த மட்டுவார்க்குழலியை வைத்த கண் வாங்காமல் நான் பார்த்தபோது ஸ்ரீபாஸ்கரராயர், "பக்தா! அம்பாளுக்கு மூன்றுவித ரூபங்கள் உண்டு. அவற்றை ஸ்தூலம், ஸூக்ஷ்மம், பரம் என்று சாஸ்திரங்கள் குறிப்பிடுகின்றன. கர, சரணாதி அவயவங்களோடு கூடியது ஸ்தூலம்; மந்த்ராக்ஷரங்கள் மயமாக இருப்பது ஸூக்ஷ்மம்; வாஸனாமயமாக இருப்பது பரம்; ஸ்தூலரூபத்தைத்தான் பலவிதமாக பிரதிஷ்டை செய்து வழிபடுகிறார்கள். பாமரர்களுக்கு இந்த ஸ்தூல தரிசனம் சகல சௌபாக்கியங்களையும் அளிக்கிறது. அவர்களைக் காட்டிலும் ஒருபடி மேலே இருக்கும் உபாஸகர்கள் யந்திரத்தில் பீஜாக்ஷரங்களை வடித்து தேவியை ஆராதித்து பெரும் பயனை அடைகிறார்கள். பரம் என்ற வாஸனாமயத்தில் லயிப்பவர் தவச்ரேஷ்டர்கள். மெஞ்ஞானிகள். ஸ்தூலமாக அவர்களையே நாம் காண்பது அரிது என்னும் போது, அந்தப் பரப்ரும்மஸ்வரூபிணியின் தன்மையை எப்படி உணரமுடியும். ஆகவே, ஸ்தூல ரூப தரிசனத்தைத் தொடர்ந்து செய்யலாம் புறம்படுவோமா?" என்று கேட்டார். தேவீ உபாஸகர்களின் சிகரமெனத் திகழும் ஒரு மகான் எனக்கு வழிகாட்டியாக வந்திருக்கும்போது, நான் அவர் விருப்பத்தை ஏன் மறுத்துப் பேசப்போகிறேன்?

வயலூரை அடைந்தோம்! தநயன் புகழ் நிழலில் தாய் பேரின்பத்தைப் பருகிக்கொண்டு ஆனந்தமாகக் காட்சி தருகிருள். தான் பெற்றபிள்ளை பேரும் புகழும் எய்தி பெருமையோடு இருப்பதைக்கண்டு பொருமைப்படுவது தாய்க்குலத்தின் தன்மை அல்லவே! தாயையும் தனயனையும் தரிசித்துவிட்டு அம்பிகையின் சர்வசாமான்ய தோற்றத்தில் ஒன்ருகிய மாரியம்மன் பிரதிஷ்டையை சமயபுரத்திலும், சிறுவாச்சூரிலும் பார்த்து இன்புற்ருேம். அநேகமாக அம்பிகையின் மூர்த்தங்கள் எங்குமே நான்கு கரங்களோடு அமையப் பெற்றிருக்கின்றன. அவயவ மந்த்ர ரீதியில் அந்த அமைப்பை ஆராய்ந்தால் "அச்வாருடா, ஸம்பத்கரீ, மந்த்ரிணி, வாராஹீ" என்ற நான்கு பராசக்தி அம்சங்களே அந்நான்கு கரங்களும் என்பது தெளிவாகும். ஒரு பண்டத்தை தன் வசம் இழுத்துக் கொள்ள உபயோகிக்கப் படும் கயிறை பாசம் என்கிருேம். அம்பிகையின் இடது இரு கரங்களில் கீழ்க்கரத்தில் பெரும்பாலும் இந்தப் பாசக்கயிறு ஓர் ஆயுதம்போல் அமர்ந்திருக்கிறது. தன்னை நாடி வரும் பக்தி உள்ளத்தை இந்தப் பாசக்கயிறு கொண்டு தன்பால் இழுத்து அனுக்ரஹம் செய்கிருள். ஸம்பத்கரீ என்ற அதிஷ்டான தேவதையை ஆதாரமாகக் கொண்டுள்ள அங்குசம் அம்பாளின் வலக்கரங்களின் கீழ்க்கரத்தில் இடம் பெறுகிறது. யானையை அடக்கி ஆள யானைப்பாகன் உபயோகிக்கும் அங்குசம், அடியாரின் அகந்தையை அடக்க அவள் கையில் அடங்கியுள்ளது. மந்ரிணி என்ற கரும்புவில் அம்பிகையின் இடது கரத்திலுள்ள மற்ருேர் ஆயுதம். இந்த இனிய ஆயுதத்தைப் பிரயோகித்து பக்தனின் உள்ளத்தி லுள்ள விகல்பத்தை அகற்றி ஸங்கல்பத்தைத் தோற்றுவிக் கிருள் அந்த தெய்வத்தாய். இதற்கு மந்ரிணி என்பது அதிஷ் டான தேவதை. இக்கரும்புவில்லில் நாணேற்றி பூட்டப்படும் பாணங்களே பஞ்சதன்மாத்ரைகள். (சப்த, ஸ்பர்ச, ரூப, ரஸ கந்தம்) இவையெல்லாம் உடலை நோக வைக்காமல் உள்ளத் திலுள்ள களங்கங்களைப் போக்கும் பாணங்கள். இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி ஆகிய முப்பெரும் சக்திகளின் மூலமான அன்னை பராசக்தி இந்த ஆயுதங்களை அவ்வப்

போது ஏவி பக்தனின் உள்ளப் பாங்கும் பண்பும் வளர உதவி செய்கிருள்.

தஞ்சை மாரியம்மனைத் தரிசித்துக் கொண்டு தஞ்சைப் பேருடையானுடைய குடும்பத் தலைவி பெரியநாயகி யையும், தனி ஆலயம் அமைத்துக் கொண்டு அஷ்டஐச்வர் யங்களையும் அன்பர்களுக்கு வாரி வழங்கும் பங்காரு காமாட்சியையும் கண்டு களித்தேன். காமாட்சி கோயிலின் சந்நிதியிலேயே என்னை நிறுத்தி வைத்துக் கொண்டு ஸ்ரீபாஸ்கரராயர் அம்பிகையை பாதாதி கேசம்வர்ணனை செய்தார்.

பராசக்தியின் செம்பஞ்சுக் குழம்பைப் போன்று காந்தி யோடு கூடிய சிகப்பு நிறத்தில் விளங்கி,பிரும்மாண்டம்

---

களையும் தனது காந்தியில் மூக்கி மூழ்க வைக்கிறுள். அவளுடைய கூந்தலில் இயற்கையாகவே சகலவித புஷ்பங் களின் நறுமணம் மாறி மாறி வீசுவதால் அவள் கேசத்தை அலங்கரிக்கும் புஷ்பங்கள் வாசனையை இழுத்து விடுகின்றன. அவள் கேசத்தின் மூலஸ்தானத்தை மறைத்துக் கொண் டிருக்கிறது. குருவிந்த மணிகளாலான க்ரீடம். இந்தக் க்ரீடத்தை மட்டும் தியானம் செய்யும் சக்திதாஸனுக்கு காமம், அனுராகம், மங்களம், விஷ்ணு பக்தி ஆகியவை சித்திக் கின்றன. மலைமகளாகவும், அலைமகளாகவும், கலைமகளாகவும் பராசக்தி பத்மாசனத்தில் அமர்ந்து வெவ்வேறு ஆலயங்களில் குருவிந்த மணி க்ரீடத்தைத் தரித்து தரிசனம் தருவதைக் காண்போர் பாக்கியசாலிகள். அந்தக் கிரீடத்தின் அடிப் பாகத்தில் அஷ்டமீ சந்திரன் உதயமாகி யிருப்பதுபோல் அவள் நெற்றி திகழ்கிறது. சந்திரனில் சிறிது களங்கம் தென் படுகிறதல்லவா ? அதைப் போல் அன்னையின் நிலாபோன்ற நெற்றியில் திலகம் சற்றே காருண்யமான களங்கத்தை உண்டாக்குகிறது. புருவங்கள், மன்மதனுடைய அழகிய அரண்மனையை மேலும் அழகுபடுத்தும் தேர்ச்சிலைகள் போல் அவள் மந்தகாசமான முகப்பிரவாகத்தில் நீந்தும் மீன் குஞ்சுகள் போன்ற நயனங்களின் மேல் விளங்கு கின்றன. அவள் நாசியை அன்றலர்ந்த சம்பகபுஷ்பத் திற்கு ஒப்பிடலாம். அந்த நாசியின் ஒளியோடு போற்றப் படுகிறது. அவள் தரித்துக் கொண்டிருக்கும் சுக்ர நட்சத்திற்கு ஒப்பான மூக்கணி.

பஞ்சநத க்ஷேத்திரமாகிய திருவையாறில் சிறிது நேரம் தங்கி, பூலோக கைலாயங்களில் ஒன்றென சிவபக்தர்களால் போற்றப்படும் திருக்கோயிலில் மூர்த்திகளை தரிசனம் செய் தோம். அம்பிகையின் சந்நிதியில் ஸ்ரீபாஸ்கரராயர் நாம் கண்டுணர்ந்த ஆயிரம் பராசக்தி படிவங்களின் வர்ணனையை மேலும் தொடர்ந்தார்.

அன்று தைமாத வெள்ளிக்கிழமை. அம்பிகை சர்வாலங் கார பூஷிதையாக விளங்குகிறுள். ஸுமங்கலிகளுக்கு தாடங் கம் மிக மிக அத்யாவச்யமான ஆபரணம். அவர்களுடைய

மாங்கல்ய பாவம் மங்காமல், மறையாமல் இருக்க தாடங்கம் பாதுகாப்பாக அமைகிறது. பராசக்தியின் தாடங்க மகிமையை ஸ்ரீ ஆதிசங்கரர் வெகு அழகாக விளக்கியுள்ளார். ஆலகால விஷத்தையுண்ட பிறகும் பரமசிவன் உயிருக்கு ஹானி ஏற்படாமல் இருந்ததற்குக் காரணம் பரமேச்வரியான ஜகந்மாதாவின் காதுகளில் சூர்ய சந்திரர்களைப்போல் பிரகாசித்துக் கொண்டிருக்கும் தாடங்கள்தாம் என்று அந்த மகான் எடுத்துக் காட்டியுள்ளார்.

அங்கேயிருந்து பட்டீச்வரம் சென்று ஞானம்பிகையைத் தரிசித்தோம். பத்மராகரத்னத்தில் செய்யப்பட்ட கண்ணாடியைக் காட்டிலும் ஒளி வீசக் கூடிய கன்னங்களை உடையவள் இந்த ஞானம்பிகை. அஞ்ஞானம் என்ற இருள் நீங்கி மெய்ஞ்ஞானம் என்ற சூர்ய காந்தி சமூகத்திற்குக் கிட்ட பேருதவி செய்கிறாள் அன்னை, இத்தலத்தில். இதே போன்று குடந்தையில் மங்களாம்பிகையும், திருவிடைமருதூர் என்ற மத்தியார்ச்சுன க்ஷேத்திரத்தில் உள்ள மோகாம்பிகையும் இஷ்ட சித்தியை அளிக்கவல்ல படிவங்கள். நாம் திருக்கோயில்களில் பிரதிஷ்டையாகி யிருக்கும் பராசக்தி படிவங்களைத் தரிசிக்கும்போது, சில அலங்காரத் தோற்றங்களில் அந்தத் தெய்வம், அதன் முத்துப்பல் தெரிய வாய் திறந்து பேசாதா என்று ஏங்குகிறோம். சுத்த வித்யையின் துளிர்கள் போன்று லலிதையின் பல்வரிசை சோபிதமாக இருக்கின்றன என்று லலிதாஸஹஸ்ரநாமம் கூறுகிறது. சுத்தவித்யாஸ்குராகாரத்விஜபஸ்க்தி த்வயோஜ்வலா என்ற இந்த நாமத்தைச் சொல்லிவிட்டு, அதனுள் அடங்கியுள்ள தத்வத்தையும் ஸ்ரீ பாஸ்கரராயர் விளக்கிச் சொன்னார்.

சாக்த தந்தரங்கள் சுத்தவித்யை முதல் 32 வித தீக்ஷைகளைக் கூறுகின்றனவாம். அந்த முப்பத்திரண்டு தீக்ஷைகளே அம்பிகையின் பல்வரிசை! சாதாரணமாக ஸ்ரீவித்யைதீக்ஷை மூன்றாவது தீக்ஷையாகியது. அதாவது மூன்றாவது ஜனனம். முதல் ஜனனம் தாயின் வயிற்றிலிருந்து வெளிவருவது; இரண்டாவது உபநயனம், மூன்றாவது ஸ்ரீவித்யை. சக்தி

வழிபாட்டில் இந்த ஸ்ரீவித்யை தீக்ஷை பெற்றவர்கள் பெரும் பாக்யசாலியாவார்கள். இவர்களே அம்பிகையின் படிவங் களாகவும் திகழ்கிறார்கள். ஸ்ரீஷோடசாக்ஷரீ மந்த்ர உபதேசம் பெற்று, அதை மட்டுமே ஜபித்துக் கொண்டு அதோடு லயமடைகிறார்கள் இந்தப் புண்ணியசாலிகள். இவர்களைத் தரிசிக்கும்போது சாதாரண ஜனங்களுக்கு தங்கள் இஷ்ட தெய்வமான பராசக்தி படிவம் மனக் கண்ணில் பளிச்சிடும். இன்றைய சமூகத்தில் இந்த வகை உபாஸகர்கள் அநேகம் பேர் நடமாடிக் கொண்டிருக்கிறார்கள் என்றாலும், அவர்களில் ஒரு சிலரே தெய்வீகம் பொருந்தி யவர்களாயிருக்கிறார்கள் என்று குறிப்பிடத்தான் வேண்டி யிருக்கிறது. 'ஷோடசாக்ஷரீ' உபதேசம் பெற்றவன் "யானை கட்டி அரண்மனையில் வாழ்வான்" என்று பெருமையாகக் கூறப்படுகிறது. ஆனால், யானை கட்டி வாழ்வதற்கென்றே உபதேசம் பெற்றிருப்பவர்கள் பூனையைக் கூட கட்டி வாழ்வ தில்லை. ஆகவே, எண்ணத்தில் தூய்மை இருந்தாலேயே மந்த்ர ஸித்தி ஏற்படுகிறது என்பது கண்கூடு.

திரு இடை மருதூரிலிருந்து நாகை போய்ச் சேர்ந்தேன். கஞ்சி காமாட்சி, காசி விசாலாக்ஷி, நாகை நீலாயதாக்ஷி என்று பிரசித்தம். இந்த க்ஷேத்ரத்தில் உள்ள நீலாம்பாள் 'ப்ளூஜாகர்' வைரம்போல் ஜொலிக்கிறாள். இடை சற்றே நெளிந்து ஒய்யாரமாக நின்ற நிலையில் தரிசனம் தருகிறாள்.

கச்சபீ என்பது முப்பெரும் சக்தி அம்சங்களில் ஒன்றான வித்யாசரஸ்வதியின் கையில் உள்ள வீணையின் பெயர். தேவீ உபாசகரின் பரம்பொருளான அன்னை பராசக்தியின் கண்டத்வனியை கச்சபீ என்ற சரஸ்வதி தேவியின் வீணை நாதத்திற்கு ஒப்பிட்டு லலிதாஸஹஸ்ரநாமம் வர்ணிக்கிறது. இந்தப் பராசக்தியின் அம்சமாக சரஸ்வதிதேவி கொலு வீற்றிருக்கும் கூத்தனூருக்கு அடுத்துச் சென்று தரிசித்தோம்.

திருக்கடையூரில் அபிராமியும், மாயூரத்தில் அவயாம் பிகையும் சிவகாமேச்வரருடைய மனதை மூழ்கச் செய்யும் புன்னகை தவழும் தோற்றத்தில் காட்சி தந்தார்கள்.

அபிராமியின் அருள் நோக்கின் மகிமையை அறியாதார் இல்லை. பரம பக்தன் அபிராமி பட்டரை ஆபத்திலிருந்து விடுவிக்க அமாவாசையை பௌர்ணமியாக மாற்றி விந்தை புரிந்த பராசக்தி படிவம் அது.

ஸ்திர சுந்தரியாக காழியம்பதியில் கோயில் கொண்டிருக்கிறாள் அன்னை. தர்மஸம்வர்த்தனி என்ற திருநாமம் தாங்கி திருவெண்காட்டில் அகோர வீரபத்ரரின் அதிகார சூழ்நிலையில் தர்மம் தலைகாக்கும் என்று பாருக்கு அறிவித்துக் கொண்டிருக்கிறாள் அன்னை. இத்தலம் காசி கயைக்கு ஒப்பானது. சிராத்தகர்மாக்கள் இங்கே செய்வது தென்னகம் அனுஷ்டிக்கும் ஒரு நியதி. தருமை ஆதீனத்தின் தவத்திரு மகளாக வைத்தீச்வரன் கோயிலில் வாலாம்பிகை வருவோருக்

---

கெல்லாம் கருணை காட்டுகிறாள். இங்கேயெல்லாம் அம்பிகையின் கழுத்தில் ஸௌபாக்கியமான திருமாங்கல்யம் மிக மிக சோபிதமாக அமையப்பெற்றிருக்கிறது. கம்பீரமாக நின்ற கோலத்தில் உலகை ரட்சித்தருளும் அன்னை ஸ்வர்ணமான தோள்வளைகளால் அலங்கரிக்கப்பட்ட புஜங்களோடும் கண்டாபரண ரத்ன பதக்கம், முத்து மாலைகளோடும் தோற்றமளிக்கிறாள்.

அடுத்து அலைமகள் ஆதிக்யத்தில் இருக்கும் நாச்சியார் கோயிலை அடைந்தோம். இங்கு பராசக்தியின் மகாலக்ஷ்மி அம்சம் பரிமளிக்கிறது. மதுரையில் மீனாக்ஷி ராஜ்ய பாரம் ஏற்று உலகம் உய்யக் காரணமாகிறாள். இங்கே குமுதவல்லி என்ற திருநாமம் தாங்கி அடியாருக்கு அஷ்ட ஐச்வர்யங்களையும் அளித்துக் கொண்டிருக்கிறாள் அன்னை. இந்தக் குமுதவல்லித் தாயாரின் திருவுருவை நோக்கும்போது ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்தில்—மாணிக்ய முகுடாகார ஜானுத்வய விராஜிதா, இந்திர கோபபரிக்ஷிப்த ஸ்மரதூணப ஜங்கிகா, கூடகுல்பா, கூர்மப்ருஷ்ட ஜயிஷ்ணுப்ரப தான்விதா, நகதீதிதி ஸம்ச்சன்ன நமஜ்ஜனதமோ குணா, பதத்வய ப்ராபாஜால பராக்ருத ஸரோருஹா சிஞ்ஜாநமணி மஞ்ஜீர மண்டித ஸ்ரீபதாம் புஜா என்றுவரும் நாமங்களின் இலக்கணம் புலனாகிறது.

பொறுக்கி எடுத்த மாணிக்கக் கற்களினால் செய்யப்பட்ட மகுடம் போன்ற முழங்கால் சில்லுகளுடனும் மினு மினுப் பூச்சிகளால் அலங்கரிக்கப்பட்ட மன்மதனுடைய கரும்புவில் அம்புறுத்தூணிகள் போன்ற முழங்காலுடனும், உருண்டு பருத்த குதிகால்களுடனும், ஆமையின் முதுகு ஓடுபோல் அழகாக வளைந்து காணப்படும் புறங்கால்களோடும், தன்னை வணங்குவோரை ஆட்கொண்டு அருள் புரியும் சாந்தியோடு பிரகாசிக்கும் பாத நகங்களோடும், தாமரைப் புஷ்பத்தையொத்த உள்ளங் கால்களோடும் அம்பிகை பிரகாசிக்கிறாளாம்.

இந்தக் குமுதவல்லியின் எழில் தோற்றத்தையே சிறிது நேரம் உற்றுப் பார்த்தோமானால் ஒரு பெண் ஹம்ஸம்

போல் தேவியின் திருவுரு அன்ன நடை போட்டுக் கொண்டு நம் அருகில் வருவது போன்று ஒரு பிரமை ஏற்பட்டாலும் ஆச்சரியப் படுவதற்கில்லை.

இத்தகைய அழகுக் களஞ்சிய மாயிருப்பவளே—தனது மாரியம்மன் அம்சத்திலும், ஸ்ரீ துர்க்கை வடிவிலும் பயங்கர மாகக் காட்சி தருகிருள். கருவாழைக்கரை, ஒழுக மங்கலம், பட்டுக்கோட்டை (நாடிமுத்து அம்மன்) தஞ்சைமாரியம்மன் ஆகிய அம்பிகையின் பிரதிபிம்பங்கள் பிரார்த்தனை தெய்வங் களாகத் திகழ்கின்றன. வைத்தீச்வரன் கோயிலுக்கு மேற்கே ஆறு மைலில் உள்ள திருவாளப்புத்தூர் துர்க்கையும், துதிப்போரின் பயத்தைப் போக்கி, பிணியை அகற்றி அபயமளிக்கும் அன்புத் தெய்வங்கள்.

புதுக்கோட்டை பிருகதாம்பாள் சந்நிதியில் ஸ்ரீபாஸ்கர ராயர் மௌனமாயிருந்து த்யானத்திலமர்ந்தார். அம் மஹானையும், அவரை திடீரென்று அந்நிலைக்கு கொண்டு வந்த பிருகாதாம்பாள் அன்னையையும் இனந் தெரியாத ஒரு வியப்போடு நான் பார்த்துக்கொண்டிருக்கையில் அம்மஹான் நிஷ்டை கலைந்து பேசத் தொடங்கினர். "யோகி ஒருவரால் ஆராதிக்கப்பட்ட தெய்வத்தாய் இந்த சக்தி படிவம். ஸ்ரீசதா

சிவ பிரும்மேந்த்ராள் இத்தேவியை தன் இஷ்ட தெய்வமாகக் கொண்டு உபாஸித்து ஜீவப்ரும்ம மஹநீயராக இருந்து வருகிறார். மிகவும் புராதனமான பிரதிஷ்டை. பார்த்தா பரமசிவனுடைய இடப்பாகத்தை ஆக்ரமித்துக் கொண்டு "சிவகாமேச்வரங்கஸ்தா" என்ற நாமாவளியின் சித்ரவடி வாக திருச்செங்கோட்டில் அர்த்தனாரீச்வரர் வீற்றிருந்து தரிசனம் தருகிறார். இங்கே பிருகதாம்பிகை பிரதிஷ்டையில் சக்தியில் சிவம் ஸூக்ஷ்மமாக ஒடுங்கியிருக்கிறது என்பது ஆன்றோர் வாக்கு. "சிவா" என்று ஒரு நாமம் அம்பிகைக்கு உண்டு. மங்களத்தைச் செய்கிறவள் என்பதால் அப்பெயர் தாங்கியிருக்கிறாள் சக்தி தெய்வம். சிவத்தோடு அபின்ன மாக இருக்கும் இந்த பராசக்தி கைலாசத்திற்கும் அப்பால் உள்ள ஸுமேரு, ஹேமாத்ரி மேரு என்ற பர்வதத்தின் உச்சியில் உள்ள ஸ்ரீநகரத்தில் சிந்தாமணி கிருஹத்தில், பஞ்ச பிரம்மாசனமெனும் பஞ்சப்ரேதாசனத்தில் பிந்து ஸ்தான மாக ஜ்வலிக்கிறாள். இந்த ஸுமேரு பெரிய பெரிய தாமரைப் புஷ்பங்கள் புஷ்பிக்கும் தடாகங்கள் நிறைந்த வில்வவிருக்ஷங் களும் கதம்பவிருக்ஷங்களும் அடர்ந்த காட்டின் மத்தியில் இருக்கிறதாக கவிகள் கூறுகிறார்கள். இக்கதம்பவனமும் ஸுமேருவும் அம்ருத ஸமுத்ரத்தால் சூழப்பட்டிருக்கின்றன. தனது கண்களாலேயே பக்தர்களுக்கு அபீஷ்டங்களைக் கொடுக்கவல்ல மதுரை மீனாக்ஷியின் படிவம் பார்க்கப் பதினாயிரம் கண்கள் வேண்டும்..." என்றார். மதுரையில் பக்தி உள்ளத்தின் மனோரதங்களை நிறைவேற்றும் காம தாயினியைக் கண்குளிரக் கண்டு விட்டு பராசக்தியின் லக்ஷ்மி சொரூபம் ஒரு மாபெரும் தமிழ் இலக்கியமாகத் தோன்றக் காரணமாயிருந்த ஸ்ரீவில்லிப்புத்தூரை அடைந்தோம். ஆண்டாள் என்ற திவ்யநாமம் தாங்கி பிரேமை நிறைந்த பக்தியால் ஸ்ரீமகா விஷ்ணுவை அடையும் வழியை உலக மாந்தருக்குக் காட்டிய சூடிக் கொடுத்த சுடர்க் கொடியை வலம் வந்து, சிவ - விஷ்ணு பேதமின்றி அபேதமாக ஸ்ரீசங்கர நாராயணனாக கோமதியம்மையை தன் பக்கத்தில் தவக் கோலத்தில் எழுந்தருளச் செய்து அடியாரின் பேத

உள்ளத்தில் தெளிவை ஏற்படுத்தும் தெய்வத் திருக் கோலத்தை சங்கரநயினுர் கோயிலில் தரிசித்தோம். இங்கு கோமதியம்மன் தவமிருந்து இந்த சங்கர நாராயணனின் கைப்பிடித்ததாக ஐதீகம். அம்மையின் ஆடித்தவசு உற்சவம் வெகு ஆடம்பரமாக நடைபெறுகிறது. பிள்ளைப் பேறு வேண்டியும், சுக செளபாக்கியங்கள் வேண்டியும் காம்யமாக திருவருள் நாடும் பக்தி உள்ளங்களை இந்த கோமதியம்மன் ஏமாற்றுவதில்லை.

" ஸ்ரீமத் வாக்பவ கூடைகஸ்வருப முகபங்கஜா "
" கண்டாத : கடிபர்யந்த மத்யகூட ஸ்வருபிணி "
" சக்திகூடை காதபன்ன கட்யதோ பாகதாரிணீ "

லலிதா ஸஹஸ்ர நாமத்தில் மேற்குறிப்பிட்ட மூன்று நாமங்களும் பராசக்தியின் ஸூக்ஷ்ம ரூபத்தை விவரிக்கின்றன. நாம் காணும் ஒவ்வொரு ஸ்தூல படிவத் திலும் இந்த ஸூக்ஷ்ம ரூபங்களும் அடங்கியிருப்பதாலேயே

சக்தியுள்ள தெய்வங்களாக அவை போற்றப்படுகின்றன. பஞ்சதசி மந்த்ரம் அம்பாள் ஆராதனையில் மிக முக்கிய மானது. அதன் முதல்பாகம்—ஐந்து அங்கங்களோடு கூடியது. வாக்பவகூடம் என அழைக்கப்படுகிறது. இதுவே அன்னையின் முக பங்கஜமாகும். அடுத்தது கழுத்துக்குக் கீழே இடுப்பு வரையுள்ள மத்ய கூடமென்ற காமராஜகூடம். இது ஆறு அங்கங்களோடு கூடியது. இடுப்புக்குக் கீழ் உள்ள பாகம் மூன்றுவதான சக்திகூடம். பஞ்சதசி மந்த்ரத்தின் கடைசி பாகம்: நான்கு அங்கங்களோடு கூடியது. இந்த மந்த்ர ஸூக்ஷ்மரூப பாகங்களே ஸ்தூல வடிவிலும் சாந்தியுடன் பொருந்தியுள்ளது. இதனாலேயே அவளைக் காந்திமதி என்று ஸஹஸ்ரநாமம் பூரணத்வத்தை அளித்து விளம்புகிறது. இந்தப் பரிபூரணானந்த மயமான திருவுருவைத்தான் திருநெல்வேலியில் காந்திமதி அம்மன் என்று நாமம் சூட்டி பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள். நெல்லையப்பரைக் காட்டிலும் காந்திமதியே நெல்லை மாவட்டத்தில் பிரசித்த மானவள். ஒவ்வொரு இல்லத்திலும் பிறக்கும் பெண் குழந்தைகளில் ஏதேனும் ஒன்றை காந்திமதி எனப் பெயரிட்டுக் கூப்பிட்டு இந்தப் படிவ தேவியின் பால் பெரும் பக்தி காட்டி பயனடைகிறது. இங்கு வழக்கில் இருக்கிறது. இந்தப் பெரிய பழமையான தலத்தில் சிறிது நேரம் இன்பம் நுகர்ந்த பின்னர் சேரளத்திற்குள் பிரவேசம் செய்தோம்.

பகவதி என்ற திருநாமம் பூண்டு அன்னை இந்தப் பரசுராம க்ஷேத்திரத்தில் அநேக தலங்களில் அமர்ந்திருக்கிறாள். 'பக' மென்ற பதத்திற்கு பல அர்த்தங்கள் உண்டு. பூர்ண மான ஐச்வர்யம், தர்மம், யசஸ், ஸ்ரீ, ஞானம், விஞ்ஞானம், மாஹாத்ம்யம், வைராக்கியம், யோனி, வீர்யம், ப்ரயத்னம், இச்சை, ஸூர்யன், முக்தி இவைகளோடு பராசக்தி கூடி யிருப்பதால் பகவதி, பகமாலினீ என்ற நாமங்கள் அவளை அடைந்துள்ளன.

" உத்பத்திம் ப்ரளயம் சைவ பூதானும் கதிமாகதிம்
அவித்யா வித்ய யோஸ்தத்வம் வேத்தீதி பகவத்யாஸன
(தேவிபாகவதம்)

" பூஜ்யதேயா ஸுரை : ஸர்வை : தாம்ச் கைவபஜதே யத :
ஸேவாயாம் பஜதிர்தூது : பகவத்யேவ ஸாஸ்ரும்தா : "
—சக்தி ரகஸ்யம்

மேற் குறிப்பிட்ட இரண்டு ச்லோகங்களும் பகவதி அம்சத்தின் லக்ஷணம், சிறப்பு, தத்வம், ஆகியவற்றை விவரிக்கின்றன. இச்சா சக்தி, ஞான சக்தி க்ரியாசக்தி மூன்றையும் அளவின்றி ஆராதிப்பவர்களுக்கு அளிக்கவல்லவள் பகவதி. கேரளத்தில் இந்தப் பகவதி கன்யாகுமரி, திருவனந்தபுரம், சோட்டாணிக்கரை, கொடுங்கலூர், பழையனூர் முதலிய இடங்களில் வெகு வெகு பிரசித்தமாகத் தனியாட்சி செய்து வருகிருள் என்ருலும் சிவ சக்தி ஐக்ய ஸ்வருபிணியாகவே அடியார் உள்ளம் அவளை நாடி வழிபட்டு மேன்மையடைகிறது. பரசுராம கல்பத்தைக் கலப்படமின்றி அனுஷ்டித்து வரும் கேரள க்ஷேத்ரங்கள் அனைத்திலும் சக்தியும், சாந்நியத்மும் ஒன்ருேடுஒன்று போட்டிப்போட்டுக் கொண்டு பக்தர்களை ஆகர்ஷணம் செய்கின்றன. கேரள பகவதி பிரதிஷ்டைகள் எல்லாமே பிரார்த்தனை

---

தெய்வங்கள்: குலதெய்வமெனக் கொண்டாடும் பக்தர் களுக்கு அவை பேசும் தெய்வங்கள்.

செங்கனூர், திருப்போணித்துறை, கொல்லம், கோட்டயம், திருச்சூர் வைக்கம், கடைத்திருத்தி, ஏத்துமானூர் போன்ற தலங்களில் பகமாலினியான பகவதீ பரமனோடு சேர்ந்தே காட்சி தருகிறாள். இங்கேயெல்லாம் பகவதியை பகவானோடு இணைத்துப் பார்த்தே பரவசமெய்துகிறார்கள் பக்தகோடிகள்.

முப்பெரும் சக்திகளோடு ஒன்றாய்த் திகழும் பராசக்தி யான இந்தப் பரதேவதையை பத்மநாப ஸஹோதரி யாகவும் வழிபடுகிறோம். திருக்கோஷ்டியூர், திருக்குறுங்குடி போன்ற பிரபலமான வைணவ ஆலயங்களில் அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வங்களாக வீற்றிருந்து அபேதத்தை அறிவுறுத்துவதைக் காணலாம். பராசக்தியை ஆயிரம் படிவங்களாக அழகுற விளக்கிக் காட்டும் லலிதா ஸஹஸ்ர நாமத்தில் வைஷ்ணவீ, விஷ்ணுமாயை, கோவிந்தரூபிணி என்று சில நாமங்கள் விஷ்ணுபரமாக அமைந்திருப்பதைப் பார்த்தால் சிவ விஷ்ணு பேதத்திற்கு இடமிருக்க முடியாது. அத்வைதம் த்வைதம் விசிஷ்டாத்வைதம் போன்ற வேத சாஸ்த்ர தத்வ விளக்கங்களை ஆராய்ச்சிக் கண் கொண்டு பார்த்தால் சிவனும், சக்தியும், விஷ்ணுவும் ஒன்றேதான் தெளிவாகும். ஆனால், அறியாமையில் சிக்குற்ற நாம் அகண்ட ஆழ்கடலான வேதஸ்வரூபத்தைக் காணத் தெரியாது. பக்தி விஷயத்தில் மன்னிக்கும்படியான குற்றங்கள் — சிவ, சக்தி, விஷ்ணுபேதம்—அவ்வப்போது புரிந்து வருகிறோம். ஆனால் வர்ணம் ஆச்ரமம் ஆகியவற்றைப் பிரிவு செய்து ஸ்தாபித்தவளும், தன்னுடைய ஆக்ஞா ரூபங்களாக வேதங் களையுடையவளுமான இந்த பரப்ரும்ம ஸ்வரூபிணி தவறு செய்யும் நம்மை மன்னித்துக் காத்து ரக்ஷிப்பதற்காகவே ஒவ்வொரு ஊரிலும் பிடாரியம்மனாகவும், மாரியம்மனாகவும், எல்லைக்காளியாகவும் பிரதிஷ்டை பெற்று ஊர் ஜனங்கள் அனைவருக்கும் ஜாதி, மத, இன, வகுப்பு பேதமின்றி கருணை காட்டி வருகிறாள்.

கேரள பகவதி கோயில்கள் யாத்திரை முடித்துக் கொண்டு முன்னால் குறிப்பிட்ட சில கிராம தேவதைகளையும் தரிசிக்க நினைத்து கோனியம்மன் கொலுவீற்றிருக்கும் கோவை நகரை அடைந்தோம். எந்த ஒரு காரியத்தையும் ஆரம்பிக்கும் முன்பு இந்தக் கோனியம்மனின் அனுமதி யையும் அனுக்ரகத்தையும் பெற்று விடவேண்டும் என்ற சங்கல்பத்தோடு அந்த சந்நிதியில் குழுமியிருந்த அடியார் கூட்டத்தோடு என்னையும் சிறிது நேரம் நிறுத்தி வைத்து விட்டு மற்றொரு தலதேவியான சௌடாம்பிகை கோயி லுக்கும் போய்விட்டு, ஸ்ரீ பாஸ்கரராயர் பவானி என்று நாமகரணம் சூட்டப்பட்டு காவிரியின் கரையில் சங்கமேச் வரரோடு சங்கமமாகி சௌந்தர்யத்தின் சிகரமாக சோபிக் கும் ஈரோடு சிவன் கோயிலுக்கும் அழைத்துச் சென்றார்.

'பவ' என்றால் ஜலம். பரமசிவனுடைய அஷ்ட மூர்த்திகளில் ஜலமூர்த்தியான 'பவர்' என்ற அம்சத்தின் பத்னி பவானி. "தஸ்மாத் ஆபோ பவ: ஸ்ம்ருதா" என்ற சாஸ்திர வாக்கின்படி பார்த்தால் ஜீவனரூபமானஜலத்திற்கு ஜீவனைக் கொடுப்பவள் பவானி என அழைக்கப்படுகிறாள்.

இந்த பவானி தேவியின் ஆலயம் அமைந்திருக்கும் இடம் விசேஷ முக்கியத்துவம் வாய்ந்தது. இந்த இடத்தை தக்ஷிண பிரயாகை என்பார்கள். கங்கை யமுனை, சரஸ்வதி (அந்தர்முகம்) ஆகிய மூன்று நதிகளும் பிரயாகையில் சங்கம மாவதுபோல் இங்கே சங்கமேச்வரர் சாட்சியாக காவிரி பவானி, அமுத நதி (அந்தர் முகம்) மூன்றும் கலந்து இத் தலத்தை பன்மடங்கு புனிதமாக்குகிறது. பவானி என்று இந்தத் தெய்வத்தாயை எல்லோரும் வழிபட்டு மேன்மை யடைகிறார்கள் என்றாலும், புராண வரலாறு இத் தேவியை வேதநாயகி என்று நாமமிட்டு அழைக்கிறது. வடக்கில் க்ஷீரபவானி எத்தனை காந்தியத்தோடு விளங்குகிறதோ, அதேபோன்று வேதநாயகி என்ற இந்த பவானி தெற்கே பிரபலமாயுள்ளது. இவ்வாலயத்தில் இன்னுமொரு விசேஷம் என்னவென்றால் சிவ விஷ்ணு ஒற்றுமையை உலகுக்கு இது பறைசாற்றுகிறது. இங்கு சங்கமேச்வரர் ஆலய வெளி

முற்றத்தில் ஸ்ரீ ஆதிகேசவப் பெருமாளும் செளந்தரவல்லித் தாயாரும் தனித்தனி சந்நிதிகளில் தரிசனம் தருகிறார்கள்.

திருச்செங்கோடு கெளலினி (அர்த்தனாரி) யைத் தரிசிக்க வேண்டியதன் அவசியத்தை வற்புறுத்திய ஸ்ரீபாஸ்கரராயர் தமது ஸஹஸ்ரநாம பாஷ்யத்திலிருந்து கருத்துச் செறிவோடு கூடிய ஒரு மேற்கோளை எடுத்துச் சொன்னார். கெளலினீ என்ற நாமம் தாங்கிய பராசக்தி படிவம் திருச்செங்கோட்டில் ஸ்தூலமாக இருக்கிறது. குலம் என்றால் சக்தி என்றும் அகுலம் என்றால் சிவன் என்றும் பொருள் கூறப்படுகிறது. அவ்விரண்டின் சேர்க்கையே கெளலம் என்ற பதம். அந்தக் கெளல ரூபத்தில் இருக்கும் அன்னையைத்தான் கெளலினி என்று தேவிதாஸர்கள் வழிபடுகிறார்கள். தீவிர சிவபக்தர்கள் இந்த அதியற்புதமான சேர்க்கையில் சிவனை உயர்த்தி 'அர்த்தனாரி' என வழிபடுகிறார்கள். ஆக இந்த இரண்டு நாமமும் காமேச்வர—காமேச்வரீ ஐக்யத்தையே குறிப்பிடு கின்றன.

சேலத்தை யடையுமுன்பு நாமக்கல் நாமகிரி தாயாரை வழிபட்டோம். ஸ்தல நாயகன் நரஸிம்ஹருக்கு ஒரு மாத்திரை அதிகமான பிராபல்யத்தோடு இந்த மகாலக்ஷ்மி அம்சம் இங்கே கொலுவீற்றிருக்கிறது. இந்த நாமகிரித் தாயார் ஒரு வரப்பிரஸாதி. தவம் கிடந்து நரஸிம்ஹ மூர்த்தியாக அவதார நோக்கம் முடிந்த பிறகும் சஞ்சரித்துக் கொண்டிருந்த மகாவிஷ்ணுவை திரும்பப் பெற்றவள் இந்த நாமகிரி நாயகி. தன் தவம் சித்தியடைந்ததற்கு அறிகுறியாக தன்பால் தவமிருந்து பிரார்த்திக்கும் பக்த கோடிகளுக்கு அபீஷ்ட சித்தியை வாரிவழங்குகிறாள். இங்கே அம்பிகையை ஸ்ரீகரி என்று சொல்வது பொருந்தும். ஸ்ரீ என்ற பதத்துக்கு ஸம்பத்து, லக்ஷ்மி, மங்களம், சோபை, காம்பீர்யம் அழகு, ஒளி என்று அர்த்தங்கள் கூறலாம். ஸ்ரீதர: ஸ்ரீகர: ஸ்ரீமான் என்று விஷ்ணுவைக் குறிக்கும் நாமாவளிகளோடு ஒப்பிட்டுப் பார்த்தால் ஸ்ரீமகாவிஷ்ணுவோடு அபின்னமாக இருப்பவள் என்பதால் ஸ்ரீகரி என்ற பெயர் தாங்குகிறாள் அன்னை என்பது புலனாகும். தவிர இங்கே அன்னையின் தவக்கோலத்

தைத் தரிசிக்கையில் லலிதா ஸஹஸ்ரநாமத்தில் வரும் "நிர்மதா" (கர்வம் இல்லாதவள்) "நிச்சிந்தா" (கவலை இல்லாதவள்) "நிரஹங்காரா" (அகந்தை இல்லாதவள்)! "நிர்மோஹா" (மயக்கம் பிரேமை அற்றவள்) "நிர்மமா" (மமதை இல்லாதவள்) "நிஷ்பாபா" (பாபம் இல்லாதவள்) "நிஷ்க்ரோதா" (கோபமில்லாதவள்) என்ற பதங்களின் வர்ணனைகள் பக்தனுக்கு மனத்திரையில் தோன்றும். தவிர இவள் நம்மிடையேயுள்ள கர்வத்தைப் போக்கடிப்பவளாகவும், கவலையை நீக்குபவளாகவும், அகந்தைக் கிழங்கை முளையோடு அறுத்து எறிபவளாகவும், மோஹத்தை நசுக்குபவளாகவும், பாபத்தை அணுகாதபடி தடுக்கக் கூடியவளாகவும், கோபத்தை சமனம் செய்பவளாகவும் அருள்பாலிக்கிருள். இத்தகைய தீய குணங்களின் அடிமையாகியபின் நாம் என்னதான் தானம், தர்மம், யக்ஞம், தலம், உபாஸனை எல்லாம் செய்தாலும் அது சுடாத வெறும் களிமண் பாண்டத்தில் நீரை எடுத்து உபயோகிக்கக் கருதுவது போல்தான் முடியும்.

பக்தர்களுடைய உலோபித்தனத்தை போக்குபவளும் சந்தேகப் பேய் அணுகாமல் தடுத்தாட் கொள்பவளும், ஸம்ஸாரபந்தத்தைக் களைபவளும், பேதபுத்தியை சீர்குலையச் செய்பவளும், மரண பயத்திலிருந்து விடுவிப்பவளுமாகிய

இந்தப் பராசக்தியை சாட்சாத் மகாவிஷ்ணு பரமசிவனுக்கு தாரைவார்த்துத் திருமணம் செய்வித்த கதையை தாரை மங்கலம் கயிலாயநாதன் கோயிலில் கேட்பதோடு அழகிய சிற்பவடிவிலும் பார்க்கிறோம். இது பெண்வீடு.(பார்வதியின் திருமணம் நடந்த தலம்) என்பதால் மங்கை நகரம் என்றும் வழங்கலாயிற்று. தில்லையம்பலத்துச் சிவகாமி என்ற தெய்வத் தமிழ்ப் பெயரையே இந்தத் தலத்திலும் அம்பிகை தாங்கியிருக்கிறாள். இங்கு நித்யகல்யாணியாக மணம் புரிந்து கொண்ட காட்சி. அங்கே தில்லைக் காளியாக களி நடனம் ஆடிய காட்சி.

பராசக்தி படிவங்களில் துர்கை அம்சம் பிரத்யட்சத்தில் நம்பிக்கையுள்ளவர்கள் ஆராதிக்க உதவுகிறது. பெரும் பயனும் கிட்டுகிறது. துக்கம், துஷ்டர்களால் தொல்லை. தோஷங்கள் காரணமாக ஏற்படும் உத்பாதங்கள், எல்லா வற்றையும் பக்தனை அறியாதபடி காத்து ரட்சிப்பவள் துர்க்கை. ஆகவேதான் புராதனமாக நமது தேவாலயங் களில் ஆட்சி செலுத்தும் புராதன மூர்த்திகளோடு துர்க்கையும் பிரதிஷ்டை செய்யப் படுகிறாள். எப்படி நவக் ரஹங்கள் ஆராதனையில் சனீச்வரபகவானுக்கு முதல் இடம் கொடுத்து பயபக்தியோடு அவர் அருளை நாடுகிறோமோ, அதே போல் பராசக்தி படிவங்களில் துர்க்கை வழிபாடு அதி முக்கியமானதாகிறது. இவ்வளவு சக்தி வாய்ந்த துர்க்கையை ஒன்பது வயது கன்னியென சாஸ்த்ரங்கள் விவரிப்பதைப் பார்க்கும் போது அந்தத் தெய்வ நிலையின் சக்தி குறித்து நாம் வியப்பிலாழ்கிறோம்.

இந்தத் தேவி தனி ஆலயம் கொண்டு காட்சி தரும் இடங்கள் வெகுசிலதான் : புராதன தலங்கள் இல்லை என்றே சொல்லலாம். சமீபகாலத்தில் தருமை ஆதீனத்தில் பிரதிஷ்டை ஆகியிருக்கும் துர்க்கையும், சேலம் இடப்பாடி ஸ்கந்தாச்ர மத்தில் ஸ்ரீலஸ்ரீ சாந்தானந்த சுவாமிகள் அவர்களுடைய ஆக்ஞா அனுக்ரஹம் காரணமாகக் காட்சிதரும் துர்க்கையும் பாரொளி காக்கும் பரமனிலைகள்.

திருக்காளத்திக்குச் சென்றோம். ஸர்வமந்த்ர ஸ்வரூபி யானவள் இங்கு ஞானப் பூங்கோதையாக தரிசனம் அளிக்கிறாள். தக்ஷிண கைலாயங்களில் இத்தலமும் ஒன்றாகும். விஷயங்களைக் குறித்து ஏற்படும் பற்று, பந்தம், பாசம் எல்லாவற்றையும் ஹ்ருதயத்திலிருந்து அகற்றி பரப்ரும்ஹ தியானம் பண்ணும் நிலையை உன்மனீ பாவம் என்று சாஸ்திரம் கூறுகிறது. இந்தப் பாவம் மனத்தில் வேரூன்றியதும் அன்னைப் பராசக்தி தேவிதாஸரின் பக்குவப்பட்ட மனதிதலத்தில் அமர்கிறாள். அவளுடைய அந்தப் படலத்தை விசேஷித்துக்கூற மனோன்மணீ என்று ஸஹஸ்ரநாமம் கூறுகிறது. உத்க்ருஷ்டமான ஞானத்தோடு கூடியிருக்கும் தன்மை (உன்மனீ பாவம்) திருக்காளத்தி உறை ஞானப் பூங்கோதையின் சந்நிதியில் நன்கு பரிமளிக்கிறது.

லக்ஷ்மீகடாட்சம் பெற விழையாத மனிதப் பிறவி இருப்பதற்கில்லை. அம்பிகையின் அம்சமான மஹாலக்ஷ்மி கரவீரக்ஷேத்திரத்தில் (கோலாப்பூர்) கணக்கிட்டுச் சொல்ல முடியாத காலத்திலிருந்து கொலுவீற்றிருக்கிறாள். பம்பாய் மாநகரத்திலும் ஒரு மஹாலக்ஷ்மி கோயில் உள்ளது. மற்றும்

விஷ்ணு ஆலயங்களில் தனது ரூபமான மகாலக்ஷ்மி படிவங்களில் விஷ்ணுபத்னியாக வெவ்வேறு நாமங்களைத் தாங்கி அனுக்ரகம் செய்கிருள். ஆனல் இந்த மகாலக்ஷ்மீ திருக்கோலத்தில் அன்னையின் வயது பதின்மூன்றேதான் என்று தெரிகிறது. காளத்தியின் ஞானபரமான ஞானப் பூங்கோதையைக் கண்டுகளித்து விட்டு, கைப்பிடித்த கணவனை திருமணச் செலவுக்கு குபேரனிடம் கடன்படச் செய்து, அக்கடனுக்கு வட்டியைக் கொடுக்க அடியார்களிடமிருந்து பிரார்த்தனை நிதியாகத் திரட்டிக்கொண்டு, இல்லற இன்பத்தை அநுபவியாமல் வேங்கடாஜலமலைமேல் தனியாக நிற்க வைத்துவிட்டு திருச்சானூரில் ஜம்மென்று, உட்கார்ந்து புருஷனுக்கு பிரார்த்தனை நிதியை வாரிவழங்க வேண்டி பக்தர்களுக்கு பத்மாஸனத்தில் லக்ஷ்மீ கடாட்சத்தை பொங்கிவரும் கடலலைபோல காட்டியருளும் ஸ்ரீஅலமேலு மங்கைத் தாயாரை நமஸ்கரித்தோம். மஹத்தான ஐச்வர்யத்துடன் 'மஹைச்வர்யா' என்ற நாமத்தோடு கூடிய அம்பிகையின் படிவங்களில் திருச்சானூர் திருமகள் ஸ்தானத்தையும் குறிப்பிடலாம்.

மஹாயோகேச்வரேச்வரீயான இந்தப் பரம்பொருள்,மகத்தான தந்த்ரகளுக்கும், மந்த்ரங்களுக்கும் யந்த்ரங்களுக்கும் ஜீவ ஊற்றுக்களாக அமைகிருள். இவற்றில் சக்தி உபாஸங்கள் அம்பிகையின் ஸ்தூல ஆராதனையைவிட சூக்ஷ்ம மாயைந்த்ர ஆராதனையையே தங்கள் குறிக்கோளாகக் கொண்டுள்ளார்கள். குலார்னவம், ஞானர்னவம் என்ற இருபெரிய பிரிவுகளோடு கூடிய இந்த யந்தர பூஜைக்கு ஏற்ற மந்த்ரங்கள் 'பலா, பகளா' இரண்டும் என்று கூறப்படுகிறது. யந்த்ரங்கள் பூஜா சக்ர, பத்மசக்ர, அம்ருதகட, மேரு, லிங்கம் முதலியன.இந்த ரகஸ்யார்த்தமான ஆராதனையில் ஒன்றிப் போனவர்களுக்கு பராசக்தியைச் சார்ந்துள்ள ஸ்ரீவித்யையே மஹாமந்த்ரம்; ஸித்தவஜ்ரயந்த்ரமே ஹாயந்த்ரம்; 'ஸ்வதந்த்ரம்' என்ற சாஸ்த்ரமே மஹா தந்த்ரம்! ஆதி ஆசாரியாளும், அம்மாஹான் வழிவந்த

மஹாவீயர்களுமே இந்த சாஸ்த்ர நுட்பங்களை அறிந்துணர்ந்து அனுஷ்டித்தவர்கள்.

இந்த விதமாக தேவி வழிபாட்டின் அருமை பெருமைகளை என் சிறிய புத்திக்கு சிறிதளவு விளங்கும் வகையில் கூறிக்கொண்டு வந்த ஸ்ரீபாஸ்கரராயர், வாழ்வோருக்கு வழித்துணையாக அமைந்துள்ள மார்க்கபந்து க்ஷேத்ரமெனப்படும் ஸ்ரீவிரிஞ்சிபுரம் வந்தடைந்தார். வழித்துணை நாதரையும், அவரது பத்னி பச்சைப் பசுங்கொடி (மரகதவல்லி) யையும் தரிசித்துவிட்டு, பிரசித்திபெற்ற சிம்மக்குளம் என்ற புண்ய தீர்த்தக்கரையை அடைந்தோம். அம்மஹானுடைய சிந்தை எங்கோ அவரை இழுத்துச் சென்றது. அதன் பயனாக மிக மிக அருமையான கருத்துக்களை அவர் எனக்கு எடுத்துப் போதித்தார்.

தேவி ஸம்பந்தமான உபநிஷத்துக்களில் பாவனோபஷநித் மிக முக்கியமானது. பரதேவதையின் பாவனையை இது தெளிவாக எடுத்துச் சொல்கிறது. மஹாயாகம் செய்வதன் மூலம் தேவியை ஆராதிப்பது சாலச் சிறந்தது. மஹாயாகமென்பது ப்ராம்ஹி முதலான மாத்ருகா தேவதைகளின் அம்சங்களான அறுபத்தி நான்கு யோகினிகளுக்கு பூஜை நடத்திய பிறகு செய்யப்படும் யாகம். இந்த பூஜை, யாகம் இரண்டையும் கிரமப்படி சிதக்னிகுண்டத்தில் செய்து மஹாபைரவர் என்று கூறப்படும் மஹாசம்புநாதர் லலிதையை ஆவிர்ப்பவிக்கும்படி செய்ததாக லலிதோபாக்யானம் சொல்கிறது. இந்த லலிதையே பின்னர் மஹேச்வர மஹாகல்பமஹா தாண்டவம் புரிந்துபிரளயத்தைத் தோற்றுவித்தபோது ஏக ஸாக்ஷிணியாக இருந்து அனுபவித்து, தனது இச்சையினால் மீண்டும் பிரபஞ்சத்தைத் தோற்றுவித்தாளாம். இந்தத் திரிபுரஸுந்தரியே மும்மூர்த்திகளுக்கு முன்னேயிருப்பவள்; அம்பிகையை ஆராதிக்கும் வகையைக் கூறும் ஸஹஸ்ரநாமம் இந்த மஹா திரிபுரஸுந்தரியை விவரிக்கும் போது "திரிபுரா" "த்ரிஜகத் வந்த்யா" (மூன்று லோகங்களிலும் வணங்கப்படுபவள்) "திரிமூர்த்தி" (முப்பெரும் மூர்த்திகளான பிரும்மா, ருத்ரன், விஷ்ணு ரூபமாயிருப்பவள்)

"த்ரிதசேச்வரி" (தேவர்களுக்கெல்லாம் ஈச்வரி) "த்ரியக்ஷரீ" மூன்று அக்ஷர வடிவானவள் எனக் கொண்டாடுகிறது. கடைசியாகக் கூறப்பட்ட 'த்ரியக்ஷரீ' என்ற நாமம், யுகாக்ஷர, மாஹாக்ஷர, நித்யாக்ஷர சேர்க்கையையே பெரும்பாலும் குறிக்கும்.

கிரமப்படி பூஜை செய்யும் உபாஸகன், பரதேவதையை சாஸ்த்ரங்கள் கூறும் அறுபத்தி நான்கு விதங்களில் உபசரிக்கிறான். அறுபத்தி நான்கு கலைகளின் ஸ்வரூபமாயிருந்து மஹாசதுஷ்ஷஷ்டி கோடியோகினி கணங்களால் சதா பூஜிக்கப்படுகிறாள் தேவி. தர்மசாஸ்த்ரத்தை ஸனாதன பாரத சமுதாயத்திற்கு அளித்த மனுவும், சந்த்ரனும் மற்றும் பத்து உபாஸகர்கள் ஸ்ரீ வித்யாரூபிணியான மஹாசக்தியை மேற்குறிப்பிட்ட விதங்களில் பூஜை செய்து மேன்மையடைந்தவர்கள்.

நித்ய சுத்த சைதன்யத்தின் ஸ்வரூபமாயுள்ள அன்னை த்ரைலோக்ய மோஹனம் முதலான ஒன்பது சக்ரங்களுடைன் விளங்கும் ஸ்ரீ சக்ரத்தை வாசஸ்தலமாக்கிக் கொண்டிருக்கிறாள். இந்த ஸ்தானத்தில் வைத்து அவளை பூஜிக்கும் உபாஸகன் அவளுடைய ஸௌந்தர ரூபத்தைக்கண்டு இன்புறுகிறான் : அழகு கொந்தளிக்கும் மோஹனச் சிரிப்பில் லயிக்கிறான் ; அவள் சிரஸில் தேஜோமயமாக அலங்கரிக்கும் சந்த்ர கலையைக் கண் குளிரக் கண்டு பரவசமடைகிறான் ! அவள் ராஜராஜேச்வரியாக, பஞ்சப்ரும்ம ஸ்வரூபமாக பஞ்சப் பிரேதங்களாலான மஞ்சத்தில் அமர்ந்து உலகைக் காத்தருளும் விந்தையை ரஸித்து தனக்கு நற்கதியளிக்கப் பிரார்த்திக்கிறான். பஞ்சக்ருத்யத்தை (ச்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோதனம், அனுக்ரஹம்) தன்னுள் அடக்கிக் கொண்டு பரப்ரும்மஸ்வரூபிணியாயுள்ள பரதேவதை உபாஸகனின் மேன்மையில் விசேஷ அக்கறை காட்டுகிறாளாம்.

கண்களைத் திறப்பதனால் பிரபஞ்சத்தை ஸ்ருட்டித்து, மூடுவதால் அதை அழிக்கும் தேவியின் சக்தியை தத்வார்த்தமாக உணர்ந்த மகான்கள் அந்த சக்தி தத்துவத்தின் ஸ்மரணை

யிலேயே அகம், புறம் இரண்டையும் அடக்கம் செய்து ஆனந்தமடைகிறார்கள்.

இத்தனை மகிமை வாய்ந்தவள் புருஷார்த்தங்களை உபாஸகனுக்கு அளிப்பதில் வியப்பில்லை. பக்தியின் பூர்ணமாயும், போகத்தின் சிகரமாகவும் உள்ள இந்த புவனேச்வரீ தமது சிருஷ்டியலடங்கிய புவனத்தை கருணையுடன் ரட்சிக்கிறாள். ஹ்ரீம்காரபீஜமே புவனேச்வரீ பீஜம். இந்த பீஜாக்ஷரத்தை உபதேசமாகப் பெற்று அநேகமனேகம் உபாஸகர்கள் தேவியின் புகழைப்பாடி, தாமும் பிரகாசிக்கிறார்கள். இந்த புவனேச்வரீ படிவத்தை புவனேசீ என்றும், புவனாதீச்வரீ என்றும் தக்ஷிணாமூர்த்தி ஸம்ஹிதையில் விவரிக்கப்பட்டிருக்கிறது.

[சமீபத்தில்—சில ஆண்டுகளுக்கு முன்பு—புதுக்கோட்டையில் ஸ்ரீ சதாசிவபிரும்மேந்த்ர ஸரஸ்வதியவதூத் ஸ்வாமிகள் அதிஷ்டானத்தில் சத்குரு ஸ்ரீமத் சாந்தானந்த ஸ்வாமிகள் ஸ்ரீ புவனேச்வரியை பிரதிஷ்டை செய்து அன்னையின் அருட்கடாக்ஷம் ஆயிரக்கணக்கானபக்தர்கள் மீது பட வழிவகை செய்தருளியுள்ளார்கள். புவனேச்வரி என்றதுமே புதுக்கோட்டைபிரதிஷ்டை ஒன்றுதான் இந்த இருபதாம் நூற்றாண்டில் அன்பர்கள் அகக்கண்ணில்பதிகிறது. புறக் கண்கொண்டு இந்தத் தேவியின் திவ்யாலங்கார தோற்றத்தை தரிசித்து வருபவரும் பாக்கியசாலிகளானவர். அநேகர் கண்கண்ட தெய்வமெனப் போற்றி அவள் திவ்ய பிராஸதத்தில் திகழ்கிறார்கள். ஜகந்மாதா அமர்ந்து அருள் பாலிக்கும்படிவம் புவனேச்வரீ.

ஆதி, அந்தமில்லாத அன்னையை ஹரி, பிரம்மேந்திரர்களும் ஆராதித்து தியானம் செய்கிறார்கள். நாராயணி என்ற பதத்திற்கு சிவன், விஷ்ணு என்ற இரண்டு அர்த்தம் உண்டு. அதனால்தான் நாராயணனை சிவனைப்பதியாக ஏற்றிருக்கும் அம்பிகைக்கு "நாராயணீ" என்ற நாமமும் பொருத்தமாகிறது.

ஸ்ரீவிரிஞ்சிபுரத்தில் அந்தப் பெரியவர் பாஸ்கரராயர் எதிரில் உள்ள என் அறியாமை, அஞ்ஞானம், அரைகுறைக் கல்வி, மாசுபடிந்த மனம், சர்ச்சைக்குரிய பண்பு, தெளிவற்ற கொள்கை, காமக்ரோத, லோப, மத, மாத்சர்யங்களின் இருப்பிடம் ஆகியவற்றை மறந்து, ஏதோ ஒரு சத் சங்கத்தில் உரையாடுவது போல் அரிய பெரிய கருத்துக்களை எடுத்துச் சொன்னார். இதற்கு நான் சற்றும் அருகதையற்றவன் என்று அவரிடம் சொல்லி மன்னிப்புக் கேட்கலாமா என்று நான் யோசித்தபோது அவர் பேசலுற்றார். "அம்பாளுக்கு ராமா என்று ஒரு நாமம் உண்டு. மிக விசேஷமான தாத்பர்யத்தை மனிதகுலத்திற்கு அது விளக்குகிறது. உலகில் உள்ள சமஸ்த ஜீவராசிகளையும் இரு பிரிவாகக் கருத வேண்டும். ஒரு பிரிவு அம்பிகையின் அம்சம்: மற்றொன்று பரமசிவன் அம்சம். ஆண், பெண் என்ற பேதம், இரு ஜாதிகளைத் தவிர வேறு ஜாதி, மத, பேதம் பாராது எத்தனையோ தவச்ரேஷ்டர்கள் வாழ்ந்த தேசம் பாரத தேசம். ஸ்திரீமாத்ரமான ருபத்தோடு காட்சியளிக்கும் அன்னையை ராமா என்று அன்போடு குறிப் பிடப் படுகிறது. இக் காரணம் பற்றியேதான் ஸ்திரீகளி டத்தில் அன்புடனும், மரியாதையுடனும் நடந்து கொள்ள வேண்டுமென்றும், அவர்களை எப்போதும் சந்தோஷப்படுத்த வேண்டுமென்றும் அவர்கள் சந்தோஷத்தில் குலம் விருத்தி யாவதோடு சகல சம்பத்துகளும் கிட்டிவரும் என்றும் பராசர ஸ்ம்ருதி, மநுஸ்ம்ருதி முதலிய சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. உபாஸகர்கள் அம்பாளுடைய த்யானத்திலும், உபாஸனையிலும் ரசிப்பதாலும் அம்பாளுக்கு ராமா என்று நாமம் உண்டாயிற்று..."

மார்க்கபந்துவை வழி காட்டும்படி வேண்டிக் கொண்டு தக்கோலம் வந்தடைந்தோம். திருஊறல் என்னும் இத்தக் கோலம் சரித்திர பிரசித்திப் பெற்றது என்பதோடு, முக்கிய சிவக்ஷேத்ரங்களில் ஒன்றாகும். உமாபதி ஈச்வரரை மணந்து கிரிராஜ கன்னிகாம்பிகை என்ற திருப்பெயர் தாங்கி கருணா ரஸஸாகரமாகத் திகழும் அம்பிகையின் ஸ்தூலவடிவம் இங்கு பெரும் பொலிவோடு இருக்கிறது.சுபமான வாக்கு ஒன்றையே

தன்னுடையதாக் கொண்டுள்ளதால் அம்பிகைக்கு கல்யாணீ என்ற நாமம் ஏற்பட்டது. சுபாதிகமான வாக்குக்கு 'கல்யா' என்று பெயர். பத்மபுராணம் இந்தக் கல்யாணி யின் படிவத்தை மலையாசல தலம் என்று குறிக்கிறது. உபஸகன் கோரும் வரங்களைக் கொடுப்பவளானதால் வரதா என்ற பெயரையும் இவள் தாங்குகிருள். தக்கோலம் உமை யம்மையின் சந்நிதியில் இவ்விவரங்களைக் கூறிய பிறகு என்னை நிருத்ய நடேசனின் ரத்னசபையாக தமிழகத்தில் பிரசித்தி பெற்று சிவனடியார்களை ஈர்த்தவண்ணமிருக்கும் திருவாலங் காடு க்ஷேத்திரத்திற்கு அழைத்துச் சென்ருர்.

பரமசிவன் ஆடும் நடனத்திற்குத் தாண்டவம் என்றும், பார்வதியின் ஆட்டத்திற்கு லாஸ்யம் என்றும் பெயர், ஆணும், பெண்ணும் சேர்ந்து ஆடுவது அந்தக் கால மரபு என்பதை வற்புறுத்துவதே பரமசிவனின் ஊர்த்வதாண் டவம். இக்காட்சியைத்தான் திருவாலங்காட்டில் கண்டு களிக்கிரும். காளி சொரூபமாக இங்குள்ள பராசக்தி படிவத்தை வர்ணனை செய்தாலும், அவளுடைய அழகிய நயனங்களில் பெண்மைக்குரிய நாணம், அச்சம், பயிர்ப்பு முதலிய குணவிசேஷங்கள் தென்படுகின்றன. சிவன் வெறி யாட்டம் ஆடும் இடங்களில் அவரை ஆட்டி வைக்கும்

இந்தப் பராசக்தி அடங்கியே இருக்கிறுள். தமிழகத்தில் சிவ பிரானின் பஞ்ச சபை மூர்த்திகளையும் தரிசிப்போர், ஓரளவுக்கு அம்பிகையை மறந்து கூடவிடுகிறுர்களோ? என ஐயமுறும் வண்ணம் அம்பிகையின் இந்த ஆலய படிவங்கள் ஒதுங்கியே இருக்கின்றன. ஆனுல் அடியாரின் உள்ளத்தில் மட்டும் அவள் ஆடவைக்கிறுள் : அவன் ஆடுகிறுன்' என்ற எண்ணம் ஏற்படத் தவறுவதில்லை. காமகலா ரூபியான அன்னை சரிபாதியான காமேச்வரரோடு இணைந்தவள்தானே? ...விச்வம் என்றபதம் ப்ருத்வீ முதல் பிரமனேடு முடியும் எல்லாதத்வங்களையும் தன்னுள் கொண்டதாகும். இந்தத் தத்துவங்களையெல்லாம் கடந்தவளானதால் அவளை 'விச்வாதிகா' என்று ஸஹஸ்ரநாமம் பாராட்டுகிறது. வேதங்களால் மட்டுமே அறியத்தருந்தவளான இந்தப் பர தேவதையைக் குறித்து நாம் த்யானம் செய்யலாமே தவிர ஆராய்ச்சியில் ஈடுபடுவது விவேகமற்ற செய்கையேயாகும்.

திருநின்றவூர் என்று ஒரு தலம். (திண்ணனூர்) பூசலார் கட்டிய இருதய கோயிலில் இருதயாலய ஈச்வரர் மரகதாம்பி கையோடு எழுந்தருளி அந்த அடியாரின் உள்ளக் கோயிலில் ஸ்திராவாஸம் செய்தார் என்று வரலாறு. உள்ளத்தில் உறைந்த இறைவனுக்கு இங்கு ஆலயம் எழுப்பியிருக் கிறுர்கள். அம்பிகையின் திருவுருவம் இங்கு (திரு—மஹா லக்ஷ்மி) பக்தவத்ஸலப்பெருமாள் ஆலயத்தில் ஸ்ரீமத் ஸவித்ரீ நாயகி (என்னைப் பெற்ற தாயார்) என்ற நாமம் கொண்டு அருள் பாலிக்கிறது.

மஹா காமேச்வரருடைய ஜீவநாடியாக இருக்கும் காமேச்வரி திரு முல்லைவாயில் திவ்ய க்ஷேத்ரத்தில் முல்லைக்கொடி கொம்பைத் தழுவி படருவதுபோல், மாசிலாமணி என்ற இத்தல நாயகனை கொடி இடைநாயகி என்று நாமகரணம் சூட்டிக் கொண்டு 'தானே அகில உலக ஜீவநாடி' என்பதை எடுத்துக் காட்டுகிறுள். மிகமிகப் பழமையான இந்தப் படிவத்தில் இணையற்ற ஈடுபாடு கொண்டு சுந்தரர், ஞானசம்பந்தர் போன்ற சமயக் குரவர்கள் அரனையும் அவளில் பாதியான அன்னையையும் அருமையாகப் பாடி துதித்துள்ளனர்.

ஸ்வாத்மானந்தத்தின் பரம்பரையின் ஆதி நாயகியாக அன்னை பராசக்தி சப்த பிரும்மத்தோடும் அபின்னமா யிருக்கிறாள் என்பதை 'பரா, பிரத்யக்சிதிருபா, பச்யந்தீ பரதேவதா, மத்யமா, வைகரீரூபா' என்று ஸஹஸ்ரநாமம் கூறுகிறது. மூலாதாரத்தில் உள்ள குண்டலிநீ என்ற காரண பிந்துவை முறையோடு இயங்கச் செய்ய யோக சாஸ்த்ரம் உபயோகமாகிறது. இதை அனுஷ்டிக்கும்போது காரணபிந்து, கார்யபிந்துவாகி, நாதம் என்ற ஓசையை எழுப்புகிறது. இந்த நாதம்தான் பீஜம் என்ற மந்த்ர அக்ஷரங்களுக்கு உயிரூட்டுகிறது. பரம்ரும்ம ஸ்வரூபிணி யான பரதேவதையை இந்த பீஜமந்த்ர ஓசை சற்றே அசையவைக்கிறது. அவள் அசைகிறாள்; உலகம் உய்கிறது இந்த நிலையில் தேவீ சகலத்தையும் தன்னிடத்தே கண்டு பூரிப்படைகிறாள். பூரிப்பில் திளைக்கும் சமயம் அவள் உத்க்ருஷ்டமான தேவதையாக உபாஸகனுக்கு காட்சிதருகிறாள்.

இப்படி குண்டலனீ சக்தி எழும்பியதும் உண் டாகும் நாதம் அதே அளவில் இருப்பதில்லை. அந்த நாதத்தோடு பராசக்தியும் மேலே மேலே ச்ருதிலயமாக இணைந்து ஏறுகிறாள். 'மத்யமா' என்ற வாக்தேவதையாக அவள் பிரகாசிக்கும்போது புவனமெங்கும் புல்லரிக்கிறது. அதன் இனிமையில் பாகாக இளகி பரிபக்குவம் அடைகிறது பக்தி உள்ளம். இதுவே 'மத்யமா' என்ற படியைச் கடந்து 'வைகரீ' என்ற படியை அடைந்ததும் கடினமாகிறது கர்ஜிக்கிறது. உபாஸகனைத் தத்தளிக்க வைக்கிறது. அதைச் சமாளித்து அதோடு ஒன்றிப்போன உபாஸகன் முழு சாந்நி யத்தையும் அடைந்தவனாகிறான். அம்பிகையை யோகீச வரர்கள் இம்முறையில் உணர்கிறார்களானதால் அவளுக்கு மஹாயோகீச்வர்யை என்ற நாமம் ஓர் அணிகலனாகிறது. க்ருதக்ஞா (எல்லாவற்றையும் அறிந்தவள்) என்றக் காரணத்தால் உபாசகனுடைய நற்செய்கை, தீச்செய்கை இரண்டையும் உணர்ந்து அவள் சந்தர்ப்பத்திற்கேற்ப துஷ்ட நிக்ரஹ சிஷ்டபரி பாலனம் செய்கிறாளாம். பராசக்[illegible] இந்த அவசரத்திற்கு உதவுகிறவர்களாக [illegible]

ஸோமன், யமன், காலம், பஞ்ச மஹாபூதங்களி ஆகிய ஒன்பதும் ஸாக்ஷிகளாக அமைந்துள்ளார்கள். இவர்களைத் தாண்டி உலகில் ஓர் அணுவும் அசையாது. இந்த ஒன்பது சக்திகளிலும் அன்னை பராசக்தியே வியாபித் திருக்கிறுள்.

லலிதா மஹாதிரிபுரஸுந்தரீ என்ற நாமத்தைத் தாங்கியுள்ள அம்பிகையின் படிவங்கள் சிலவற்றில் திருக்கழுக்குன்றம் பிரஸித்தமானது: இந்த்ரன் பூஜித்த வேதகிரீச்வரனை மலைமேல் தரிசித்துவிட்டு ஊரில் நடுநாயக மாக விளங்கும் கீழ் கோயிலுக்குச் சென்றுலேயே இந்த மஹாத்ரிபுரஸுந்தரியைத் தரிசிக்கலாம். "பெண்ணின் நல்லாள்" என இந்த அம்மையை உள்ளம் நிரம்பிப்புகழ்ந்து பாடிப் பரவியுள்ளார் திருஞானசம்பந்தர். சமயக்குரவர்கள் நால்வருமே இந்தக் கற்பகத்தைப்பாடி பேரின்பம் எய்தியுள்ளனர். மெய்ம்மறந்து நின்ற ஸ்ரீபாஸ்கரராயர், அம்பிகையை 'ச்ருங்காரரஸ ஸம்பூர்ணம் அவள்' என்றுர். பராசக்தியை பலவேறு கோணங்களிலிருந்தும் விமர்சித்து உபாஸகர்களை மேன்மையடையச் செய்யும் ஸஹஸ்ர நாமத்தில், நான்கு பீடங்களின்—காமகிரி பீடம், பூர்ணகிரி பீடம், ஜாலந்தர பீடம், ஒட்யாண பீடம்—நாயகியாகக் குறிப்பிட்டிருக்கிறது. இந்த நான்கு பீடங்களே யோகிகள் உணர்ந்து தொழுதேத்தும் நான்கு பரப்ரும்ம நிலைகள். மூலா தாரம், அநாஹதம், விசுத்தி, ஆக்ஞா என்ற ஸ்தானங் களுக்கு குண்டலினீ சக்தியைக் கொண்டு செல்வதே யோக சாதனை. இந்த நான்கு ஸ்தானங்களிலும் பராசக்தி வியாபித் திருந்து, படிப்படியாக உபாசகனை இட்டுச் சென்று தனது ஸ்திர வாசஸ்தலமான பிந்து மண்டலத்திற்குக் கொண்டு போய் ஸாயுஜ்ய பதவி அடையச் செய்கிறுள். எட்டு விதமான குணங்களோடு கூடிய இந்தப் பரதேவதை எப்போதும் தயாநிதியாக விளங்குபவள்; தனக்குவமை யில்லாதவள்: வர்ணிக்க இயலாத ஸுகமானமுக்தியைஅளிக்க வல்லவள் : ஷோடசநித்யா தேவதைகளின் ரூபமாயுள்ள அருணமஹிமா முதலான தேவதா ப்ரபைகளையுடையவள்;

மூலத்திற்கெல்லாம் ஆதிமூலமாயிருப்பவள்; மங்களத்தைப் பூரணமாக அனுக்ரகம் செய்பவள்; உபாஸகர்களையே நேசிப்பவள்; ஸ்வயம்பிரகாசமாயிருப்பவள். சக்தியாக இருப்பவள்; வேதமாதாவான காயித்ரீ தேவி இவள்; தத்வங்களை ஆசனமாகக் கொண்டவள்: (அன்னமய, ப்ராணமய, மநோமய, விக்ஞானமய, ஆனந்தமய) பஞ்சகோசங்களின் மத்தியில் வீற்றிருந்து இயக்குபவள்; நித்யயௌவனமாயுள்ளவள்; குமரன், கணநாதன் இருவருக்கும் தாயாக இருப்பவள்; அமைதியின் இருப்பிடமாக உள்ளவள்; இன்னல்களைப் போக்குபவள்; யுகதர்மத்தை யொட்டிய பாபங்களை நாசம் செய்பவள்: உபாசகனுக்கு பொக்கிஷமாயிருப்பவள்; மஹா கைலாசத்தில் குடும்பம் நடத்துபவள்: ஆத்மஞானரூபிணியாக உள்ளவள்! இத்தகைய பெருமைகளின் ஜீவஊற்றாகவும், ஜீவபிரும்ம ஐக்யத்தின் உதாரணமாகவும் உள்ள திரிபுரசுந்தரியை பரிபூரணமாகப் பார்த்துப் பரவசமடையக் கூடிய பராசக்தி பீடமாக திருக்கழுக்குன்றம் தமிழகத்தில் விளங்குகிறது.

*　　　　*　　　　*

ஸ்ரீபாஸ்கரராயர் சளைக்கவில்லை! ஆனால் நான் களைத்துப் போய்விட்டேன். குருடனை ராஜபார்வை பார்க்க வேண்டும் என்றால் அவனால் முடியுமா?... இருந்தாலும் அந்த மஹான் என் குருட்டுத்தனத்தை (அஞ்ஞானம்) அகற்றி என் அக விழிகளுக்குப் பார்வையளிப்பதில் மகத்தான வெற்றியைக் கண்டுவிட்டார்.

"ஓம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் அவ்யாஜ கருணாமூர்த்தயே நம:
ஓம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் அக்ஞான த்வாந்த தீபிகாயை நம:
ஓம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் ஆபால கோப விதிதாயை நம:
ஓம் ஐம், ஹ்ரீம் ஸ்ரீம் ஸர்வானுல்லங்க்ய சாஸநாயை நம;
ஓம் ஐம், ஹ்ரீம் ஸ்ரீம் ஸ்ரீசக்ர ராஜ நிலயாயை நம:
ஓம் ஐம், ஹ்ரீம் ஸ்ரீம் ஸ்ரீமத் திரிபுர ஸுந்தர்யை நம:
ஓம் ஐம், ஹ்ரீம் ஸ்ரீம் ஸ்ரீசிவாயை நம:
ஓம் ஐம், ஹ்ரீம் ஸ்ரீம் சிவசக்த்யைக்ய ரூபிண்ய நம:
ஓம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் லலிதாம்பிகை நம:"

என்று ஸஹஸ்ரநாமத்தின் கடைசி பத்து நாமாவளிகளை அந்த அர்ச்சகர் குரலை உயர்த்திச் சொல்லியபோது திருக்கழுக் குன்றத்து திரிபுரசுந்தரியிடமிருந்து விடை பெற்றுக் கொண்டு, ஸ்ரீபாஸ்கரராயபுரத்து ஆனந்த வல்லீச்வரியின் எதிரில் நின்று கண்விழித்தேன். அதுவரை அகக் கண்ணில் ஒளிவிளக்காக, மாசிலா மணியாக, தாயாக, தயாபரியாக, தலைவியாக, அரசியாக, உக்ரகோப காளியாக, மங்களையாக, யோகினியாக அகில உலகமும் தானாக, ஆனந்தமாகக் காட்சித் தந்தவள் அப்போது புறக்கண்களில் கசிந்த கண்ணீரில் கலந்து என்னைப் பரவசமடையச் செய்தாள்.



# 3. க்ஷேத்ரவர்ணனே

தேவியின் புகழைப் பாருக்குப் பறைசாற்றும் பல முக்கிய க்ஷேத்திரங்கள் உள்ளன. அவற்றில் சில இங்கே இடம் பெறுகின்றன. பரசுராம க்ஷேத்திரத்தில் செங்கனூர் பகவதி கோயில் விசேஷமாக உள்ளது. நீலாசலத்து காமரூப நாயகி போலவே தேவிக்கு தாய்மைக்கு உரிய நீர்மைக்கசிவு ஏற்படும் வியக்கத் தகும் தலம் இது. அவ்வப்போது நிகழும் இத் தெய்வீக நிகழ்ச்சியின் போது இங்கு மகோற்சவம்தான்.

அடுத்து கொடுங்கல்லூர் காளிதேவி மிகவும் பிரசித்தி பெற்ற பகவதி க்ஷேத்திரம். திருச்சூரிலிருந்து சுமார் இருபத்து ஐந்து மைல் உள்ள இத்தலத்து தேவியின் உக்கிரஹம் குறைய ஸ்ரீ சங்கரர் பிரதிஷ்டை செய்ததாக கூறப்படுகிறது. பெரிய உருவத்தோடு உட்கார்ந்த நிலையில் காட்சியருளுவாள் அன்னே.

சோட்டாணிக்கரை பகவதியைத் தெரியாதவர்கள் மலேயாளத்தில் இருக்க மாட்டார்கள். இது ஒரு பிரார்த்தனை தலம். ஜேஜே என்று எப்போதும் சந்நிதியில் கூட்டம்.

பழயனூர் பகவதியும் இப்படியே மிகவும் பிரபல மானவள்! தேவியின் மிக உக்கிர 'ப்ரத்யுங்கரை' அம்ச களே இந்த க்ஷேத்திரங்களில் இருக்கின்றன என்பர். அ ஹேமாம்பிகை என்னும் தேவி உறையும் ஒல

பகவதி க்ஷேத்திரத்தில் புராதனமானது. அன்னையின் இரு கைகளை மட்டுமே இங்கு தரிசிக்கிறோம்.

### வெயிலுகந்தம்மன்

திருச்செந்தூரில் உள்ள அம்மன் கோவில்: முருகனுக்கு சக்திவேல் அளித்து, பாண்டிய ராஜகுமாரிக்கு குதிரைமுகமும் நீக்கிய சக்தி. அன்னையின் அருளொளி பரப்பும் தோற்றம் ஆனந்தமயமாக இருக்கும். வேல் உவந்தாள் என்பதே இப்படி மருவியுள்ளது.

### சங்கரநாராயணர்—கோமதி

ஹரி ஹர க்ஷேத்திரமாக புகழுடன் விளங்கும் தலம் சங்கரநாராயணர் கோயில். இங்கு கோயில் கொண்டிருப்ப வள் கோமதி அன்னை. அம்பாள் தவக்கோலம் பூண்ட தலங்கள் சில. அவற்றில் இதுவும் ஒன்று. ‘ஆடிதபஸ் உற்சவத்தில் ஆயிரமாயிரம் ஜனங்கள் கலந்து கொள் கிறார்கள்.

### வேதாரண்யம்

‘சுந்தரி பீடம்’ என்று தேவி பீடங்களில் சிறப்பு கொண்டது வேதாரண்யம்: பரமசிவனின் சப்தவிடங்கத் தலங்களில் இதுவும் ஒன்று. நால்வராலும் தேவாரம் பாடல் பெற்றது இத்தலம். வேத நாயகி என்று புகழப்படு கிறாள் இங்கு இவ்வன்னை.

### திருக்கடவூர் அபிராமி

காலனையே தன் பக்தன் மார்க்கண்டேயருக்காகக் கடிந்த காலசம்ஹாரரும் அபிராமியும் வதியும் அழகு கொழிக்கும் கோயிலிது, அன்புடன் ஆராதித்த அபிராமி பட்டர் அன்னையின் அருள் பெற்ற தலம். அமாவாசையிலும் பூர்ண நிலவு காட்டி அபிராமி பட்டரை ஆண்டு கொண்டாள் இங்கு. அன்னையின் பேரில் பட்டர் அந்தாதி அருமை பிரசித்தமாக விளங்குபவள் தேவி அபிராமி.

### அம்பர் மாகாளம்

சோமாசி மாற நாயனாரின் சோம யாகத்துக்கு இறைவன் சண்டாள உருவத்தோடு எழுந்தருளி நேரிலே அவியைப் பெற்ற புனிதத்தலம். காளிதேவி அம்பன், அம்பராசுரன் என்ற அரக்கர்களைக் கொன்ற தோஷம் நீங்க இறைவனைப் பூசித்தனள். இங்குள்ள மோஹினி அம்மை மிக விசேஷ முடையவள். பூஜிப்பவர் கூட கையினால் தொடாது தூரத்திலிருந்து கோலால் ஆடை, மாலை முதலியன அணிவிப்பார். 'பயக்ஷயாம்பிகை' பயம் போக்குபவளாக நின்ற கோலமாகத தாமரை யாசனத்தில் கருணையோடு அருள் பாலிப்பாள். இத்தலம் பூந்தோட்டம் (மாயவரம் அறந்தாங்கி மார்க்கம்) ஸ்டேஷனுக்கு அருகில் உள்ளது.

### சமய புரத்தாள்

இது திருச்சி அருகில் உள்ள தமிழகத்து முக்கிய மாரி யம்மன் ஆலயம். பிரசித்தி பெற்றவள்: தசரத சக்கரவர்த்தி பூஜித்த விக்கிரஹம் என்று கூறப்படுகிறது. கண் கண்ட தெய்வம் இவ்வன்னை. உபாசனாசக்தியின் பலனை உடனுக் குடன்உணர்த்தும் கருணைமுகில்.

சிறந்த பக்தரான ஒருவர் தர்மகர்த்தாவாக இருந்த காலம். உற்சவம் சிறப்பாக நடக்கும்: யானை மட்டும் கோயிலுக்கு அப்போது இல்லை. ஆகவே பக்கத்து ஊர்களி லிருந்து வரவழைப்பது வழக்கம். என்ன காரணமோ அந்த வருடம் யானை வராது என்று கூறிவிட்டனர். பக்தர் தவித் தார். திருச்சி தெப்பக் குளத்து வீதியில் மேலும் கீழும் நடந்து கொண்டே கவலை தோய்ந்து காணப்பட்டார். ஒரு வியாபாரியான நண்பர், இதைக் கண்டவர் தாமே வாங்கித் தருவதாக கூறினாராம். அதற்கேற்றுப் போல் ஆச்சர்யமா குறைந்தவிலையில் கிடைத்ததாம் ஒரு யானைக் குட்டி.

கோயிலுக்கு மேளதாளத்தோடு யானையை செல்ல ஏற்பாடு நடந்தது. புதிதாகையா

மிரண்டால் என்னசெய்வது என்று இரண்டுதேங்காய் எடுத்து வரச் சொன்னுன்.பாகன் ஆனுல் எடுத்துவர மறந்துவிட்டனர். ஊர்வலம் தொடங்கி காவிரிப்பாலம் தாண்டியதும் யானை மிரளுவதைக் கண்ட பாகன் தேங்காய் கேட்டான்:தேங்காய் இல்லை. அன்னையின் அருளால் உடனே சாலை ஓரத்திலிருந்த மரத்திலிருந்து இரண்டு தேங்காய் விழுந்தது. யானைக்கு அதைக் கொடுத்தான். ஆயினும், அது அடங்காமல் குறுக்கே இறங்கி ஓடி விட்டது. கடைசியில் எவரும் வியக்கும் வண்ணம் அன்னையின் சந்நதியின் கொடி மரத்திற்கு அருகில் போய் நின்றதாம். முன் பின் தெரியாத புது யானை தானே கோயில் முன் வந்து நின்றதைக் கண்டவர் மெய்சிலிர்த் தனராம்.

இதைப்போலவே மற்ருெரு பக்தர் (திருச்சி அப்பாய் மளிகைக்காரர்) பிரதி வருடம் வைகாசி 1-ந் தேதி சிறப்பாக அபிஷேகம் செய்து அன்னதானம் முதலியனவும் செய்வது வழக்கம். கோயிலுக்கு எதிரேயுள்ள வாய்க்காலில் தண்ணீர்விட எவ்வளவோ கேட்டும் அதிகாரிகள் மறுத்து விட்டனர். பக்தர்கள் சிரமப் படுவார்களே என்று வருந்தினுர் அப்பக்தர். அன்னையின் அருளால் அன்று மழை விடாது பெய்து வாய்க்கால் நிரம்பி ஓடியதாம். குறையின்றி அன்னதானம் செய்தாராம். இன்றும் தொடர்ந்து இத்தரு மத்தை நடத்தி வருகிருர். இப்படி ஏராளமான அனுபவ அதிசயங்கள். பிரார்த்தனைக்குரிய சிறந்த தலம், சமயபுரத் தாளுக்கு கும்பாபிஷேகம் என்ருல் பணம் வேண்டுமே என்று கவலைப்படாமல் நடக்கும் கோயில் இது. அப்படி குவியும் நிதி. அன்பிஞல் கருணையிஞல் அடியார்களை ஆட்கொள்ளு பவள் ஆதிமகமாயி அம்மை சமய புர நாயகி.

மாகாளிக்குடி

இ...

...ரவிசமயபுரத்து மாரியம்மன் கோயிலுக்கு வெகு அருகில் ...ருவமயிக் குடி ' என்ற தலம் உள்ளது. இது விக்ரமாதித் ...கப்பட்ட விக்ரஹம் என்று கூறுகின்றனர்.

அமைதியான கிராமீய சூழ்நிலையில் அருமையான கோயில் இன்று சிதலமாக உள்ளது. ராஜராஜேச்வரியின் கோயில் இது என்று கூறுகின்றனர்.

## சிறுவாச்சூர்

திருச்சி—பெரம்பலூர் பாதையில் உள்ள பிரசித்தமான பிரார்த்தனைத் தலமிது. இங்கு முடியிறக்க வரும் குடும்பங்கள் அநேகம்.பலருக்கு குலதெய்வமாகவும் விளங்குகிறாள் அன்னை. இக்கோயில் திங்கள், வெள்ளி இரண்டு தினங்கள் மட்டுமே திறந்திருக்கும். மற்ற நாட்களில் மூடியே இருக்கின்றது.

இங்கு வந்து நீராடி, இங்கேயே மாவு இடித்து மாவிளக்கு போடுவர். மாவு இடிப்பதற்கு என்று ஆட்கள் இங்கு இருக்கின்றனர். தேவியின் சக்தி மிளிரும் சிறப்பான கோயில் இது.

## கோனியம்மன் (கோவை)

ஒவ்வொரு ஊரிலும் 'கிராமதேவதை' என்றும், எல்லைப்பிடாரி என்றும் சக்தியே வழிபடும் தெய்வமாயிருக்கிறாள். சில ஊர்களில் சிறப்புற்றும், பல இடங்களில் சாதாரணமாகவும் இவ்வழிபாடு இன்றும் நடைபெறுகிறது அக்காலத்தில் கோவை மாநகர் 'கோவன் புதூர்' என்ற கிராமமாக இருந்தது. அக்கிராம தேவதையாக கோனியம்மன் அமர்ந்து ஊரைக் காப்பாற்றுகிறாள். ஊர் ஜனங்களும் நன்றி பெருக்கோடு இவ்வன்னைக்கு பொங்கல் இடுவதும் அபிஷேகம் செய்வதும் வழக்கமாகியது. ஆரவாரமே தலைவிரித்தாடும் கோவையின் மத்தியில் அமைதியே உருவாக,காண்பவர் கருத்தை ஈர்க்கும் வண்ணம் 'அஞ்சேல்' என அபயம் கொடுத்து வீற்றிருக்கும் இ திருக்கோலம் மனத்தை விட்டகலாது. கோவை பாக்கியமே கோனியம்மன்; கோனியம்மனின் கோவை.

கருவாழைக் கரை

மாயவரத்துக்கு அருகில் வனதுர்க்கைகோயில் உள்ளது. ஒரு சமயம் மிகவும் உக்கிரமாக இருந்தது இக்கோயில். உக்கிரத்தைக் குறைக்க சந்நதிக்கு எதிரே குளம் ஒன்று வெட்டச் சொல்லி காமகோடி கருணைக் குரு ஆஞ்ஞாபித்தார். உக்கிரசக்தி, இன்று அனுக்கிரஹ சக்தியுடன் செயல் படுகிறது. இதைத் தாண்டி சுமார் நான்கு மைலில் 'கருவாழைக்கரை' என்ற சிற்றூரில் உள்ள இம்மாரிக்கு 'காமாட்சி' என்று பெயர். எழிலும் துடிப்பும் கொண்ட அன்புருவான அன்னை 'இவளை' ஆராதிக்கும் குடும்பம் பல. தினம் உச்சியில் 12-மணிக்கு சரியாக அபிஷேகம் ஆராதனை செய்வார்கள். யார் வந்தாலும் இந்நேரத்தில் மாற்றம் இல்லை. குறிசொல்லும் வழக்கமும் இங்கு உள்ளது. சிறிது தொலைவில் காவிரி அமைதியாக சிறு வாய்க்கால் போல கடலாட செல்கிருள். 'இங்கு காவிரியிலிருந்து நீர் சுமந்து வந்து அபிஷேகம் செய்கிறேன். தண்ணீர் (கிணற்றிலிருந்து) எடுத்து வைக்கிறேன்' என்று பெரும்பாலும் பிரார்த்தித்துக் கொண்டு பக்தி சிரத்தையுடன் அதை நிறைவேற்றுகின்றனர்.

தஞ்சாவூர் மாரி

தஞ்சையின் பெரிய கோயிலும் ப்ரும்மாண்டமான லிங்கத்திருவுருவும், பெரிய நாயகியும், ஷண்முக சுந்தரன் முதலியவர்களும் நந்தியம் பெருமானும் உலகிலுள்ள கலை ரசனை, பக்தி ரசனை, மிக்கோரை இழுக்கின்றனர் எனில், மாரியம்மன் பயம் காட்டி அடியாரை தன்னிடம் ஈர்த்துக் கொள்கிருள். பெரியம்மை போட்டியவர்கள் வரிசையாக பிராகாரம் முழுவதும் இருப்பார்கள். அவ்வளவும் அன்னையின் அருட் சக்தியில் சமனமாகிறது. சீதலாதேவி அஷ்டகம் படித்து வைசூரி பாதை குறைப்பதுபோல, அன்னை தஞ்சை [illegible]ரியைப் பிரார்த்தித்து குணம் கண்டவர் பலர். கண் குரு[illegible]வர்கூட கண் கிடைக்கப் பெற்ற கண்கண்ட தெய்வம். அருமை[illegible] அருளாலும், பிரபலத்தாலும் ஊரே

மாரியம்மன் கோயில் என்று வழங்கலாயிற்று. (முன்பு புன்னை நல்லூர் என்று கூறப்பட்டது) ஆவணிமாத திருவிழாவிலும் ஞாயிற்றுக்கிழமைகளிலும் கூட்டம் நெரிபடும்.

அலங்காரவல்லி

மூர்த்தி, தலம், தீர்த்தம் என்று மூன்றாலும் சிறப்பாக விளங்கும் தலம் ஹரித்துவார மங்கலம். 'அரதை பெரும் பாழி' என்று அன்று விளங்கிய இப்பதி இன்று 'ஹரித்துவார மங்கலமாக' மருவி வந்துள்ளது.

சிவத்தை அனவரதம் சிந்திப்பார்; சந்தனக் கட்டையை பொதி ஏற்றி வியாபாரம் செய்வார். வன்னிக்காடுகளின் வழியே செல்கிறார். ஆதவன் அரைவழி வந்து, உச்சிவேளையில் பெரிய குட்டை ஒன்றில் நீராடினார். வீபூதியைக் காணோமே என்று சந்தனக் கட்டையை எடுத்து அருகிலிருந்த பாறையில் தேய்க்கிறார். கல்லிலிருந்து இரத்தம் பீறிடவே துணுக்குற்றார். ஆட்களை அழைத்து ஆராய்ச்சி செய்து பார்த்தார்: அருமையான சிவலிங்கம் வெளிப் போந்தது. பாதாளேச்சவரர் என்று திருநாமம் சூட்டி அன்புடன் அழைத்தார். அழகிய கோயில் ஒன்றை உருவாக்கினார். நால்வரில் ஞானசம்பந்தப் பெருமான் காலினால் நடக்கவும் அஞ்சி, பரணை ஒன்று கட்டி அதிலிருந்து "பைத்த பாம்போடரைக் கோவணம் பாய் புலி" என்று பதிகம் பாடிய தலம் இது. நீடாமங்கலத்துக்கு ஏழாவது மைலில் உள்ள தலம் இது. இங்கு அம்மை அலங்கார வல்லி அருள் பாலிக்கிறாள்.

திருவாமாத்தூர் வட்டப்பாறையம்மன்:

விழுப்புரத்துக்கு அருகில் செஞ்சி ரோடில் 4மைல் தூரத்தில் உள்ளது. இரட்டைப் புலவரால் பாடப்பெற்ற தலம் இது. மாடுகளுக்கு கொம்பு முளைக்க அருளிய ச[illegible] புராண வரலாறு கூறும். இறைவனுக்கும் இறை[illegible] தனித்தனி கோயில் எதிரெதிரே உள்ளது.

"முத்தை வென்ற முறுவலாள்" கோயிலுக்கு தென்பக்கம் வட்டப்பாறை யம்மன் சந்நதி உள்ளது. சிக்கலான வழக்குகளில் ஊர் மக்கள் அன்னையின் சந்நதியில் சத்தியம் செய்யச் சொல்லித் தீர்ப்பு காண்பார்களாம். பொய் சத்தியம் செய்தால் பாறையிலிருந்து பாம்பு வந்து கடித்துவிடும் என்பது மக்கள் நம்பிக்கை.

### கோலியனூர் பிடலாயம்மன்

விழுப்புரம்—பாண்டி ரோட்டில் உள்ள கோயில் இது. இந்த வட்டாரத்து மக்களின் பிரார்த்தனைத் தலம் கோலியனூர். சக்தி வாய்ந்த மாரியம்மன் இவள். ஆள் உயரத்துக்கு பாம்புப் புற்று கோயிலுள் உள்ளது. அதில் பெரிய நாகங்கள் இருந்து பக்தர்கள் வைக்கும் பால், முதலியவற்றை அருந்துமாம். ஆடி வெள்ளி, தைவெள்ளி, யென்றால் அக்கம்பக்கத்து ஜனங்கள் திரண்டு வந்து தரிசனம் செய்யாமல் இருக்க மாட்டார்கள்.

### செங்கழுநீர் அம்மன் (புதுவை)

பாண்டிச்சேரியில் வீராம்பட்டணத்து கடற்கரை யோரம் கொலு வீற்றிருக்கும் இச் சக்தியும் சமய புரத்தாள் போல பக்தர்களைக் கவருபவள். மாசி மகம் உற்சவம் என்றால் மக்கள் வீராம்பட்டினம் செல்லாமல் இரார். அழகிய புராதனமான ஆலயம் ஆழியின் கரையிலே உள்ளது.

### பட்டீச்வரம் :

பிறப்பில் வேதியனாகவும், பதவியில் அமைச்சராகவும், குணத்தில் உயர்ந்தவராகவும், தவத்தில் சிறந்தவராகவும், தர்மத்திற்கு இருப்பிடமாகவும் விளங்கிய உத்தமர் ஐயன் என்று மக்கள் உணர்ந்த ஸ்ரீகோவிந்த தீக்ஷிதர். பக்தியில் திளைத்து அவர் ஆழ்ந்த தலம் பட்டீச்வரம். கும்பகோணத்துக்குத் தென்மேற்கே நான்கு மைல் தொலைவில் உள்ள அழகு அருமையும் அம்பிகைப் படிவம் இது. கும்பகோணத்து

(மங்களாம்பிகை) மந்திர பீடேச்வரியிடம் ஈடுபாடு கொண்ட வராக இருந்தாலும் பட்டீச்வரத்தில் பற்று மிகுந்து அன்னை யின் அருளிலே மூழ்கினர். அன்னை ஞானாம்பிகையாக தவ மிருந்து கருணைக்கடலான பரசிவத்தை மணாளனாக அடைந்த பதி இது.

திருமயிலை கற்பகம் (சென்னை)

இறைவி மயிலுருக் கொண்டு இறைவனை வழிபட்ட தலம் திருமயிலை என்னும் மயிலாப்பூர். கற்பகாம்பாள் கடைக்கண் நோக்கிற்கு ஆளாகும் பேறு பெற்றவர் பாக்கிய சாலிகள்: இறந்த பூங்கோதையையே உயிர் பெற்றுவர துணை செய்த கடைக் கண்ணையுடையவள் இவ்வன்னை. பாடல் பெற்ற பழம் பெரும்பதி.

மாங்காடு :

சென்னை பூந்தமல்லிக்கு அருகேயுள்ள அற்புதமான சக்திதலம் இது. ஆதிசங்கரரே 'அர்த்த மேருவை' இங்கு பிரதிஷ்டை செய்ததாகக் கூறுகின்றனர். தவத்தின் பயனாக எந்த பராசக்தி அடையப்படுகிறதாக வேத உபநிஷதங்கள் கூறுகின்றனவோ அந்த தவப் பயனான அன்னையே இங்கு ஐந்து பக்கமும் அக்னி சூழ ஒற்றைக் காலில் நின்று தவம் இயற்றுகிறாள். "ஒற்றைக் காலில் நின்று சாதிக்கிறான்" என்பது வழக்கு. அன்னை இவ்வாறு உலகம் உய்ய தவக் கோலம் பூண்டிருக்கிறாள்-பக்தர்களுக்கு காரியங்களை சாதித்துக் கொடுக்கிறாள்.

திருவேற்காடு :

கருமாரியம்மன் கோயில்-சமீபகாலத்தில் பிரபலமாகி ஞாயிறுதோறும் மக்கள் திரள் திரளாக கூடுகின்ற அ விளங்கும் அற்புத தலம் இது, பலன் கண்டவர் மீண்டும் செல்வது இயல்புதானே? சென்னையை க்ஷேத்ர மாக்கும் பதிகளில் இதுவும் ஒன்று

பெரியபாளையத்தாள்

"ஆத்தாளை எங்கள் அபிராமவல்லியை" என்று அபிராமி பட்டர் கூறியது போல் அகில உலகத்தாய் ஊருக்கு ஆத்தாளாக இருப்பதில் என்ன வியப்பு உள்ளது, பெரிய பாளையம் என்னும் ஊரைத் தெரியாத சென்னையும் அதன் சுற்றுப்புரத்து வாசிகளும் இல்லை எனலாம். "மகமாயி! தாயே! பெரியபாளையத்தாளே! 'பாடைக்கட்டி' எடுத்து வந்து போடுகிறேன், பொங்கலிடுகிறேன், இளநீர் கண் திறக்கிறேன்" என்று பலவிதமான பிரார்த்தனைகள் செய்யும் தலம் இது. எது பொய்த்தாலும் பெரியபாளையத்தாள் அருள் பொய்க்காது.

கனகதுர்க்கை

விஜயவாடாவில் கிருஷ்ணா நதி ஸ்நானமும், கனக துர்க்கையின் தரிசனமும் பரம பாவனம். சண்டிகாதேவியே இங்கு கோயில் கொண்டிருக்கிறாள். அன்னைக்கு வஸ்திரங்கள் ஏராளமாகப் பிரார்த்தனை செய்து கொண்டு அளிக்கின்றனர். அவைகளை ஏலத்தில் எடுத்து அன்னையின் நினைவாக உடுத்துவோரும் உண்டு. சிறு குன்றில் ரமணீயமான சூழ்நிலையோடு விளங்குகிறது துர்க்கை க்ஷேத்திரம்.

ஸ்ரீ சாரதாதேவி

சிருங்ககிரியின் ப்ரதானதேவி அன்னை சாரதாம்பாள். ஷண்மத ஸ்தாபனம் செய்த ஸ்ரீ சங்கரர் மண்டனமிச்ரரை வாதில் வென்று அன்னை ஸரஸ்வதியின் அவதாரமான சரஸ வாணி பின் தொடர வந்து கொண்டிருக்கிறார். திரும்பிப் பாராமல் செல்ல வேண்டும் என்று நிபந்தனை ஸ்ரீ சங்கரருக்கு விதிக்கிறாள் வாணி. கேட்டுக் கொண்டே வந்தவர் நூபுரத்து [illegible]ஓசை நிற்கவே திரும்புகிறார். அன்னை வாணி அங்கேயே நின்று [illegible]கிறாள். தக்கதொரு சூழலையே பராம்பிகை தேர்ந்[illegible]ருளமை[illegible]ாள். கர்ப்பமுற்று தினறும் தவளையொன்று [illegible]பம் தாங்காமல் தவிக்கின்றது. அதை, இயல்

பாக பகைக் குணம் கொண்ட பாம்பொன்று படமெடுத்து நிழலளித்து காக்கிறதைக் கண்டார். ஆனந்தமான துல்லிய படிக நீரோடும் துங்காவின் கரையில் வெள்ளைத் தாமரையில், வெள்ளைப் பணிபூண்டு, வெள்ளை உள்ளம் கொண்டோர் உள்ளத்தே விளங்கும் வாணிக்கு பீடம் அமைத்தார். புகழ் ஓங்கு பெரும் பீடமாக சிருங்ககிரி ஆல்போல் தழைத்து இன்று விழுது விட்டு வளர்ந்து ஞானதாகம், வேதாந்தப் பசி, தவவேட்கை கொண்டோரை தன் நிழலில் அருளுடன் அணைக்கிறது.

சுற்றிலும் இயற்கை. வனுந்தரமும் மலையும், ஆறும், அன்னையின் ஆலயமும், வித்யாரண்யர் என்ற வித்தக பேரருளாளரின் கோயிலும் கண்ணையும் கருத்தையும் கவரும்.

குருக்ஷேத்திரம்

குருக்ஷேத்ரம் மலைவாச ஸ்தலமாகிய சிம்லாவில் இருந்து டெல்லி செல்லும் மார்க்கத்தில் 'அம்பாலா' சந்திப்பின் வழியாக 112 கி. மீ தொலைவில் உள்ளது குருக்ஷேத்திரம். புராதன சிறப்பும் பெருமையும் கொண்டது இத் தலம். பாண்டவர்களுக்கும் துரியோனுதிகளுக்கும் இடையே நடைபெற்ற மகா பாரத யுத்தம் இங்கு தான் நடந்ததாகக் கூறுகிறார்கள். இவ்வூரில் அநேக நீர் நிலைகள் உள்ளன. அந்நிலைகளில் பல்லாயிரக்கணக்கான அழகிய செந்தாமரைப் பூக்களும் வெண் தாமரைப் பூக்களும் பூத்து நிரம்பிக் கிடக்கின்றன. இது காண வேண்டிய காட்சிகளில் அருமையான ஒன்றாகும். யுத்தத்தில் ஈடுபட்டு மாண்ட போர் வீரர்களே இப்படி மலர்களாக மலர்ந்திருப் பதாக அழகான கலா ரசனையோடு கூறப்படுகிறது.

இங்கு நீராட வேண்டிய முக்கிய தடாகமாகிய புஷ்கரம் தாமரை மலர்கள் நிறைந்து தாமரைக்குளமாகக் காட்சி யளிக்கிறது. தரிசிக்க வேண்டிய இறைவர் 'தானேச்வ மகாதேவ்' இறைவி ஸ்தாணுப் பிரியை! இது ஒரு பீடமாக விளங்குகிறது.

**சோமநாதம்.**

த்வாதச ஜோதிர்லிங்க க்ஷேத்திரத்தில் ஒன்ருன சோம நாதம் பிரபாச க்ஷேத்திரம் என தேவிக்குரிய படிவத்தில் புகழ் பெற்றது.சந்திரபாகா என்றும் இத்தேவியைக் கூறுவர். தக்ஷனுல் ஏற்பட்ட சாபம் நீங்க சந்திரன் உபாசித்த தலமாகக் கருதப்படுகிறது.

**ஜ்வாலமுகி :- பஞ்சாப்**

அம்பிகையின் நாக்கு விழுந்த இடமாகக் கூறப்படும் இத்தலத்து தேவி அருவுருவாக அக்னி ரூபமாக விளங்குகிருள். எந்தப்பொருளை நெருப்பில் போட்டாலும் அது அப் பொருளை தன்மயமாக்கி விடுகிறது. இது இன்றும் காணும் உண்மை. எப்பொருளையும் தன்மயமாக்கும் அக்னி வடிவம், அன்னையும் எவ்வுயிரையும் தன் மயமாக்குகிருள் என்று கூருமல் விளக்குகிறது இப்பதி. அக்னியின் ஜ்வாலைக்கு (தீநாக்குகள்) பூஜை நடக்கிறது. கர்ப்பகிருஹத்தின் பல இடத்தில் சுடர் விட்டு எரியும் தீயை இன்றும் காணலாம். தங்கக் கூரை வேய்ந்த இத்தலம் காங்கரா ஜில்லாவில் மலைகளின் இடையே விளங்கி பாரதத்தின் ஆத்மீகச் சுடர் கொழுந்து விட்டுத்தான் இன்றும் எரிகிறது என்பதை நினைவூட்டுகிறது.

இங்கேயேதான் வஜ்ரேச்வரியின் ஆலயமும் இருக்கிறது. பதான் கோட்டிலிருந்து பஸ்கள் இக் கோயில்வரை செல்லும்

**காச்மீரம்**

விவேகானந்தரை மிகவும் கவர்ந்தவள் அன்னை க்ஷீர பவானி. காச்மீரத்து ஸ்ரீநகரிலிருந்து பத்து, பதினைந்து மைல்கள் சென்று ' துலாமுலா ' என்ற இடத்தை அடைய லாம். நான்கு புறமும் ஜலத்தால் சூழப்பட்ட தீவின் மத்தி [illegible]ல் மரத்தடியில் உள்ளது ஒரு குளம். இங்குள்ள மண்டபத் குரவ[illegible] [illegible]ரீ சங்கரரும், பவானியும் அமைந்துள்ளனர். இத்தீர்த் அருமைய[illegible] தேவியாகக் கருதி பூஜை செய்கின்றனர்.

சிவப்பு, பச்சை, வெண்மை என்று இக்குளத்து நீர் தன்நிறத்தை அடிக்கடி மாற்றிக் கொள்ளும் என்கின்றனர்.

கருமையாகக் காணப்பட்டால் சம்பவிக்கும் கெடுதலைக் குறிக்கும் என்றும் நம்புகின்றனர்.

வைஷ்ணவி

ஜம்முவிலிருந்து 'காட்ரா' வரை பஸ் செல்லும். பிறகு நடந்து சுமார் பத்து மைல்கள் மலை ஏற்றம், பாணகங்கை என்ற சிற்ருறு ஓடுகிறது. குகைவாசியாக வைஷ்ணவி தேவி இங்கு உயர்ந்த இடத்திலிருந்து பாரதத்தைக் கண்காணிக்கிருள்.

சிறுவாயிலாக இருக்கின்ற நுழைவாயிலானதால் முதலில் தவழ்ந்துதான் உள்ளே செல்லமுடியும். நல்ல ஐதீகம்: அன்னையிடம் மண்டியிட்டு தவழ்ந்து, குழந்தை உள்ளத்தோடு தான் வரவேண்டும் என்பதற்குத் தகுந்த அத்தாட்சியுடன் கொலுவிருக்கிருள். தனக்கு அளிக்கப்படும் காணிக்கையில் ஒருபகுதியைப் பிரசாதமாக அளித்து அருளுடன் பொருளும் பெருக பக்தனை ஆசீர்வதிக்கிருள் அன்னை.

ஹரித்வாரம்:

மோக்ஷபுரிகளில் ஒன்ருன மாயாபுரி என்னும் ஹரித்வார் யாத்திரிகர்களின் மனதைக் கொள்ளை கொள்ளும் அழகுடன் விளங்குகிறது. அன்னை கங்காதேவியின் அரவணைப்பினுல் அது பேராதரவு பெற்றிருக்கிறது. மாலை நேரத்தில் அன்னை கங்கைக்கு இலையிலே கப்பல்போல் செய்து அதில் விளக்கு வைத்து புஷ்பங்களால் நிரப்பி 'ஹாரதி' பாடி தண்ணீரில் மிதக்க விடுவது இங்கு கண்கொள்ளாக்காட்சி. எளிய பிச்சைக்காரன் முதல் பெரிய பணக்காரன்வ இதை சக்திக்குத் தகுந்தவாறு செய்யாமல் இருப் கறையிலே ஆங்காங்கே புராணங்கள், கதை

பிரசாரம் செய்வதைக் கேட்கக் கூடியிருக்கும் ஜனங்களைப் பார்த்தால் இது பூலோகமா கைலாசமா என ஐயம் தோன்றும்.

### கேதாரம்

கேதாரத்தின் அன்னை உலகுக்கு வழிகாட்டும் அன்னையாக 'மார்க்க தாயினி' என்ற பெயருடன் விளங்குகிறாள். ஆறுமாதம் பனியினால் மூடியிருக்கும் கோயில். எளிதில் அடைய முடியாத ஒரு படிவம். ஒரு சிலரே இதைக் காணும் வாய்ப்பைப் பெறுகிறார்கள்.

### பத்ரிநாத்

நர-நாராயணர் தவமிருந்த புனிதமான பத்ரிகாச்ரமம் வைணவர்களுக்கும் சைவர்களுக்கும் பிரதானமாக விளங்குகிறது.

தவமியற்றும் நர நாரணர்களின் தவத்தைக் கெடுக்க இந்திரனால் தேவமாதர் பலர் அனுப்பப்பட்டனர். ஆனால் தெய்விகத் தவச்ரேஷ்டர் துடையைத் தட்டினாராம். அதிலிருந்து அதி ஸௌந்தர்யமான பெண் தோன்றினாளாம். வந்த அரம்பையர் வெட்கிச் சென்றனராம். அப்பெண் 'ஊரு' (தொடை) யிலிருந்து தோன்றியதால் ஊர்வசி என்று போற்றப்படுகிறாள்.

இப்படியே நேபாளத்திலும் இன்னும் பல பிரதேசங்களிலும் பராசக்தியானவள் பிரசித்தமாக விளங்கி அருள் பாலிக்கிறாள்.

[யாத்திரை செல்ல விரும்பும் பக்தர்கள் எமக்கு எழுதினால், எங்களாலியன்றவரை அவர்களுக்கு மேலும் பல விவரங்கள் கொடுத்து உதவத் தயாராயிருக்கிறோம்.]

இ
குரங்
அருமை

## பராசக்தி பீடங்கள்

| எ | தலம் | தேவியின் பெயர் |
|---|---|---|
| 1. | கொல்லாபுரம் | லக்ஷ்மி |
| 2. | மாதுரம் | ரேணுகை |
| 3. | துளஜாபுரம் | பவானி |
| 4. | கரவீரம் | மகிஷாஸுரமர்த்தினி |
| 5. | இங்குளே | ஜ்வாலமுகி |
| 6. | சாகம்பரி | பிரமரி |
| 7. | ஸ்ரீ ரக்ததந்திகை | துர்க்கை |
| 8. | விந்தியாசலம் | விந்தியாவசினி |
| 9. | காஞ்சி | அன்னபூரணி |
| 10. | மானஸ ஸரோவரம் | தாட்சாயணி |
| 11. | ஸ்ரீ சந்திரலே | கௌசிகி |
| 12. | நீலபர்வதம் | நீலாம்பிகை |
| 13. | ஸ்ரீ நகர் | சாம்புநதேஸ்வரி |
| 14. | நேபாளம் | ரகசிய காளி |
| 15. | மதுரை | மீனாட்சி |
| 16. | வேதாரணியம் | சுந்தரி |
| 17. | ஜலந்தரம் | திரிபுரமானினி |
| 18. | மகாசலம் | யோகேசுவரி |
| 19. | அயோத்தி | அன்னபூரணி |
| 20. | வைத்தியநாதம் | வகலே |
| 21. | மணித்தீபம் | புவனேஸ்வரி |
| 22. | ஸ்ரீ சைலம் | ஸர்வேசுவரி |
| 23. | புஷ்கரம் | காயத்திரி |
| 24. | அமரேசம் | சண்டிகை |
| 25. | பிரபாசம் | சந்திரபாகை |
| 26. | நைமிசம் | தேவி |
| 27. | பிருந்தாவனம் | குமாரி |
| 28. | திரிபுரா | திரிபுரசுந்தரி |
| 29. | சரவ சைலம் | விசுவமாதா |
| 30. | நந்திபுரம் | நந்தினி |
| 31. | நாகுலம் | நகுலேசு[illegible] |
| 32. | அரிச்சந்திரம் | சந்[illegible] |

| ஙீ | தலம் | தேவியின் பெயர் |
|---|---|---|
| 33. | ஸ்ரீ கிரி | சாரதை |
| 34. | பஞ்சநதம் | திரிசூலி |
| 35. | கடகம் | கடகேசுவரி |
| 36. | மகாகானம் | சங்கரி |
| 37. | மத்தியமாபீதம் | சர்வாணி |
| 38. | கேதாரம் | மார்க்கதாயினி |
| 39. | பைரவம் | பைரவி |
| 40. | கயை | மங்களை |
| 41. | குருக்ஷேத்திரம் | ஸ்தாணுப்பிரியை |
| 42. | விராடம் | அம்பிகை |
| 43. | காளிகட்டம் | ஜெயதுர்க்கை |
| 44. | விமலேசுரம | விசுவேசை |
| 45. | பிரயாகை | லலிதா |
| 46. | மகேந்திரம் | மகேந்திரி |
| 47. | காஷ்மீரம் | மகாதேவி |
| 48. | வஸ்த்ராபதம் | பவானி |
| 49. | அர்த்தகோடிகை | உருத்திராணி |
| 50. | அவிமுத்தம் | விசாலாட்சி |
| 51. | மகாலயம் | மகாபாகை |
| 52. | கோகர்ணம் | பத்திரகாளி |
| 53. | மந்திரகர்ணிகம் | பத்திரை |
| 54. | காமரூபம் | காமரூபிணி |
| 55. | உஜ்ஜையினி | மாகாளி |
| 56. | கமலாலயம் | கமலை |
| 57. | சகமண்டலம் | பிரசண்டை |
| 58. | குரண்டலம் | திரிசந்திரிகை |
| 59. | மாகோடம் | மகுடேஸ்வரி |
| 60. | மண்டலேசம் | சாண்டகை |
| 6[illegible] | காலஞ்சரம் | காளி |
| | குரவ[illegible]குகர்ணம் | தொனிபீடம் |
| | [illegible]குலமப[illegible]சுவரம் | தூலபீடம் |
| | [illegible]கயம் | பரமேச்வரிபீடம் |